

திருமகள்
நிலையம்

விஜயா

திருமகள் நிலையம் * என்னவென்று நான் சொல்ல - பாகம்-1 * முத்துலட்சுமி ராகவன்

# என்னவென்று நான் சொல்ல

பாகம் - 1

முத்துலட்சுமி ராகவன்

# என்னவென்று நான் சொல்ல?...

பாகம் - 1

முத்துலட்சுமி ராகவன்



திருமகள் நிலையம்
சுகான்ஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
பழைய எண்: 28, புதுஎண்: 13, சிவப்பிரகாசம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 24342899, 24327696
e-mail: enquiry@thirumagalnilayam.com

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | ஆகஸ்டு, 2011 |
| உரிமை | : | ஆசிரியருக்கு |

- Title : **ENNAVENRU NAAN SOLLA**
- By : **Muthulakshmi Raghavan**
- First Edition : August, 2011
- Paper : Book Print 11.6
- Total No. of Pages : 384

**விலை : ரூ. 170/-**

**திருமகள் நிலையம்**
சுகான்ஸ் அபார்ட்மெண்ட்ஸ்,
எண்: 13, சிவப்பிரகாசம் சாலை,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி: 24342899, 24327696
e-mail: enquiry@thirumagalnilayam.com

Typesetting : **RVK DESIGNERS,**
Chennai - 2.
Mobile: **9710329866**

*Printed at :* **NOVENA OFFSET PRINTING CO.,** Chennai - 5 ✆ 28446166, 28446891




***என் பிரியத்துக்குரிய வாசக.. வாசகிகளே!***

நீண்ட பக்கங்கள் உள்ள நெடிய கதையொன்றை எழுதுங்கள் என்று என்னிடம் பல வாசகிகள் கேட்டுக் கொண்டனர். அவர்களின் கோரிக்கைக்கு இணங்கி.. இந்த ஆயிரம் பக்க நாவலை எழுத ஆரம்பித்தேன்.

பக்கங்கள் அதிகமிருந்தாலும் இது கனமான நாவல் அல்ல.. மிக மிக.. லேசான நாவல்.. உங்கள் மனத்தை லேசாக்கும் நாவல்..

நான் அடிக்கடி என் வாசகிகளிடம் ஒரு கதையைச் சொல்வேன்.. நீங்கள் அனைவரும் அறிந்த கதைதான் அது.. கிடுகிடு பள்ளத்தாக்கில் ஒருவன் விழுந்து விடுவான்.. கடைசி நொடியில் மலையின் உச்சியிலிருக்கும் வேரைப் பற்றிக் கொண்டு தொங்குவான்.. அந்த வேர் அவனின் பாரம் தாங்காமல் அறுந்து கொண்டே வரும்.. அது இற்று அவன் பள்ளத்தாக்கில் விழுந்துவிடப் போகும் அந்த இக்கட்டான நேரத்தில் மலையுச்சி விளிம்பின் அடியிலிருக்கும் தேன் கூட்டிலிருந்து ஒரு துளி தேன் சொட்டும்.. மரணத்தின் விளிம்பில் இருக்கும் அந்த கடைசி நொடியில் அவன் அனைத்தையும் மறந்து அந்த தேனை சுவைப்பதற்காக நாக்கை நீட்டி.. தேனை சுவைப்பான்..

இன்றைய வாழ்க்கையும் இதைப் போன்ற இக்கட்டான நெருக்கடிகள் பலவற்றை அடுக்கடுக்காக தந்து கொண்டு தான் இருக்கிறது.. அப்படிப்பட்ட சூழலில் என் கதை அந்த ஒரு துளி தேனாக இருந்தால் அதைவிட சிறந்த விருது எனக்கு வேறொன்றும் இல்லை...

நான் என் கதைகளையும்.. கதாபாத்திரங்களையும் அந்த ஒரு துளி தேனாகவே படைத்து உங்கள் முன்

வழங்குகிறேன்.. இந்தக் கதையும் அதற்கு விதிவிலக் கல்ல..

என் கதைகளின் மற்ற கதாநாயகிகளைப் போல.. இந்தக் கதையின் கதாநாயகியும் உங்களில் ஒருத்தியாகவே வலம் வருவாள்..

அவளது மனம் கவர்ந்த நாயகனும்.. நீங்கள் விரும்பும் குணங்கள் உள்ள முழுமையான கதாநாயகனாக உங்கள் உள்ளத்தில் இடம்பிடிப்பான்..

இந்தக் கதையின் தலைப்பாக 'என்னவென்று நான் சொல்ல..?' என்ற தலைப்பை தேர்வு செய்தேன்..

மனம் சார்ந்த இனிமைகள் பலவற்றை வார்த்தை களால் நாம் வெளிப்படுத்த இயலாது... 'How to explain it...?' என்ற கேள்வியைத்தான்.. 'என்னவென்று நான் சொல்ல..?' என்று உங்கள் முன் வைக்கிறேன்..

*நீ சிந்துகின்ற சிரிப்பை...*
*சேகரிக்கும் என் தவிப்பை...*
*'என்னவென்று நான் சொல்ல..?'*

இது இந்தக் கதையில் வரும் தலைப்புக் கவிதைகளில் ஒன்று...

இப்போது புரிகிறதா.. நான் ஏன் இந்தக் கதையை 'என்னவென்று நான் சொல்ல..?' என்று கேட்டு உங்கள் முன் வைக்கிறேன் என்று..?

கவிஞராக இருந்த என்னை கதாசிரியை ஆக்கிய என் அன்புக் கணவர் திரு. தி. ராகவனுக்கு இந்த முதல் பாகத்தை அர்ப்பணிக்கிறேன்.

நட்புடன்,
முத்துலட்சுமி ராகவன்

# என்னவென்று நான் சொல்ல?...




*உன்னைத் தொட்ட காற்று...*
*என்னைத் தொட்ட நொடியை*
*என்னவென்று நான் சொல்ல...?*

கடலோரக் காற்று முகத்தில் படிய... கண்மூடி அதை ரசித்தாள் மாலினி... அதிகாலை நேரப் பேருந்து பயணமே சுகமான ஒன்று... அதில் ஜன்னலோரம் அமர்ந்து கொண்டு... காலை நேரக் காற்று முகத்தில் படிய ஜன்னல் கம்பிகளில் முகம் சாய்த்துக் கொள்வது அதைவிட சுகமான ஒன்று. இதில் கூடுதலாக கடலோரப் பாதையில் பேருந்து செல்ல... ஜன்னலோரம் தலை சாய்த்து கடலைப் பார்த்தபடி கடற் காற்றை முகத்தில் படியவிட்டுக் கொள்வது மிக மிக சுகமான ஒன்று.

காற்றில் கேசம் அலைபாய... கடல் காற்றை ரசித்தபடி சென்றுகொண்டிருந்த மாலினி... பக்கத்தில் இருந்த பாட்டி யின் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

''எங்கே கண்ணு போகிற?''

பதில் சொல்லாமல் புன்னகைத்தாள் மாலினி. மீண்டும் ஜன்னல்புறம் திரும்பி கடலை வேடிக்கை பார்க்க ஆரம்பித்து விட்டாள்.

''ம்ம்.. இந்தக் காலத்து பிள்ளைகள் எல்லாத்தில யும் விவரம்.. கேட்ட கேள்விக்கு பதிலும் சொல்லாமல் அதைக் குத்தமா எடுத்துக்கவும் விடாமல் சிரிச்சே மழுப்புது களே....'' பக்கத்து ஸீட் பாட்டி.. மாலினியை சிலாகித்துக் கொண்டாள்..

அதற்கும் பாட்டியைப் பார்த்து ஒரு சிரிப்பை உதிர்த்து வைத்த மாலினி... பதில் பேசாமல் ரசிக்கும் வேலையை மீண்டும் தொடர்ந்தாள்.

கடல் கண்ணுக்கு மறைய... லேசாக இளம் வெயில் அடிக்க ஆரம்பித்திருந்தது. சூடேயில்லாத இளம் வெயிலில் முகத்தைக் காட்டுவதும் பிடித்துப் போக.. மாலினி.. பழைய படி ஜன்னலில் சாய்ந்து கொண்டாள்..

''ஏன் கண்ணு.. வெயிலடிக்குதே... தள்ளி உட்காரேன்..'' மனம் கேளாமல் பாட்டி கூற... திரும்பிப் பார்த்து மீண்டும் சிரித்து வைத்தாள்.

'யார் இந்தப் பெண்? தனியாகப் போகுது.. எங்கே போகுதுன்னு கேட்டால் சிரித்து வைக்குது..'

பாட்டிக்கு அவளைப் பற்றி அறிய ஆர்வமாக இருந்தாலும் பிடி கொடுக்காத மாலினியிடம் பேசிப் பய னில்லை என்று விட்டு விட்டாள்.

''மார்த்தாண்டமெல்லாம் இறங்குங்க...'' பஸ்ஸின் நடத்துனர் உரத்த குரலில் கூறிவிட்டு... முதல் ஆளாய் இறங்கினார்..

''இதுதான் கடைசி ஸ்டாப்.. இறங்கவில்லையாம்மா..'' பாட்டி அக்கறையாய் வினவ...

''நான் பெட்டிகளையும்.. பைகளையும் தூக்கிக் கொண்டு இறங்கணும்.. அதனால கடைசியாய் இறங்க லாமுன்னு நினைக்கிறேன்.. நீங்க முதலில் இறங்குங்க பாட்டி...'' என்றாள் மாலினி.

''பரவாயில்லையே... இவ்வளவு நீளமாய் பேசிட் டாயே. எங்கே.. பேச முடியாத ஊமையோன்னு நினைத்து விட்டேன்..''

இறங்கும்போது மறக்காமல் ஒரு சொல் வீச்சை வீசிவிட்டு பாட்டி இறங்கிவிட்டாள். பக்கத்து ஸீட்டில் உட்கார்ந்து கொண்டு வந்தாலும்.. வம்பு பேச இடம் கொடுக்காத கோபம் அவளுக்கு.

பாட்டியின் பேச்சினால் எந்தவித பாதிப்பும் அடை யாமல் எழுந்து லக்கேஜ் வைக்கப்பட்டிருந்த இடத்தி லிருந்து தனது பெரிய பெட்டிகள் இரண்டையும் இழுத்து கீழே ஸீட்டில் வைத்தாள் மாலினி. குனிந்து காலடியில் இருந்த பெரிய டிராவல் பேக்கை தூக்கி தோளில் மாட்டிக் கொண்டு இரண்டு கைகளிலும் இரண்டு பெட்டிகளைத் தூக்கிக் கொண்டு கீழே இறங்கினாள்.

''எந்தா.. சேட்டா...'' என்று யாரோ கேரள பாஷையில் பேசிக் கொண்டு போக.. சுற்றிலும் பார்த்தாள்.

தலைக்கு குளித்து.. அடர்ந்து நீண்டு தொங்கும் முடியை விரிய விட்டு... நெற்றியில் சந்தனக் கீற்றுடன்... கல்லூரிக்கும் வேலைக்கும் கிளம்பிப் போய் கொண் டிருக்கும் இளம்பெண்கள் கண்ணில் பட்டனர்.

'பானு சொன்னது சரியாகத்தான் இருக்கு.. இவர்களைப் பார்த்தால்.. கேரளத்துப் பெண்கள் போலத்தான் இருக் கிறாங்க...'

மார்த்தாண்டத்தின் பக்கத்தில் இருந்த ஊரில் புதிதாக கட்டப்பட்டிருந்த மில்லில் வேலை கிடைத்திருக்கிறது என்று மாலினி கூறியபோது.. அவளுடைய வீட்டினர் அதை வரவேற்கவில்லை. பலமாக ஆட்சேபித்தனர்.

''சென்னையில் இருக்கிற பெண்.. கம்ப்யூட்டர் இன்ஜினீயருக்குப் படித்துவிட்டு கனடாவிற்கு பறந்து போய் வேலை பார்த்தால் அதை பெருமையாக சொல்லிக் கொள்ளலாம். மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் படித்து விட்டு எங்கேயோ கேரளா பார்டரில் இருக்கும் மார்த்தாண் டத்திற்கு போய் மில்லில் வேலை பார்த்தால் அதைப் பெருமையாகவா சொல்லிக் கொள்ள முடியும்? பேசாமல் சென்னையிலேயே வேலை தேடிக் கொள். மார்த்தாண்ட் மெல்லாம் போக வேண்டாம்..''

ஜானகிராமன் சத்தம் போட்டார். அவருடைய கவலை அவருக்கு. ரிட்டயர் ஆவதற்குள் பெண்ணை ஒரு நல்ல இடத்தில் திருமணம் செய்து கொடுத்துவிட்டால் கடமை யைச் செய்த திருப்தி கிடைக்குமே என்று அவர் யோசித்தார்.

அவருடைய மனைவி காவேரிக்கோ வேறு ஒரு கவலை. ஆண் ஒன்று.. பெண் ஒன்று.. என்று அருமை யாக இரண்டு குழந்தைகளைப் பெற்று ஆசை ஆசையாக வளர்த்தும்.. மூத்தவனாகிய ரஞ்சித்.. பாசம் என்றால் கிலோ என்ன விலையென்று கேட்கிறானே என்று மனதிற்குள் கிடந்து மறுகிக் கொண்டிருந்தாள் அவள்.

திருமணம் ஆகும் வரை அம்மா அப்பா தங்கை யென்று குடும்பத்தின் மீது பாசமாக இருந்தவன்.. திருமணம் முடிந்த ஒரே நாளில் மனைவியின் முந்தானையைப் பிடித் துக் கொண்டு தனிக்குடித்தனம் போகத் தவித்துக் கொண் டிருக்கிறானே என்று மனம் கலங்கினாள் காவேரி.

வெடரினரி டாக்டருக்குப் படிக்க வைத்து.. வேலை யும் வாங்கிக் கொடுத்து.. திருமணமும் செய்து வைத்த பெற்றவர்களை கை கழுவப் பார்ப்பவனை... மகளின் திருமணத்தைக் காரணம் காட்டி தனிக்குடித்தனம் போக விடாமல் நிறுத்திக்கொண்டிருந்தாள் அந்தத் தாய்.



''உன்னைக் கையெடுத்து கும்பிடுறேண்டா ரஞ்சித்.. உன் தங்கைக்கு அண்ணனாக இருந்து அவள் கல்யா ணத்தை மட்டும் நடத்தி வைத்து விடு. அதற்குப் பின்னால்.. உன் பெண்டாட்டியின் விருப்பப்படி நீ தனிக்குடித்தனம் போ. நான் தடுக்க மாட்டேன். அதுவரை பொறுத்திருடா மகனே...''

''ஏம்மா.. எதற்கெடுத்தாலும் அவள் மேல் பழிபோட் டால் என்ன அர்த்தம்.. ராதிகா பாவம்.. வாயே திறப்ப தில்லை...''

'அது சரி.. எங்கள் முன்னால் அவள் ஏன் வாயைத் திறக்கப் போகிறாள்.. அதுதான் அவள் சாவி கொடுத்த வுடன் வந்து எங்களிடம் ஆடித் தீர்க்க நீ இருக்கிறாயே...'

மனதிற்குள் குமைந்து கொண்டு வெளியில் மகனிடம் மன்றாடுவாள் காவேரி.

''அவள் தங்கம்னு எனக்கும் தெரியும்டா ரஞ்சித்.. நான் அவளைக் குறை சொல்வேனா.. உனக்கிருக்கிறது ஒற்றை தங்கைடா.. அவளுக்கு ஒரு கல்யாணத்தை பண்ணி வைப்பது உன் கடமையில்லையா?''

மகனின் மனதில் படியும் வண்ணம் உருவேற்றித்தான் வைப்பாள் காவேரி. ஆனால்.. பகலில் தாயின் வார்த்தை களுக்கு பூம்பூம் மாடு போல தலையாட்டுபவனை இரவில் தலையணை மந்திரத்தை ஓதி தன் வசப்படுத்திக் கொள் வாள் ராதிகா.

''அம்மா... கல்யாணமுன்னா அவ்வளவு ஈஸியான விஷயமா? நான் வேலைக்குப் போக ஆரம்பித்து ஆறு வருடங்கள்தான் ஆகின்றன.. ராதிகாவின் கல்யாணத்திற்கு பொறுப்பேற்றுக் கொள்ள என்னால் எப்படி முடியும்?''

'மகராசி.. ஓதி விட்டாளா..'

காலையில் எழுந்தவுடன் கையில் காபித் தம்ளருடன் வந்து நின்று பேசும் மகனைப் பார்த்தபடி எரிச்சலுடன் மனதிற்குள் பல்லைக் கடித்துக் கொள்வாள் காவேரி.

''நீ சொல்வது நிஜம்தாண்டா ரஞ்சித்.... உன் படிப்புக்கும் வேலைக்கும் செலவழிக்காமல் இருந்திருந்தால்.. ராதிகாவின் பெயரில் கல்யாணத்திற்கு என்று ஒரு தொகையைப் போட்டு வைத்திருக்க முடியும். பெண்ணை உனக்குப் பிடித்துப் போய்விட்டது என்பதற்காக எங்களின் கைப்பணத்தைப் போட்டு உன் கல்யாணத்தை நடத்தி வைக்காமல் இருந்திருந்தால் ராதிகாவிற்கென்று நகைகளைச் சேர்த்து வைத்திருக்க முடியும். இது இரண்டும் உன் எதிர்காலத்திற்காக என்று பார்த்து நாங்கள் கணக்குப் பார்க்காமல் செலவழித்து விட்டோம் ரஞ்சித். இப்போது ராதிகாவிற்கு என்று வரும்போது எங்கள் கை வறண்டு விட்டது. அதனால்தான் அண்ணன்காரன் என்ற முறையில் உன் கடமையைச் செய்யச் சொல்கிறேன்..''

காவேரியின் மறைமுகத் தாக்குதலை உள்ளேயிருந்து கேட்டுக் கொண்டிருக்கும் ராதிகா, கோபத்தில் கொந்தளிப்பாள்.

''உங்க அம்மா என்னை வெறும் கையுடன் வந்தவள்னு குத்திக் காட்டுகிறாங்க.. இதைக் கேட்டுக் கொண்டு சும்மா வருகிறீங்களே..''

''என்னை வேறு என்னதான் செய்யச் சொல்கிற ராதிகா... அவங்க கேட்கிற கேள்விகள் எல்லாம் நியாயமாகத்தானே இருக்கு..''

''அப்போ.. நான் அநியாயமாய் பேசுகிறேனா?''

''நான் அப்படிச் சொன்னேனா?''

''வேறு எப்படிச் சொன்னீங்க.''



''என் படிப்பிற்கும் வேலைக்கும் கல்யாணத்திற்கும் என் வீட்டில் லட்சக்கணக்கில் பணத்தை செலவு செய்தது நிஜம்...''

''அவங்க கடமையைத்தானே அவங்க செய்தாங்க?''

''அந்தக் கடமையைத்தானே என்னையும் அவங்க செய்யச் சொல்றாங்க?''

''தங்கையின் விஷயத்தில் மட்டும் முந்தானை முடிச்சின் பிடியிலிருந்து வெளிப்பட்டு நிமிர்ந்து நிற்கும் கணவனை வளைக்க முடியாமல் இயலாமையுடன் கோபப் படுவாள் ராதிகா.




*உன் முகம் பார்த்தபோது...*
*என் வார்த்தை மறந்த நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

**மா**ர்த்தாண்டம் பஸ் நிலையம் பெரியதாகவுமில்லாமல் சிறியதாகவுமில்லாமல் அளவாக இருந்தது. அங்கிருந்த பயணிகள் அமரும் சிமெண்ட் பெஞ்சில் பெட்டிகளை வைத்து அதன் மேல் டிராவல் பேக்கை வைத்த மாலினி.. செல்போனை எடுத்து சசிரேகாவின் எண்களை அழுத்தினாள். மறுமுனையில் சசிரேகாவின் குரல் கேட்டது.

''எங்கிருக்கிறாய் மாலினி?''

''மார்த்தாண்டம் பஸ் ஸ்டாண்டில்..''

''ஓ.. வந்துவிட்டாயா?''

''ஆமாம் சசி.. வந்துவிட்டேன்..''

''வந்து ரொம்ப நேரமாகிவிட்டதா?''

''ஜஸ்ட் ஃபைவ் மினிட்ஸ்...''

''நீ அங்கேயே இரு.. காரை அனுப்பி வைக்கிறேன்..''

''உனக்கு எதற்கு சிரமம் சசி... நீ அட்ரஸை சொல்லு.. நான் ஒரு ஆட்டோவைப் பிடித்து வந்துவிடுகிறேன்..''

''வேண்டாம்.. வேண்டாம்.. என்னை நம்பி.. சித்தப்பா உன்னை என் வீட்டிற்கு அனுப்பி வைத்திருக்கிறார். உன்னை ஆட்டோவில் வரவைத்தது தெரிந்தால் என்னை உண்டு இல்லையென்று பண்ணிவிடுவார்...''

''நான் சொன்னால்தானே..''

''நீ சொல்லாவிட்டாலும்.. சித்தப்பா விசாரிக்கும் போது நான் சொல்லிவிடுவேனே...''

''பெரிய உண்மை விளம்பி...''

''அப்படித்தான்னு வைத்துக் கொள்..''

''முடிவாய் என்னை என்னதான் செய்யச் சொல் கிறாய்?''

''கார் அனுப்புகிறேன்.. வந்து சேர்..''

இவள் எப்போது கார் அனுப்பி எப்போது வீடு போய்ச் சேர்வது.. என்ற சலிப்புடன் அதே பெஞ்சில் அமர்ந்து பஸ் நிலையத்தின் பரபரப்பை வேடிக்கைப் பார்க்க ஆரம்பித் தாள் மாலினி.

''என் பேச்சைக் கேட்காமல்.. மார்த்தாண்டத்திற்கு போயே தீருவேன்னு.. ஒற்றைக்காலில் நிற்கிறாய்..''

''இல்லையேப்பா.. இரண்டு கால்களிலும்தான் நின்றுகொண்டு இருக்கிறேன்.''



''விளையாட்டுப் பேச்சுப் பேச இது நேரமில்லை மாலினி..''

''சரிப்பா..''

''நீ ஆசைப்படுகிறாய் என்பதற்காக.. அத்துவானக் காட்டுக்கெல்லாம் உன்னைத் தனியாக அனுப்பி வைத்து விட முடியாது..''

''அது அத்துவானக் காடில்லைப்பா.. மார்த்தாண்டம்..''

''இப்போதுதானே சீரியஸாகப் பேசச் சொன்னேன்?''

''சரிப்பா..''

''அங்கே லேடீஸ் ஹாஸ்டல் இருக்குன்னு சொல்கிற..''

''ஆமாம்பா..''

''அப்படியெல்லாம் உன்னை விட்டுவிட முடியாது..''

''என்னப்பா.. இப்படிச் சொல்றீங்க?''

''என் ஒன்றுவிட்ட அண்ணனின் மகள் சசிரேகா மார்த்தாண்டத்தில்தான் வாழ்க்கைப்பட்டிருக்கிறாள்..''

''அவளிடம் கேட்டு... நல்ல ஹாஸ்டலாய் பார்க்கச் சொல்லப் போறீங்களா?''

''இல்லை.. அவள் வீட்டிலேயே தங்கிக் கொள்ளு சொல்கிறேன்..''

ஜானகிராமன் தீர்மானமாய் சொன்னதும் மாலினி, காவேரியைப் பார்த்தாள். அவள் கவலையுடன் ஜானகி ராமனைப் பார்த்தாள்.

''ஏங்க.. கூடப் பிறந்த அண்ணனே பந்த பாசமில் லாமல் விலகிப் போகிற இந்தக் காலத்தில... சுற்றி வளைத்து அண்ணன் மகள்னு உறவு கொண்டாடிக்கிட்டு.. சசியின்

வீட்டிற்கு மாலினியை அனுப்பி வைப்பது சரியாய் வரும்னு எனக்குத் தோணலைங்க..''

''ஏண்டி.... அவள் பத்தரை மாத்துத் தங்கம்டி..''

''நான் என்ன.. அவள் பித்தளையின்னா சொன்னேன்? அவள் காதல் கல்யாணம் பண்ணிக் கொண்டவள். உங்களுடைய ஒன்றுவிட்ட அண்ணன்னு சொல்லிக்கொள்ளும் சசிரேகாவின் அப்பாவை ஆக்சுவலாய் நீங்க மூன்று விட்ட அண்ணன்னுதான் சொல்லிக்கணும்.. அவ்வளவு தூரத்து சொந்தம்.. அதோடு அவர் அவ்வளவாய் வசதியில்லாதவர். ஆனால், சசிரேகாவின் மாமனார் வீடு வசதியில் பெரிய இடம்னு கேள்விப்பட்டேன். அங்கே சசியைப் பெத்தவங்களுக்கே அவ்வளவாய் மதிப்புக் கிடைக்காதாம். இதில்.. வீட்டோடு தங்கியிருக்க.. உறவுக்காரியாய் நம்ம பொண்ணு போய் நின்னா.. அவங்க வீட்டில் என்ன மதிப்புக் கிடைக்கும்?''

''பேசி முடிச்சிட்டாயா.. ஏண்டி.. வாயைத் திறந்தால் மூடவே கூடாதுன்னு வரம் வாங்கிப் பிறந்திருக்கிறாயா.. இப்படி மூச்சுவிடாமல் பேசற?''

''யதார்த்தத்தை எடுத்துச் சொன்னால் உங்களுக்கெல்லாம் இப்படித்தான் பகடி பேசத் தோன்றும்.''

''போதும்டி.. சசியின் வீடு பெரிய பணக்கார வீடு... அவங்க பணத்தில் மட்டும் பெரியவங்க இல்லை.. அவங்க குடும்பமும் பெரியது.. அங்கே நம்ம பொண்ணு தங்கி வேலை பார்ப்பது அவளுக்கு பாதுகாப்பு...''

''இருந்தாலும்.. விருந்தும் மருந்தும் மூன்று நாள்ங்கிறது பழைய காலத்தில் சொல்வது.. இப்போது மூன்று மணி நேரம் இருந்தாலும் அதிகம். அப்படியிருக்க.. நம்ம பொண்ணு விருந்தாளியாய் போய் வருஷக் கணக்கில்



அங்கே தங்குவதா? இது உங்களுக்கே கொஞ்சம் அதிகப்படியாய் தோன்றவில்லையா?''

''வருஷக்கணக்கில் யார் விட்டு வைக்கப் போகிறது?''

''பின்னே...''

''நல்ல இடத்தில் மாப்பிள்ளை அமையும் வரை நம் மகள் ஆசைப்படி வேலை பார்க்கட்டும்.. கல்யாணம் நிச்சயமானதும் வேலையை விடச் சொல்லிவிடலாம்..''

காவேரிக்கும் இது சரியான யோசனையாய் பட.. அவள் அரை மனதுடன் சம்மதித்தாள்.

பக்கத்து வீட்டு பானுவோ.. இன்னும் ஒரு படி மேலே போய் மார்த்தாண்டத்தைப் பற்றி வரைபடமே தயாரித்து தந்தாள்.

''நாகர்கோவிலில் இருந்தே மலையாளம் பேசுகிற மக்கள் ஆரம்பித்து விடுவார்கள் மாலினி.. அவர்கள் பேசும் தமிழே ஒரு மார்க்கமாய் இருக்கும்..''

''உன்னைப் போலவா?''

''ஊஹூம்.. உன் அண்ணியைப் போல..''

''ஏண்டி.. கிளம்புகிற நேரத்தில் உன் வீட்டுக் கலவரத்தை வெடிக்க வைக்கப் பார்க்கிற... அவங்க காதில் விழுந்துவிடப் போகுது.. வீணாய் வம்பு வந்துவிடும்... பேசாமலிரு..''

''இல்லாட்டியும்.. உன் அண்ணி வம்பு வளர்க்காத ஆள்தான்.. அதுதான் வகையாய் அமைதியின் சிகரமாய் உன் அண்ணன் மாட்டியிருக்கிறாரில்ல.. இது வெளுத்துக் கட்டுது..''

''சும்மாயிரு பானு..''

''இப்படிச் சொல்லிச் சொல்லியே என்னை அடக்கி வைத்தே.. நீ மட்டும் வாயைத் திறக்காமல் இருந்திருந்தால்.. உன் அண்ணனை கணக்குப் பண்ணி நான் உன் அண்ணி யாக வந்திருப்பேன்.. நீ சொன்னாய்ன்னு அடக்கி வாசித் தேன். கடைசியில் காத்திருந்தவள் காதலனை நேற்று வந்தவள் தள்ளிக் கொண்டு போய்விட்டாள்..''

''ச்சீ.. அசிங்கமாய் பேசாதேடி...''

''என் கவலை எனக்கு... யாருக்குடி... இப்படி வாய் பேசாத வெடரினரி டாக்டர் மாப்பிள்ளையும்... பயந்து நடுங்கும் மாமியாரும்.. சித்தர் போல இருக்கும் மாமனாரும்.. ஒதுங்கிப் போகும் நாத்தனாரும் கிடைப்பார்கள். கொடுத்து வைத்த மகராசி... அவளுக்குப் போய் இவ்வளவும் கிடைத் திருக்கு...''

''ஊஹூம்.. நீ இன்றைக்கு ஒரு முடிவோடுதான் வந்திருக்கிறாய்.. கிளம்பு.. கிளம்பு..''

''நான் கிளம்புவது இருக்கட்டும்.. நீ எப்போது கிளம்பப் போகிறாய்?''

''நாளை மறுநாள்..''

''அடுத்த நாளே போய் வேலையில் ஜாயின் பண்ண வேண்டுமா?''

''இல்லை.. ஒரு நாள் தள்ளித்தான் போவேன்..''

''புது இடம்.. பார்த்துப் பழகு...''

''ம்ம்.. நீ இதைச் சொல்கிறாய்.. ஆனால்.. அண்ணி இதைப் போல் ஒரு வார்த்தை.. வாயைத் திறந்து சொல்ல வில்லை பானு..''

''நீயேன் எதிர்பார்க்கிற?''



''எதிர்பார்க்காமல் எப்படி இருக்க முடியும்டி.. நானென்ன அண்ணனின் பணத்தையா எதிர்பார்க்கிறேன்? அவரின் பாசத்தைத்தான் எதிர்பார்க்கிறேன். அதையும் அவங்க உரிமையில் நான் பங்கு போட வருகிறேன்னு ஜாடையாய் சொல்லிட்டாங்க. நானும் அதிகமாய் அண்ண னிடம் பேசுவதைக் குறைத்துக் கொண்டேன். இப்போது வெளியூருக்கு வேலைக்குப் போகிறேன். இப்போதுகூட என்னிடம் பாசமாய் நான்கு வார்த்தைகள் பேசக்கூடாதா?''

''விடேன்டி.. பாசத்தைப் பற்றி அவருக்கென்ன தெரியும்? வேஷத்தைப் பற்றி வேணும்னா தெரியும். அவர் ஒரு பிறவின்னு நீ அவரைப் பற்றி இவ்வளவு தூரம் ஏங்கிப் பேசுகிற. உன்னை என்னதாண்டி செய்வது..''

பால்ய காலம் முதல் பழகி வரும் தோழி உரிமையுடன் கண்டித்தாள். ஆனாலும் மாலினியின் மனம் ஆறவில்லை. மழைக்கு ஏங்கும் சாதகப்பட்சி போல அண்ணனின் பாசத் திற்காக அவள் மனம் ஏங்கியது.

மனதைச் சமாதானப்படுத்திக் கொள்ள முயன்றபடி அவள் பெட்டிகளில் துணிகளை அடுக்கிக் கொண்டிருந்த போது...

''மாலினி...'' என்ற ரஞ்சித்தின் குரல் கேட்டது.

''அண்ணா...'' என்று உற்சாகமாக எழுந்தாள் மாலினி.

''இந்தாம்மா...''

ரஞ்சித் அவளிடம் சில பிளாஸ்டிக் பைகளை நீட்டி னான். அவள் திகைப்புடன் வாங்கிக் கொண்டாள்.

''என்ன அண்ணா இது?''

''வேலைக்குப் போகப் போகிறாய். அதனால் கொஞ்சம் புதிதாய் சுடிதார் செட்டுக்களை எடுத்தேன். பிடித்திருக்கிறதா?''

''பிடித்திருக்கிறது..''

''பார்க்காமலேயே சொல்கிறாயே...''

''இதைப் பார்க்க வேண்டிய அவசியமேயில்லை அண்ணா.. நீங்கள் வாங்கிக் கொடுப்பது எதுவாக இருந் தாலும் எனக்கு அது உயர்வான ஒன்றுதான்..''

கண்ணீர் மல்க... பாசத்தில் கரைந்த தங்கையைக் கண்டு பாகாய் உருகிப் போனான் ரஞ்சித். தங்கையை லேசாய் அணைத்து அவளது உச்சந்தலையில் முத்தமிட் டான்.

''இப்படியெல்லாம் நடிக்க எனக்குத் தெரியாது.. என்னமாய் மாய்மாலம் பண்ணி கண்ணில இருந்து தண்ணி யைக் கொட்டுறா உங்க தங்கை. அப்பப்பா.. இவளுக்கு ஊர்வசி அவார்டெல்லாம் பத்தாது. ஆஸ்கார் அவார்டு தான் தரணும்..'' முகவாயை தோள்பட்டையில் இடித்துக் கொண்டு ராதிகா.. தனிமையில் கணவனிடம் புலம்பினாள்.



*நீ பார்த்த பார்வை...*
*எனக்கு உணர்த்திய செய்தியை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

நேரம் நகர்வதை உணர்ந்தவளாய்... லேசாக நகம் கடித்தாள் மாலினி. பேசாமல் ஒரு ஆட்டோவைப் பிடித்துப் போய் விடலாம். ஆனால்... சசிரேகா அவ்வளவு தூரம் வற்புறுத்தும்போது அவள் பேச்சை எப்படி மீறுவது என்ற யோசனையாகவும் அவளுக்கு இருந்தது.



ரஞ்சித்கூட கவலைப்பட்டான். காவேரியிடம்... ஒன்றிற்கு பத்து முறை சசிரேகாவின் வீட்டைப் பற்றி விசாரித்தான்.

''ஏம்மா.. அவங்க மாமியார் வீட்டுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்.. அங்கே போய் மாலினி தங்குவது சரியாய் வருமா?''

''இதையேதான் நான் உன் அப்பாவிடம் கேட்டேன். என்னை வாயை மூடுடின்னு சொல்லிவிட்டார்.. நீயாவது கேட்டுப் பாரு...''

கணவன்.. அவனுடைய தங்கையின் மேல் அதிகமான பாசத்தைக் காட்டுவதைப் பொறுத்துக் கொள்ள முடியாத ராதிகா, தாய்க்கும் மகனுக்குமான உரையாடலில் குறுக் கிட்டாள்.

''ஏங்க.. பெத்தவங்களுக்கு தெரியாத யோசனை யையா நீங்கள் சொல்லிவிடப் போகிறீங்க.. அவங்களுக் குத் தெரியாதா.. அவங்க பெண்ணிற்கு எது நல்லது.. எது கெட்டதுன்னு. நமக்கு ஏன் இந்தப் பேச்சு... நீங்க உள்ளே வாங்க...''

மாலினிக்கும் ரஞ்சித்திற்கும் எந்தவித உறவுமே இல்லாதது போலவும்.. அவளுடைய நலனை ஜானகி ராமனும் காவேரியும் பார்த்துக் கொள்வார்கள் என்றும் பேசிவைத்த ராதிகாவை எரித்துவிடுவது போல பார்த்தாள் காவேரி.

'கடன்காரி.. என்னவோ.. தெருவில் நடந்து போகிற வளின் மேல் இவள் புருஷன் அக்கறை காட்டிவிட்டது போல என்னமாய் ஸீன் போடுகிறாள். அண்ணன்காரன்.. தங்கைக்கு ஆதரவாய் ஒரு வார்த்தை வாயைத் திறந்து பேசிவிடக்கூடாதா?'

மாமியாரின் பார்வையை லட்சியம் செய்யாமல் கணவனை ராதிகா முறைக்க.. அவன் பதிலுக்கு முதல் முறையாய் மனைவியை பதிலுக்கு முறைத்தான்.

''நீ கொஞ்சம் பேசாமல் இருக்கிறாயா ராதிகா.. உனக்கு எந்த நேரம் எதைப் பேச வேண்டுமென்று தெரியாது. என் தங்கையின் மேல் எனக்கு அக்கறை இருக்கக் கூடாதா.. பெத்தவங்களுக்கு ஈக்குவலா கூடப்பிறந்த அண்ணனுக்கும் பொறுப்பும் பாசமும் இருக்கு. நீ உன் வீட்டில் நான்கு பெண்களுடன் பிறந்தவள்.. அக்கா, தங்கை பாசத்தைப் பற்றி உனக்குத் தெரியும்.. அண்ணன், தங்கை பாசத்தைப் பற்றி என்ன தெரியும்?''

இதுவரை அவளுடைய பேச்சுக்கு மறுபேச்சு பேசியறியாத கணவன்.. முதன்முறையாக எதிர்பேச்சு பேசவும், ராதிகா பதுங்கினாள்.

'சும்மாவே இவருக்கு தங்கையின் மேல் பாசம் பொங்கி வழியும். இதில் இவள் வேறு தூரம் தொலைவு போகிறேனென்று கிளம்புகிறாள். அணை கட்டி வைத்த பாசம் உடைத்துக் கொண்டு வருகிறது. நாம் அடக்கி வாசிக்காவிட்டால் தொலைந்தோம்' என்று எண்ணியவளாய் ஏதோ வேலையிருப்பது போல் அறைக்குள்ளே போய்விட்டாள்.

காவேரிக்கு கண்கள் கலங்கிவிட்டன. மகனின் மனதில் பாசம் முற்றிலும் வற்றிவிடவில்லை என்ற உண்மை அவளுக்கு உயிர் கொடுத்தது.

ரஞ்சித் எதுவுமே நடக்காதது போல் ஜானகிராமனிடம் தன் ஆட்சேபத்தை தெரிவித்தான்..

''சசிரேகாவே நமக்கு தூரத்து சொந்தம் அப்பா.. இதில் காதல் கல்யாணம் வேறு பண்ணியிருக்கிறாள். அவளுடைய



மாமனார் வீட்டிற்கும் அவள் பிறந்த வீட்டிற்கும் அவ்வளவு சுமுகமான உறவு இல்லை. இந்த லட்சணத்தில் நம்ம மாலினியை எந்த தைரியத்தில் அவள் வீட்டில் தங்க வைக்க நினைக்கிறீங்க?''

''சசியிடம் மார்த்தாண்டத்தைப் பற்றி விசாரிக்கும் போது.. அவளே.. என் வீட்டில் தங்கை தங்கிக் கொள்ளட்டும் சித்தப்பான்னு சொன்னாள்டா..''

''அவள் சொல்லிவிட்டால்.. உடனே நீங்கள் 'ஊம்' என்று தலையை ஆட்டிவிடுவதா?''

''அறியாத ஊரில்.. சொந்தக்கார மனுஷங்க வீட்டில் பெண்பிள்ளை இருப்பதுதாண்டா பாதுகாப்பு...''

''நீங்க இன்னும் உங்க காலத்திலேயே இருக்கீங்கப்பா... இந்தக் கால நடைமுறையே வேறு...''

''எனக்கு அதைப் பற்றி என்னடா தெரியும்.. இப்போது ஊர் பழகும் வரை சசிரேகாவின் வீட்டில் மாலினி இருக்கட்டும். கொஞ்சம் ஊர் பழகியவுடன் பிடிக்கவில்லைன்னா வேறு இடம் பார்த்து வைக்கலாம்..''

''அப்படியா சொல்றீங்க..''

ஒருவழியாய் சமாதானம் ஆனான் ரஞ்சித்.. ஆனாலும் தங்கையை தனியாய் அழைத்து.. ஆயிரம் அறிவுரைகள் கூறினான்.

''நீ படித்து.. வேலைக்குப் போவதில் எனக்கு சந்தோஷம்தான் மாலினி.. பெண்கள் என்றைக்குமே மற்றவங்களை எதிர்பார்க்காமல் அவங்க சொந்தக்காலில் நிற்கணும். ஆனாலும்.. வீட்டுக்குள் உனக்கு கிடைக்கும் பாதுகாப்பு வெளியுலகில் கிடைக்காது. நீ ஜாக்கிரதையாய் இருக்கணும்..''

''நான் அலர்ட்டாக இருப்பேன் அண்ணா...''

''எந்த நேரமும் அலர்ட்டாக இருந்தாக வேண்டும் மாலினி..''

''ஆகட்டும் அண்ணா..''

''நீ நம் அம்மா.. பழைய பாடல்களை டி.வி-யில் பார்க்கிறப்போ சோந்து பார்ப்பாய்தானே..''

''சில சமயம் பார்ப்பேன்..''

''அதில் ஒரு பாட்டை கேட்டதுண்டா?''

''என்ன பாட்டு அண்ணா?''

*''வீட்டை விட்டு வெளியில் போனால்..*
*நாளும் நடக்கலாம் - அந்த*
*நாளும் தெரிந்து நடந்துக்கிட்டா*
*நல்லா இருக்கலாம்..''*

''ஃபென்டாஸ்டிக்...''

''இந்தப் பாட்டு எந்தக் காலத்திலும் பெண்களுக்குப் பொருந்துகிற பாட்டு. இந்த உலகத்தில் ஆண்களைவிட பெண்களைத் தாக்கும் ஆபத்துகள் மிக அதிகம் மாலினி..''

''நான் பத்திரமாய் இருந்து கொள்வேன் அண்ணா.. நீங்க பயப்பட வேண்டாம்..''

''அந்த வீட்டில் உனக்கு இருக்கப் பிடிக்கவில்லைன்னா உடனே எனக்குத் தகவல் கொடு. நான் வந்து ஒரு நல்ல லேடீஸ் ஹாஸ்டலாகப் பார்த்து உன்னைத் தங்க வைக்கிறேன்..''

அண்ணன் காட்டிய அதீதமான அக்கறை கண்டு நெகிழ்ந்துபோய்விட்டாள் மாலினி. இத்தனை நாளாய் இந்த பாசத்தை இவன் எங்கே ஒளித்து வைத்திருந்தான் என்று திகைத்துப் போனாள்.



காவேரி.. வெகு காலத்திற்குப் பின் பேசும் சங்கடத்துடன் சசிரேகாவின் அப்பாவிற்கு போன் பண்ணிப் பேசினாள்.

''சசியின் போன் நம்பர் வேணுமே.. மாமா..''

''தம்பிகிட்ட இருக்குமேம்மா..''

''நான் கேட்டால் அவர் தரமாட்டார்.. நீங்க சொல்லுங்க..''

''அடிக்கடி பேசிக் கொண்டிருந்தால் உனக்குத் தெரிந்திருக்கும். திடீர்னு பேசணும்னா.. உனக்கு நம்பர் தெரியாது தான்..''

'நேரம் பார்த்து இந்த மனுஷன் குத்திப் பேசுகிறார்..' மனதிற்குள் நினைத்துக் கொண்ட காவேரி.. மழுப்பலாக பதில் சொன்னாள்.

''பேசக்கூடாதுன்னு இல்லை மாமா.. ஆனால்.. பேச எனக்கு எங்கே நேரமிருக்கு.. பொழுது விடிஞ்சு எழுந்து.. நடுராத்திரி வரைக்கும் வேலை செய்து ஓய்வது தானே எங்க பொம்பளை ஜென்மங்களின் தலையெழுத்து.. நான் என்ன வேண்டுமென்றேவா பேசாமல் இருந்தேன்?''

''எல்லாத்துக்கும் தெளிவாய் ஒரு பதில் வைத்திருக்க.. ம்ம்.. நம்பரைக் குறித்துக் கொள்..''

அப்படிக் கஷ்டப்பட்டு.. சசிரேகாவின் போன் நம்பரைக் கண்டுபிடித்து.. கணவன் அறியாமல் அவளிடம் பேசினாள் காவேரி.

''என்ன சசி.. உன் சித்தப்பா இப்படிச் சொல்கிறாரு?''

''என்ன சொல்கிறார் சித்தி..''

''மாலினி உன் வீட்டில் தங்கி வேலை பார்க்கட்டுமுன்னு சொல்கிறாரே...''

''நான் சொன்னதைத்தானே சொல்கிறார்.''

''நீ தனிக்குடித்தனமாய் இருந்தாலும் பரவாயில்லை. ஆனால்.. நீயே கூட்டுக் குடும்பத்தில் இருக்கிறாய். இந்த நிலைமையில் மாலினியை உன் வீட்டில் தங்க வைத்துக் கொள்வதில் பிரச்னை எதுவும் வந்துவிடாதே..''

''அதெல்லாம் ஒரு பிரச்னையும் வராது சித்தி.. மாலினியை நான் பார்த்துக் கொள்கிறேன்..''

''உனக்கு எதுக்கும்மா வீண் சிரமம்?''

''இதில் சிரமப்பட என்ன இருக்கு சித்தி... கடல் போல் எங்க வீடு இருக்கு. மாலினி இங்கே தங்குவதற்கு யாரும் எதுவும் சொல்ல மாட்டாங்க சித்தி...''

சசிரேகா தைரியம் கொடுத்தாலும் காவேரி மனது கேட்காமல் புலம்பிக் கொண்டுதான் இருந்தாள்.

''ஆயிரம்தான் இருந்தாலும்.. அடுத்த வீடு.. அடுத்த வீடுதான்.. அது ஒருபோதும் நம்ம வீடு ஆகிவிடாது...''

''இது அநியாயம் அம்மா.. ஏதோ.. தெரியாத ஊருக்கு சொந்தக்காரப் பெண்.. வேலை செய்ய வந்துவிட்டாள் என்பதற்காக அவர்கள் இருக்க இடம் கொடுத்தால்.. உடனே அவர்களின் வீட்டை நமக்கு எழுதி கொடுக்கச் சொல்லிக் கேட்டு விடுவதா?''

''நான் எங்கேடி அப்படிக் கேட்டேன்?''

''அப்போ.. நீங்க பேசுவதற்கு என்ன அர்த்தம்?''

''போடி அரட்டை.. ஊரில் உலகத்தில் எல்லோரும் தான் வேலை பார்க்கப் போகிறாங்க. உன்னைப் போலவா அடுத்த வீட்டில் தங்கி வேலை பார்க்கிறேன்னு போறாங்க?''

''நான் என்னம்மா செய்யட்டும்.. அப்பாதான் என்னை லேடீஸ் ஹாஸ்டலில் தங்கவிட மாட்டேன் என்கிறாரே..''



ஒருவழியாய் வீட்டினரை சமாதானம் செய்துவிட்டு.. மாலதி கிளம்பும் நாள் வந்தபோது மீண்டும் பிரச்னை தலைதூக்கியது.



*உனைப் பார்த்த போது..*
*என் உயிர் துடித்த துடிப்பை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

மாலினியை மார்த்தாண்டத்திற்கு ஜானகிராமன்தான் அழைத்துச் செல்வதாக இருந்தது. கிளம்பும் நாள் வந்தபோது அவரது ஆபீஸில் இன்ஸ்பெக்ஷன் வந்து சேர.. அவரால் மகளுடன் மார்த்தாண்டம் செல்ல முடியாமல் போய்விட்டது.

''ரஞ்சித்.. நீ போய் உன் தங்கையை சசிரேகாவின் வீட்டில் விட்டுவிட்டு வாடா...''

ரஞ்சித் மறுப்புச் சொல்லாமல் உடனே கிளம்பினான். ஆனால், சாகசம் மிக்க ராதிகா.. தன் பிறந்த வீட்டுக்குப் போன் செய்து கணவனின் செல்போனுக்கு போன் செய்து பொய் தகவல் ஒன்றைச் சொல்லச் சொன்னாள்.

மகள் பதினாறு அடி பாயும்போது அவளைப் பெற்ற தாய் எட்டடியாவது பாய வேண்டாமா?

ராதிகாவின் அம்மா அலறிக் கொண்டு மருமகனுக்குப் போன் செய்தாள்.

''மாப்பிள்ளை...''

''என்ன அத்தை... ஏன் அழுகறீங்க?''

''உங்க மாமாவுக்கு ஹார்ட் அட்டாக் மாப்பிள்ளை..''

''அடக்கடவுளே...''

''ஆஸ்பிடலுக்குக் கூப்பிட்டுக் கொண்டு போனோம்.. அவர் பிழைத்தது மறுபிழைப்பாய் போச்சு. ராதிகாவையும் உங்களையும் பார்க்கணும்னு துடிக்கிறார். நீங்க உடனே கிளம்பி வாங்க.''

''இதோ.. இப்போதே கிளம்பிவிட்டோம்..''

ரஞ்சித் வேறுவழியில்லாமல் கெஞ்சுதலாய் தங்கையைப் பார்க்க.. அவள் உடனே நிலைமையைச் சமாளித்தாள்.

''நைட்டில் பஸ் ஏறினால் விடிந்தவுடன் மார்த்தாண்டத்தில் இறங்கப் போகிறேன். சசிக்கு தகவல் கொடுத்து விடுங்கப்பா.. நான் பத்திரமாய் போய் கொள்வேன்..''

கடைசியில் அதுதான் நடந்தது. வீட்டுப் பெண்ணை அறியாத ஊருக்கு வேலைக்கு அனுப்ப.. ஆயிரம் யோசனை செய்த அந்தக் குடும்பம்.. வேறு வழியில்லாமல் பெண்ணை தனியே மார்த்தாண்டத்திற்கு பயணம் செய்யும்படி விட நேர்ந்ததும் காலத்தின் கட்டாயம்தான்.

மாலினி கைக்கடிகாரத்தில் மணி பார்த்தபோது அவளது செல்போன் அலறியது. எடுத்துப் பார்த்தாள். சசிரேகாதான் அழைத்தாள்.

''சசி...''

''கார் பஸ் ஸ்டாண்டிற்கு வந்துவிட்டது மாலினி. காரின் நம்பரை நோட் பண்ணிக் கொள். சில்வர் வொயிட்.. ஸ்விஃப்ட் கார்.. டிரைவர் காரில் இருப்பார். உன் பெயரைக் கேட்பார். சொல்லிவிட்டு காரில் ஏறி வீட்டிற்கு வந்துவிடு..''

இவ்வளவு தூரம் மர்மக் கதை போல் சொல்பவள் ஒரு எட்டு வந்து கூப்பிட்டுக் கொண்டு போகக் கூடாதா என்ற கோபம் மனதில் எழ.. சட்டென்று அதை அழித்தாள் மாலினி.



உரிமைப்பட்ட தகப்பனும் தமையனும் உடன்வர முடியாத நிலைமையில் இருக்கும்போது.. தூரத்து உறவுக்காரப் பெண்ணிடம் இதைவிட அதிகமாய் எதிர்பார்க்கக் கூடாது என்ற எண்ணத்துடன் தோள் பையை மாட்டிக் கொண்டு பெட்டிகளை கையில் எடுத்துக் கொண்டாள். பஸ் ஸ்டாண்டின் வாசலை நோக்கி நடந்தாள்.

மாலினி சொன்ன காரின் அருகே சென்று டிரைவரைப் பார்த்தாள்.

''நான் மாலினி.. சசிரேகாவின் சித்தப்பா மகள்..''

''உங்களுக்காகத்தான்மா காத்துக் கொண்டிருக்கிறேன்.. ஏறிக்கங்க..''

டிரைவர் காரின் கதவைத் திறந்துவிட்டார். மாலினி ஏறிக் கொண்டாள்.

''பெட்டிகள்?''

''இங்கே கொடுங்க.. டிக்கியில் வைத்து விடுகிறேன்.''

கார் கிளம்பியது. லேசாக நரைத்த தலையுடன் முரட்டு மீசையுடன் காணப்பட்ட டிரைவர்.. சளசளவென்று பேசியவண்ணம் காரை ஓட்டிக் கொண்டிருந்தார்.

''நீங்க சின்னம்மாவின் தங்கச்சிங்களா..''

''ஆமாம்.''

''என் பெயர் பரந்தாமன்ங்க..''

''அப்படியா?''

''நான் இருபது வருஷமாக கோட்டையூர் ஜமீன் வீட்டில்தான் வேலை செய்கிறேனுங்க..''

''அப்புறம் எப்படி இந்தக் காரை ஓட்டிக்கிட்டு வந்தீங்க?''

''இது என்னங்க.. இப்படிக் கேட்டுப்புட்டீங்க.. நான் என்ன ஊரான் வீட்டுக் காரையா ஓட்டிக்கிட்டு வந்தேன்.. நான் வேலை செய்கிற வீட்டுக் காரைத்தானே ஓட்டிக்கிட்டு வந்தேன்?''

''கோட்டையூரில் வேலை பார்ப்பதாக நீங்கள்தானே சொன்னீங்க?''

''அடக்கடவுளே.. நீங்க அப்படி வருகிறீங்களா?''

தான் எப்படி வந்தோம் என்ற யோசனையுடன் பரந் தாமனை உற்றுப் பார்த்தாள் மாலினி.

''உங்க அக்கா வாழ்க்கைப்பட்டிருப்பது எந்தக் குடும்பத்திலன்னு நினைத்தீங்க?''

'நான் எதையுமே நினைத்ததில்லை. ஏன்.. இந்த மார்த்தாண்டத்தில் வேலை கிடைக்கும் வரை சசியைப் பற்றியே நினைத்ததில்லை...'

மனதில் இருப்பதை எப்படி வாய்விட்டுச் சொல்வது... ஊர் விட்டு ஊர் வேலைக்கு வந்தவளை.. உரிமையுடன் அழைத்து.. தன் வீட்டில் தங்க வைத்துக் கொள்பவளை நினைத்தும் பார்த்ததில்லையென்று எப்படிச் சொல்வது?

வார்த்தைகள் வராமல் மௌனித்தாள் மாலினி. அதைக் கண்டுகொள்ளாதவராய் பரந்தாமன் தன் போக்கில் பேசிக் கொண்டிருந்தார்.

''உங்க அக்காவின் மாமனார் வீடுதான் கோட்டையூர் ஜமீன் வம்சத்து வீடும்மா...''

''இது மார்த்தாண்டம்தானே..''

''சந்தேகமாயிருந்தா.. அந்தக் கடையில் மாட்டி யிருக்கும் போர்டைப் பாருங்க.. நான் வேணும்னா காரை நிப்பாட்டுகிறேன்...''



''ஜோக்கா?''

''ஹா.. ஹா..''

''நீங்கதானே சார்.. வாய்க்கு வாய் கோட்டையூர்.. கோட்டையூர்னு பிளந்து கட்டினீங்க..''

''அவங்க கோட்டையூர் ஜமீன் வம்சத்து ஆளுக தான்ம்மா. மார்த்தாண்டத்திற்கு தொழில் செய்யன்னு வந்து நான்கு தலைமுறைக்கு மேலாகுது. இப்ப மார்த்தாண்டத் திலே கொடி கட்டிப் பறக்கிறாங்க இல்ல...''

''ஓஹோ...''

மாலினிக்கு பசி வயிற்றைக் கிள்ளியது. இரவு பூரா வும் பஸ் பயணம் செய்த அலுப்பு உடலை அசத்தியது. எப்போது வீட்டிற்குப் போய் குளித்து ஒரு வாய் சாப்பிடு வோம் என்ற நிலையில் இருந்தவளுக்கு கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் கொடியைப் பற்றிய கதை கேட்பதில் ஆர்வமில்லை.

ஆனால் பரந்தாமன்.. மாலினியின் பசியை அறியாத வராய் நீ கேட்டாலும் கேட்காவிட்டாலும் என் எஜமானர் வீட்டுப் பெருமையை நான் சொல்லியே தீருவேன் என்று கங்கணம் கட்டியவராய்... தான் பேசிக் கொண்டிருந்த புராணத்தைத் தொடர்ந்து பேசி அவருடைய எஜமான விசுவாசத்தைக் காட்டிக் கொண்டிருந்தார்.

''அதென்னம்மா.. ஓஹோன்னு ஒற்றை வார்த்தையில் கேட்டு பேச்சை முடித்துவிட்டீங்க...''

''வேறு என்ன செய்யச் சொல்றீங்க?''

''இந்த ஊருக்கு பிழைப்புக்காக வந்திருக்கீங்க...''

'ஆமாம். பிழைப்பில்லாமல் இருந்துவிட்டு.. பிழைப்பைத் தேடி உங்க ஊருக்கு வந்திருக்கிறேன்.. போய்யா...'

''எங்க ஐயா வீட்டுக்கு உறவுக்காரங்களா வேறு போயிட்டீங்க.''

'உன்னிடம் இப்படிப் பசியோடு கதை கேட்க வேண்டி வரும்னு தெரிந்திருந்தால்.. உன் உறவே வேண்டாம் போடின்னு சசியிடம் சொல்லியிருப்பேன்...'

''அவங்க வீட்டில் தங்கப் போறீங்க..''

'இதையே ஆள் மாற்றி ஆள்.. எத்தனை தடவை சொல்வீங்க?'

''அவங்க வீட்டைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டாமா?''

'அதைத் தெரிந்துகொண்டு எனக்கு ஆகப் போவதென்ன.. வேகமாய் காரை ஓட்டி என்னை வீட்டில் சேர்க்கும் வேலையைப் பாருய்யா...'

பாவம் பரந்தாமன்.. பசியின் இம்சை தாங்க முடியாமல் மாலினி.. மரியாதையாய் தன்னை மனதிற்குள் விளிப்பதை அறியாதவராய்.. மனம்விட்டு மாலினியின் அமைதியைப் பாராட்டிப் பேச வேறு செய்தார்..

''ஒன்றைப் பாராட்டித்தான் ஆக வேண்டும்மா..''

''எதை?''

''நீங்களும் சசியம்மாவைப் போல ரொம்ப சாது..''

'நான் பேசி நீ இன்னும் கேட்கவில்லை.. அதுதான் எனக்கு சாது பட்டம் கொடுக்கிறாய்.. ஓட்டுய்யா வண்டியை..'

''என்னம்மா பேசாமல் வருகிறீங்க?''



''அதுதான்.. எனக்கும் சேர்த்து.. நீங்கள் பேசிக்கொண்டு வருகிறீங்களே...''

''ஆஹா.. இதுவல்லவோ அமைதி.. இதுவல்லவோ அடக்கம்..''

'யோவ்.. பசிக்குதுய்யா.. வாயை மூடிக்கொண்டு காரை மட்டும் ஓட்டும் வேலையைப் பார். உனக்கு 'ஊம்' போடக்கூட எனக்கு தெம்பு இல்லை...'

''கோட்டையூர் ஜமீன் வம்சம்னா.. திருவனந்தபுரத்து ராஜ வம்சத்து ஆளுகளே மரியாதை கொடுப்பாங்க. அப்பேர்ப்பட்ட ஜமீன் பரம்பரை.. எங்க ஐயாவின் பரம்பரை..''

''ஊம்...''

''அந்தக் காலத்தில்.. இந்த ஏரியாவிலேயே முதல் முதலாய் கார் வாங்கிய பரம்பரை எங்க ஐயாவின் பரம்பரை..''

''ஊம்...''

''எல்லோரும் இரும்பு மரக்காலில் நெல்லளந்து போட்டால்.. தங்க மரக்காலில் நெல்லளந்து போட்ட பரம்பரை எங்க ஐயாவின் பரம்பரை...''

''ஊம்..''

மாலினி.. ஜன்னல் வழியே இறங்க வேண்டிய இடம் வந்துவிடாதா என்று ஆவலுடன் பார்த்தபடி 'விதியே' என்று 'உம்' போட்டாள்.



*உன் நிழல் தேடி என் நெஞ்சம்*
*நெகிழ்ந்திட்ட நிலையை*
*என்னவென்று நான் சொல்ல...?*

நீ 'உம்' போட்டாலும் போடாவிட்டாலும் நான் சொல்ல வந்ததை சொல்லாமல் விடமாட்டேன் என்ற முடிவு கட்டிவிட்டவராக பரந்தாமன்.. தன் எஜமானர் வீட்டுப் பழம்பெருமையைப் பறைசாற்றிக் கொண்டிருந்தார்.

''எங்க ஜமீன்தாரய்யா நடந்து வந்தால்.. அவர் வரும் பாதையில் பூப்போட்டு வணங்குவாங்க...''

''உம்...''

''அந்த மகராசன் போய்ச் சேர்ந்த பின்னால்.. அவர் விட்டுப் போன குலப் பெருமையைக் கட்டிக் காப்பது எங்க ஐயாதான்..''

''உம்..''

''எந்த ஐயான்னு கேட்கவில்லையே..''

''எந்த ஐயா..''

''எங்க பிரபாகரன் ஐயா..''

''எந்த பிரபாகரன்.. கேப்டன் பிரபாகரனா?''

பரந்தாமன் சட்டென்று பிரேக் பிடித்து வண்டியை நிறுத்தவும்.. மாலினிக்கு தூக்கிவாரிப் போட்டது.

'இந்த ஆள் இன்றைக்கு என்னைச் சாப்பிடவிடக் கூடாதுன்னு முடிவே கட்டிவிட்டாரா...'



''ஏன் சார் காரை நிறுத்திவிட்டீங்க...''

''நீங்க ஊருக்குப் புதுசு... எங்க சின்னம்மாவுக்கு தங்கச்சி முறைங்கிறதால நான் உங்களைச் சும்மா விடுகிறேன். வேறு ஒரு ஆள் இப்படிப் பேசியிருந்தால் இங்கே நடப்பதே வேறு..''

'ஐயையோ... நான் பசி மயக்கத்தில் என்னத்தைச் சொல்லித் தொலைத்துவிட்டேன்?' மாலினி பயந்து போய் விட்டாள்.

''நான் என்ன சார் சொன்னேன்?''

''எங்க ஐயாவின் பெயரைச் சொல்லக்கூட நாங்கள் யோசிப்போம். நீங்க.. அவங்க பெயரைக் கிண்டல் பண்ணுகிறீங்களே...''

''அடடா.. நான் வேடிக்கைக்காக கேட்டுவிட்டேன் சார்...''

''வேடிக்கைப் பேச்சையெல்லாம் சென்னையிலேயே மூட்டை கட்டி வைத்து விடுங்கம்மா. இது மார்த்தாண்டம். இங்கே நாவடக்கம் ரொம்ப முக்கியம். அதுவும் எங்க ஐயாவுக்கு அவருக்கு முன்னால் நின்று யாராவது எதிர்வாதம் பண்ணினால் சுத்தமாய் பிடிக்காது. பேசுகிற ஆளை உண்டு இல்லைன்னு பண்ணிவிடுவார்...''

சளசளவென்று பேசும் சசிரேகா.. 'அமைதியின் சிகரம்' என்று பெயர் வாங்கியிருப்பதற்கான அடிப்படைக் காரணம் எது என்பதைக் கண்டுகொண்ட மாலினி.. பரந்தாமனுடன் சமாதானப் பேச்சுவார்த்தை நடத்த ஆரம்பித்தாள்.

''பாருங்க பரந்தாமன் சார்.. நீங்கள்தான் உங்கள் ஐயாவின் பெயரைச் சொன்னீங்க.. நான் சொல்லவில்லை..''

''உங்களுக்குத் தெரியணும்கிறதுக்காக சொன்னேன்..''

''நான் தெரியாமல் பேசிவிட்டேன்.. இதைப் போய் பெரியவங்க நீங்க பெரிது பண்ணலாமா?''

பரந்தாமன் சமாதானமடைந்தவராய் காரைக் கிளப்பினார். சண்டை வந்துவிட்டதால் இனி அவர் பேச்சை நிறுத்திவிடுவார் என்று மாலினி போட்ட கணக்கை தப்புக் கணக்காக்கி விட்டு அவர் பேச்சைத் தொடர்ந்தார்.

''இப்போது பேசியதை விட்டுவிடலாம்.. இனி இப்படிப் பேசி வைக்காதீங்க...''

''வாயைத் திறப்பேனா? நீங்க கவலைப்படாமல் வண்டியை வேகமாக ஓட்டுங்க சார்..''

''எங்க வீட்டு சட்டதிட்டம் தெரியாமல் பேசகிறீங்க?''

'இது என்னடா வம்பாப் போச்சு..' என்றிருந்தது மாலினிக்கு. அவர்கள் வீட்டு சட்டதிட்டங்களைப் பற்றி அலசி ஆராயும் நேரமா அது என்று நொந்து கொண்டவளாய் பரந்தாமனை ஒரு மௌனப் பார்வை பார்த்தாள் அவள்.

''என்னம்மா பேசாமல் இருக்கிறீங்க..''

''நான்பாட்டுக்கு எதையாவது எதார்த்தமாக பேசி வைக்கப் போய் நீங்க பாதியிலேயே வண்டியை நிறுத்துவதற்கா சார்.. எனக்கு இந்த வம்பே வேண்டாம். நான் வாய் திறக்கப் போவதில்லை...''

''இவ்வளவு நேரமும் வாய் திறக்காமலா இவ்வளவு பேச்சையும் பேசினீங்க.. ஹா.. ஹா...''

'நீயெல்லாம் பேச.. நான் கேட்க வேண்டிய நேரம் வந்துவிட்டதே..' மாலினி மனதிற்குள் எரிச்சல் பட்டாள்.



''அம்மா.. வீட்டுப் பெண்கள் காரில் ஏறினால் காரை வேகமாக ஓட்டக்கூடாதுன்னு எங்க ஐயா உத்தரவு போட்டிருக்கிறாரு...''

''ஓஹோ..''

''எங்க பெரியய்யா போனதும்.. எங்க ஜமீன் வம்சத்துப் பெருமையைத் தூக்கி நிறுத்தியது எங்க ஐயா தான்...''

'இவர்பாட்டுக்கு பெரியய்யா.. எங்கய்யா என்கிறாரே.. யார் பெரியய்யா.. யார் எங்கய்யா.. இரண்டு ஐயாமார்களுக்கும் இடையே இருக்கும் உறவுப் பாலம்தான் என்ன?'

மாலினியின் மனதிலிருந்த கேள்விகளைப் படிக்க முடியாதவராக பரந்தாமன்.. அவருடைய ஐயாவின் பெருமைகளைப் பற்றித் தொடர்ந்து பேசவும்.. மாலினி பொறுத்தது போதும் என்று இடைமறித்தாள்.

''ஒரு சந்தேகம் கேட்கலாமா பரந்தாமன் சார்?''

''கேளுங்கம்மா...''

''இந்தப் பெரியய்யா யார்.. ஐயா என்பது யார்?''

''நல்லவேளையாய் இந்தக் கேள்வியை என்கிட்ட வந்து கேட்டு வைத்தீங்க...''

'இது என்ன கேட்கக்கூடாத கேள்வியா?' மனதிற்குள் பல்லை நறநறவென்று கடித்தாள் மாலினி.

பேசாமல் ஒரு ஆட்டோவைப் பிடித்து வீட்டிற்குப் போயிருந்தால்.. இந்நேரம் சாப்பிட்டுவிட்டு குட்டித்தூக்கம் ஒன்றைப் போட்டுவிட்டு எழுந்திருந்து இருப்பாள்.

அதை விட்டுவிட்டு அழைத்துக் கொண்டு போகிறேன் பேர்வழின்னு வளவளவென்று ரம்பம் போட்டுக்

கொண்டு ரோட்டில் நடந்து போகிறவனெல்லாம் ஓவர்டேக் செய்யும் அளவிற்கு 'பொன்னே.. பூவே..' என்று மெதுவாக காரை ஓட்டிக் கொண்டு என்னவோ.. மாலினியாக ஓடிவந்து அவரிடம் கேள்வி கேட்டது போல் பேசி வைத்த பரந் தாமனை பசிவெறியுடன் பார்த்தாள் மாலினி.

''அம்மா.. எங்க கோட்டையூர் ஜமீன்தார் கார்த்தி கேயன்தான் எங்க பெரிய ஐயா..''

'இவர் பெயரைச் சொன்னால் தப்பில்லையாம்.. அதுவே நான் பெயரைச் சொன்னால் அது தப்பாம்..'

''எங்க பெரிய ஐயாவுக்கு மூன்று மகன்கள்.. ஒரே ஒரு பெண்...''

'எத்தனை மனைவிகள்?' என்று மனதிற்குள் கேட்டுக் கொண்ட மாலினி.. மானசீகமாய் தனக்குத் தானே குட்டு வைத்துக் கொண்டாள்.

'சே... இந்த டி.வி. சீரியல்களைப் பார்த்துப் பார்த்து நானே எப்படி யோசிக்கிறேன் பார்.. இந்த இரண்டு பெண்டாட்டி கட்டுவதை நியாயப்படுத்தும் சீரியல் எடுப்பவர்களை என்னதான் செய்வது?'

''மூத்தவருதான் எங்க ஐயா பிரபாகரன். இரண்டாவது ஐயாதான் உங்க அக்கா சசியம்மாவைக் கல்யாணம் பண்ணிக் கொண்ட கருணாகரன் ஐயா. மூன்றாவது ஐயா வின் பெயர் தினகரன்..''

சென்னையில் பிறந்து வளர்ந்த மாலினிக்கு.. பரந்தாமன் போட்ட 'ஐயா..'வைப் பார்க்க அதிசயமாக இருந்தது.

''இவங்க மூன்று பேருக்கும் செல்லத் தங்கை.. சின்னத் தங்கை.. எங்க வீட்டு இளவரசி.. காயத்ரி. கடைக் குட்டி...''



'ஓ.. சின்னதம்பி குஷ்பூவா? நடக்கட்டும்.. நட டும்.'

''எங்க பெரியம்மாவின் பெயர் நர்மதா...''

''அழகான பெயர்..''

தன் வீட்டு எஜமானியின் பெயரைப் புகழ்ந்து ம பேசிவிட்டதில் பூரிப்படைந்து போனார் பரந்தாமன்.

''எங்க ஐயா வைத்ததுதான் அந்த வீட்டில் சட்ட

''கோபித்துக் கொள்ளாதீங்க டிரைவர் சார்..''

''என்னம்மா..''

''இப்ப நீங்க ஐயான்னு சொன்னது.. பிரபா ஐயாவைத்தானே...''

''அதிலென்ன சந்தேகம். எங்க வீட்டிலும் ஃபேக்டரியிலும் சரி.. மில்லிலும் சரி.. ஐயான்னு னால்.. அது பிரபாகரன் ஐயா ஒருத்தரைத்தான் குறிக்

''அவருடைய தம்பிகளை எப்படிச் சொல்வீங்க

''சின்னய்யா.. சின்னச் சின்னய்யா...''

'என்னங்கடா இது...' என்று மானசீகமாய் தல கைவைத்துக் கொண்டாள் மாலினி. அவள் 'சின்னச் வண்ணக்குயில்...' என்றுதான் பாட்டு ஒன்றைக் டிருக்கிறாள். முதல் முறையாக இப்போதுதான் ' சின்னய்யா..' என்று ஒருவன் விளிக்கப்படுவதைக் கிறாள்.

''அது சரி.. ஆமாம் டிரைவர் சார்.. இத்தனை பே பத்தியும் சொன்னீங்க. ஒருத்தரைப் பத்தி நீங்க லாமல் விட்டுவிட்டீங்களே..''

''யாரைச் சொல்கிறீங்க?''

''உங்க ஐயாவின் வொய்ஃப்பைப் பற்றிச் சொல்லவே இல்லையே..''

பரந்தாமன் ஒரு நொடி மௌனம் சாதித்தார். பின் மெதுவான குரலில் கூறினார்.

''ஐயாவுக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லைம்மா..''

''இது என்னங்க கதையாய் இருக்கு.. அவருக்கும் இளையவருக்குத்தானே எங்க சசியைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்திருக்கிறோம்?''

''நிஜம்தான்ம்மா. வேலையில் கவனம் வைத்துக் கிட்டு.. எனக்கு இப்பக் கல்யாணம் வேணாம்.. என் தம்பி காதலிக்கிறான்.. அவனுக்கு முதலில் கல்யாணத்தை பண்ணி வைக்கலாமுன்னு ஐயாதான் முடிவெடுத்து முன்னால் நின்னு இந்தக் கல்யாணத்தை பண்ணி வைத்தார்..''

''ஓ.. ஐஸீ...''

குடும்பப் பொறுப்பை கையில் வைத்திருக்கும் ஒருவன்.. தன் வீட்டினரைத் தன் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவன்.. தன் கல்யாணத்தை மறுத்து தம்பிக்கு காதல் கல்யாணத்தை முதலில் நடத்தி வைத்திருக்கிறானா?

கேட்கும்போதே ஆச்சரியமாய் இருந்தது மாலினிக்கு.

''அதோ.. அதுதான் எங்க ஐயாவின் வீடு...''

பரந்தாமன் அதுவரை அளந்த அளப்பைக் கேட்டு.. அந்த வீட்டின் மேல் அவளையுமறியாமல் ஒரு ஆர்வத்தை கொண்டுவிட்ட மாலினி... ஆவலுடன் அந்த வீட்டைப் பார்த்தாள். அந்தத் தெருவிலேயே பாதியை அடைத்துக் கொண்டு மிகப் பெரும் மாளிகையாய் பிரமாண்டமாய் தெரிந்தது சசிரேகாவின் புகுந்த வீடு.






*உன் விரல் தொட்ட நொடியில்...*
*என் உடல் கொண்ட சிலிர்ப்பை*
*என்னவென்று நான் சொல்ல..?*

**மா**லினியின் கவனத்தை முதலில் கவர்ந்தது. கோட்டை மதில் சுவர்போல் மேலெழும்பி நின்ற அந்த வீட்டின் மதில் சுவர்தான்.

'அடேங்கப்பா.. மார்த்தாண்டம் மாமன்னரின் அரண் மனைன்னு பார்க்கிறவங்க நினைக்க வேண்டுமாக்கும்..'

அந்த கோட்டைச் சுற்றுச் சுவரின் நடு மையத்தில்.. அந்த சுவர்களுக்கு இணையாக.. உயரமான பெரிய இரும்பு கேட் பளபளவென்ற கரும் பச்சை வண்ண பெயிண்டுடன் அதன் விளிம்புகளில் குத்தூட்டி போல் வடிவமைக்கப்பட்ட கூம்பு பகுதிகளில் தங்க முலாமுடன் தகதகத்தது.

'தக தக தங்க வேட்டை என்பது இதுதான் போல.. ம்ம்..'

கேட்டிற்கு பக்கத்தில்.. சுவருக்கும் கேட்டிற்கும் இடையில் கட்டப்பட்டிருந்த சின்ன அறையில் சீருடை அணிந்த காவலாளி ஒருவன் இருந்தான். அந்த அறையில் டேபிள் சேர் போடப்பட்டு இருக்க.. டேபிளின் மேல் டெலிபோன் இருந்தது. மின்விசிறியின் கீழே அமர்ந்திருந்தவன்.. காரைக் கண்டதும் அவசரமாய் வெளியே வந்து கதவைத் திறந்துவிட்டான்.

'வாயிற் காவலாளி கதவைத் திறந்துவிட்டார்.. கோட்டைக் கதவுகளும் திறந்து கொண்டன. இனி ஐயாவின் அரண்மனைக்குள் பிரவேசிக்க வேண்டியதுதான்...'

மாலினிக்கு ஒரு கணம் தான் காருக்குள் உட்கார்ந் திருக்கிறோமா.. இல்லை.. பல்லக்கில் உட்கார்ந்திருக் கிறோமா என்று சந்தேகம் வந்துவிட்டது.

ஒரு கணம் தன்னை அண்டை நாட்டு இளவரசியாக கற்பனை செய்து பார்த்தாள் மாலினி.

மூடு பல்லக்கில் அவள் பயணம் செய்து மார்த்தாண்ட மாமன்னரின் அரண்மனைக்கு வருகிறாள். பல்லக்கை இறக்கி வைத்துவிட்டார்கள். பல்லக்கின் திரையை விலக்கி அவளை வெளியே அழைக்கிறார்கள்.

'எங்கள் அரண்மனைக்கு விஜயம் செய்திருக்கும் அதிரூப சுந்தரியே.. அண்டை நாட்டு இளவரசியே... மயக்க வைக்கும் அழகைக் கொண்ட மாலினிதேவி யாரே... உமக்கு வந்தனம். தங்கள் திருப்பாதம் இந்த அரண்மனையில் பட நாங்கள் பாக்கியம் செய்திருக் கிறோம். இறங்குங்கள் இளவரசி... என்ன இளவரசியாரே... இறங்க மனமில்லையா?'

கற்பனை தந்த மயக்கத்தில் திளைத்தவள் தன்னையும் அறியாமல்..

''அப்படியெல்லாமில்லை...'' என்று கூறினாள்..

''எப்படியெல்லாமில்லை?'' என்ற சசிரேகாவின் குரலைக் கேட்டுத் தூக்கிவாரிப் போடத் திரும்பிப் பார்த் தாள்.

கார் கதவைத் திறந்து அவள் இறங்குவதற்கு வசதி யாகப் பிடித்துக் கொண்டு சசிரேகா நின்றிருந்தாள்.

'இது நேரம் வரை நான் கற்பனையில் மூழ்கிவிட் டேனா..' மாலினிக்கு வெட்கமாய்ப் போய்விட்டது.

'ச்சு.. இந்த டிரைவர்.. இந்த வீட்டைப் பற்றியும் குடும்பத்தைப் பற்றியும் அளந்த அளப்பைக் கேட்டு எனக்கு கற்பனை ஊற்று பீறிட்டு விட்டதே..'

''என்னடி மாலு... இறங்க மனமில்லையா என்று நான் கேட்டதற்கு அப்படியொன்றுமில்லை என்று பதிலைச் சொல்லிவிட்டு இன்னும் காருக்குள்ளேயே உட்கார்ந்திருந்தால் எப்படி.. உன் கால்களைத் தரையில் வைத்து இறங்கு..''

சசி கேலியாகக் கூறவும்.. மாலினிக்கு முகம் சிவந்து விட்டது.

''நைட்டெல்லாம் பஸ் ஜர்னி பண்ணியதில் தூக்க மில்லை சசி.. அதுதான் காரிலேயே குட்டித்தூக்கம் போட்டு விட்டேன்...'' சமாளித்தபடி காரை விட்டு இறங் கினாள் மாலினி.

சசிரேகா, மாலினியின் கையைப் பிடித்து நலம் விசாரிக்க ஆரம்பித்தாள். அதற்குப் பதில் கூறிக்கொண்டே அந்த வீட்டின் சுற்றுப்புறத்தை பார்த்தவள், விழி விரிய அப்படியே நின்றுவிட்டாள்.

'வாவ்.. இப்படிக்கூட ஒரு தோட்டம் இருக்குமா?'

காம்பவுண்டு கேட்டிற்கும் வீட்டிற்கும் இடையே நீண்ட சிமெண்ட் போடப்பட்ட பாதை இருந்தது. அதன் இரு பக்கமும் பாத்திக் கட்டியது போல் குட்டி குட்டியான குரோட்டன்ஸ் செடிகள் வரிசை கட்டி அலங்காரமாய் அமைந்திருக்க... அவற்றின் இடையே மொர்க்குரி விளக்கு களின் டூம் கம்பங்கள் வெண்ணிறக் கடைசலுடன் காணப் பட்டன.

'நைட் நேரத்தில்.. இந்த லைட்டுகள் எரியும்போது வந்து பார்த்துவிட வேண்டும்...'

மாலினி ஆர்வத்துடன் சிமெண்ட் பாதையின் ஒரு பக்கம் அமைந்திருந்த தோட்டத்தைப் பார்த்தாள். ஒரு அழகிய பூங்காவின் அத்தனை கலையம்சத்தையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு காட்சி தந்தது அந்தத் தோட்டம்.

அலங்கார வளைவுகளும் ஆங்காங்கே போடப்பட்டிருந்த சாய்வான வேலைப்பாடுகள் மிகுந்த மர பெஞ்சுகளும் தோட்டத்தின் இடையே ஓடிய முயல்குட்டிகளும்.. பல வண்ண மலர் செடிகளுமாய் தோட்டத்தைப் பார்க்கப் பார்க்க தெவிட்டவே இல்லை மாலினிக்கு.

பாதையின் மறுபக்கம்.. ஓங்கி அடர்த்தியாய் வளர்ந்திருந்த செடிகளுக்கு அப்பால் நீச்சல்குளம் தென்பட்டது. செயற்கை அன்னங்களுக்குப் பதில் இயற்கையான உயிருள்ள வாத்துக்கள் நீந்திக் கொண்டிருக்க.. இந்த முறை வாய்விட்டு,

''வாவ்..'' என்றாள் மாலினி.

அவளது ரசனையை உணர்ந்தவளாய் சசிரேகா சிரித்தாள்.

''இந்தப் பக்கம் முயல்குட்டிகள் ஓடுது. அந்தப் பக்கம் வாத்துக்கள் தண்ணீரில் மிதக்குது. என்ன சசி இது.. நான் இப்படியெல்லாம் எந்த வீட்டிலும் பார்த்ததே இல்லை தெரியுமா?''

மாலினியின் கேள்விக்கு சசிரேகா பதில் சொல்லும் முன்னர் முந்திக் கொண்டு பதில் சொன்னார் பரந்தாமன்.

''எங்க ஐயாவுக்கு செயற்கையே பிடிக்காதுங்க. எல்லாமே இயற்கையாய் இருக்க வேண்டும்...''

மாலினி, சசிரேகாவின் காதோரமாக சரிந்து முணுமுணுத்தாள்.



''சசி.. இந்த ஆளுக்கு உன் வீட்டுக்காரரின் அண்ணனின் பெருமைகளை அவிழ்த்துக் கொட்டுவதென்றால் அல்வா சாப்பிடுவது போல இருக்கும்போல.. வருகிற வழியில்.. ஒரே ஐயா புராணம்தான். என் காது ஐவ்வே கிழிந்துபோய்விட்டதுன்னா பார்த்துக் கொள்...''

சசிரேகா.. மாலினியின் பேச்சைக் கேட்டுக் குலுங்கிச் சிரித்தாள். அதைப் பார்த்த பரந்தாமன்.. தானும் புன்னகைத்தபடி வெகுளியாய் வினவினார்.

''என்னங்கம்மா.. இப்படிச் சிரிக்கறீங்க. அப்படி உங்க தங்கச்சியம்மா என்னதான் சொல்கிறாங்க?''

''சும்மா.. ஜோக்காக எதையோ சொன்னாள்..''

''ஆமாமாம்.. இவங்க காரில் வரும்போது என்கிட்டயும் இப்படித்தான் வேடிக்கையாய் நிறையப் பேசினாங்க...''

பரந்தாமன் பேசிக் கொண்டே டிக்கியைத் திறந்து மாலினியின் பெட்டிகளை எடுத்துக் கொடுக்க.. மாலினி பல்லைக் கடித்துக் கொண்டு சன்னக்குரலில் மீண்டும் சசிரேகாவின் காதைக் கடித்தாள்.

''பசி உயிர் போகுது சசி.. உன் வீட்டு டிரைவர் காரை வேகமாய் ஓட்டவும் மாட்டேன்னு சொல்லிட்டார்.. உன் ஐயாவின் பெருமைகளை சொல்வதை நிறுத்தவும் மாட்டேன்னு சொல்லிவிட்டார்.. பசியோடு இருப்பவளிடம், கதை கேளு.. கதை கேளுன்னு சொன்னால்.. எனக்கு எப்படியிருந்திருக்கும். நீயே கொஞ்சம் யோசித்துப் பார். இதில் நான் வேடிக்கையாய் பேசினேனாம்.. விட்டால் இவரைக் கொன்று விடும் கொலைவெறியோடு இருந்தேன் தெரியுமா..''

மாலினியின் பேச்சிற்கு பதில் சொல்வதற்குள்..

பரந்தாமன் பெட்டிகளை எடுத்துக் கொண்டு டிக்கியைப் பூட்டிவிட்டு நிமிர.. சசிரேகா அவரைப் பார்த்து..

''ஹி.. ஹி.. திரும்பவும் இவள் வேடிக்கையாகத் தான் பேசுகிறாள்..'' என்று மழுப்பினாள்.

''அதுதான் எனக்குத் தெரிந்த சங்கதியாச்சே..'' என்றபடி அவர் பெட்டிகளோடு உள்ளே செல்ல.. மாலினி ஆச்சரியமாய் சசிரேகாவை ஏறிட்டாள்.

''என்னடி சசி.. உன் வீட்டு டிரைவருக்குப் போய் இந்தப் பயம் பயப்படுகிறாய்..?''

''உஷ்.. மாலினி.. மெதுவாகப் பேசு. அவர் காதில் விழுந்து விடப் போகிறது..''

''விழுந்தால் விழுகட்டுமே... நீ ஏன் பயப்படு கிறாய்னுதான் நான் கேட்கிறேன்...''

''இவர்.. என் வீட்டுக்காரரின் அண்ணனுக்கு நம்பகமானவர். அவருக்கு இவர் வலது கை போன்று வைத்துக் கொள்ளேன்...''

''தோடா.. அவருக்கு இவர் அல்லக் கையாகவே இருந்துவிட்டுப் போகட்டும். அதுக்கு நீயேண்டி பயப் படுகிற?''

''சும்மாயிருடி.. நீ வேற இந்த வீட்டின் நிலவரம் புரியாமல் பேசாதே...''

''என்னடி.. நிலவரம்? பெரிய கலவரம் போல் இப்படி ஒரு பில்டப்பைக் கொடுக்கிறாயே...''

''இந்த வீட்டில்.. என் வீட்டுக்காரரின் அண்ணன் வைத் ததுதான் சட்டம் மாலினி...''

''ப்பூ... இதைச் சொல்லத்தான் இத்தனை பில்டப்பா.. அதுதான் எனக்குத் தெரியுமே...''



''எப்படித் தெரியும்?''

''அதுதான் வழியில்.. உன் மச்சான்காரரின் அல்லக்கை திறந்த வாயை மூடவே இல்லையே...''

''தெரியுதில்ல.. அதனால் தேவையில்லாமல் பேசாதே..''

''என்னடி இது அநியாயமாய் இருக்கு.. பேசக்கூட முடி யாத வீட்டிலா நீ வாழ்ந்து கொண்டிருக்கிறாய்?''

''ம்ஹூம்.. உனக்கென்னடி தெரியும் என் அவதி... இங்கே வந்து வாயைத் திறக்கவே யோசிக்கும் நிலைமை யில் ஆகிவிட்டது என் நிலைமை. நான் எதைச் சொன்னா லும் எல்லோரும் குற்றம் கண்டுபிடித்துக் கொண்டே இருந்தாங்க. என் கணவர்.. சசி.. நீ இப்படி பேசியிருக்கக் கூடாது.. அப்படிச் சொல்லியிருக்கக் கூடாதுன்னு சொல்லிச் சொல்லி எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போகுமாறு செய்துவிட்டார்...''

''அடிப்பாவி... இதுதான் நீ காதல் கல்யாணம் செய்து கொண்ட லட்சணமா... இதை வெளியில் சொல்லிவிடாதே...''

''பேசினால்தானே பிரச்னைன்னு நான் சுத்தமாய் பேசு வதையே நிறுத்திவிட்டேன்...''

''ஓ... இதுதான் நீ 'அமைதியின் சிகரம்'னு பெயர் வாங்கியிருப்பதற்கான காரணமா.. வெல்டன் சசி.. தேறிவிட்டாய் போ...''

''உனக்கு என் நிலைமையைப் பார்த்தால் கேலி பண்ணத் தோன்றுகிறதா?''

''அப்புறம் என்னடி... உன்னை அடக்க நினைப் பவங்களை எதிர்த்துப் போராடுவதை விட்டுவிட்டு...

இப்படி வாயிருந்தும் ஊமையாய்ப் போய்விட்டேன்னு நிற்கிறாயே...''

மாலினியின் கோபத்தைக் கண்ட சசிரேகா.. ஆறுதல் கொண்டவள் போல் புன்னகைத்தாள். அவளின் கை.. மாலினியின் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டது.



*புலர்கின்ற பொழுதில்...*
*உன் முகம் கண்ட என் கனவை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

''மாலு.. நீ இங்கே வந்து தங்கி வேலை பார்க்க சித்தப்பா என்னிடம் அனுமதி கேட்டபோது நான் எவ்வளவு சந்தோஷப்பட்டுப் போனேன் தெரியுமா?''

''எதற்குடி.. உன் கூட சேர்ந்து கொள்ள இன்னொரு ஊமை வந்து அகப்படப் போகிறாள்னா? ஏண்டி.. இப்படி வாயிருக்கும் ஜீவன்களை.. வாயிருந்தும் ஊமையாக மாற்றும் வீடு இதுன்னு என்னிடம் ஒரு வார்த்தை சொன்னாயா நீ ?''

''சொல்லியிருந்தால் என்ன செய்திருப்பாய்?''

''உன் வீட்டுப் பக்கமே.. ஏன்.. உன் இந்த அருமையான வீடு இருக்கும் ஏரியாப் பக்கமே தலை வைத்துப் படுத்திருக்க மாட்டேன்..''

''அதனால்தான் சொல்லவில்லை..''

''என்ன ஒரு நல்லெண்ணம். ஏண்டி.. என்னைப் பற்றி உனக்கே தெரியும்தானே. நான் மனதில் நினைப்பதை



பேசித் தொலைப்பேண்டி. என்னைக் கொண்டு வந்து இந்த வீட்டில் சிக்க வைத்திருக்கிறாயே.. எத்தனை நாளாய் என்னை இப்படிப் பழிவாங்கக் காத்திருந்தாய்?''

''மாலு... உன்னைப் போல் ஒருத்திதாண்டி எனக்கு வேண்டும்..''

''எதற்கு.. உன் கதையை நான் கேட்க.. என் கதையை நீ கேட்பதற்கா?''

''ஒருவகையில் அப்படித்தான்னு வைத்துக் கொள்ளேன்..''

''அடிப்பாவி.. அதையும் நீ ஒப்புக்கொள்கிறாயா?''

''மனம்விட்டுப் பேச எனக்கென்று ஒரு ஜீவன் இந்த வீட்டில் இல்லைடி...''

''இது என்னடி வேடிக்கையாய் இருக்கு.. உன் ஹஸ்பெண்ட் இருக்காரில்ல.. அதுவும் காதலித்துக் கல்யாணம் பண்ணிக் கொண்ட காதல் கணவன். அவரைப் பார்த்தால் உனக்கென்று இருக்கும் ஒரு ஜீவனாக உன் கண்ணிற்குத் தெரியவில்லையா?''

இயல்பாக இதைக் கேட்டுவிட்டு சசிரேகாவின் முகம் பார்த்த மாலினி.. அவள் ஏன் அப்படி வெட்கப்படுகிறாள் என்று புரியாமல் திருதிருவென்று விழித்தாள்.

''அது.. அது.. அது வந்து மாலினி...''

''அதுதான் நீயும் இந்த வீட்டிற்கு மருமகளாய் வந்து விட்டாய்.. உன் உறவைப் பிடித்துக் கொண்டு விருந்தாளியாய் நானும் வந்து விட்டேனில்ல.. அப்புறமும் எதுக்கு இப்படி வந்து போயின்னு மென்று விழுங்குகிறாய்.. விஷயத்தைச் சொல்லு?''

''அவர்... தினமும் காலையில் ஃபேக்டரிக்குப் போனால் நைட்டாகும்போதுதான் திரும்பி வருவார்..''

''வரட்டுமே.. அதற்கும் நீயும் அவரும் பேசிக் கொள்வதற்கும் என்னடி சம்பந்தம்?''

''அதற்குப் பின்னால் அவரிடம் பேச உட்கார்ந்தால் அவரும் பேசமாட்டார்.. என்னையும் பேச விட மாட்டார்டி...''

''அது ஏண்டி.. அப்படி?''

''உனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை மாலினி..''

''ஆகா.. கண்டுபிடித்துவிட்டாயே... உலக மகா கண்டுபிடிப்புதான்.. நீ கெட்டிக்காரிதான். பிழைத்துக் கொள்வாய்..''

''அடிப்போடி இவளே.. உனக்குக் கல்யாணமாகியிருந்தால் இது புரிந்திருக்கும். பேசாமல் வாயை மூடிக் கொண்டு உள்ளே வா...''

இவள் ஏன் இப்படி அதட்டல் போடுகிறாள் என்ற கோபம் மனதிற்குள் சுருசுருவென்று எழ.. மாலினி.. சசிரேகாவை முறைத்தாள்.

''பசியோடு வந்து நிற்பவளுக்கு ஒரு துண்டு இட்லியைக்கூடக் கண்ணில் காட்டாமல்.. இவ்வளவு நேரமும் உன் வீட்டில் பேச முடியாத கொடுமைக் கதையை என்னிடம் பேசிக் கொட்டித் தீர்த்தவள் நீ.. இப்போது என்னைப் பார்த்து வாயை மூடச் சொல்கிறாய்.. இப்போது தெரியுதடி.. ஏன் உன்னை இந்த வீட்டில் பேசா மடந்தையாய் ஆக்கி வைத்திருக்கிறார்கள் என்று..''

''ஐயோ மாலினி.. அதெல்லாம் உனக்குப் புரியாது..''



''புரியாவிட்டால் போகுது விடு. பேசாமல் ஒரு குழந்தையைப் பெற்றுக் கொண்டு அதனுடன் கொஞ்சிப் பேசு. அதை யாரும் தடுக்க வர மாட்டார்களே..''

''நல்ல ஐடியாதான்..''

''நான் மோசமான ஐடியாவைச் சொல்ல மாட்டேன்..''

''ஆனால்.. இப்போதைக்கு என் வீட்டுக்காரர் குழந்தை பெற்றுக் கொள்ளக்கூடாது என்கிறாரே..''

''இது என்னடி கதையாய் இருக்கு. ஏன் அப்படிச் சொல்கிறார்?''

''அவருடைய அண்ணனுக்கு இன்னும் கல்யாணம் ஆகிவில்லை மாலினி...''

''அதுதான் எனக்குத் தெரியுமே..''

''எப்படித் தெரியும்?''

''ப.. ப.. சொன்னார்...''

''ப.. ப.. வா?''

''அதுதாண்டி.. பழம்பெருமை பரந்தாமன்..''

''அடிப்பாவி.. அவருக்கு பட்டப்பெயரே வைத்துவிட்டாயா?''

சசிரேகா தன் பேசாத விரதத்தை மறந்து பொங்கிச் சிரித்தாள். அவள் கண்களில் நீர் துளிர்த்துவிட்டது.

''இப்படிச் சிரித்து எத்தனை நாள்களாகி விட்டன மாலினி..''

''ஐந்தறிவு உள்ள விலங்குகளுக்கும் ஆறறிவு உள்ள நமக்கும் உள்ள வித்தியாசம் இந்த சிரிப்புதான்.. அதையே மறந்துவிட்டாய்னு சொல்கிறாயே.. உனக்கே இது அநியாயமாய் தெரியவில்லையா?''

மாலினி கோபத்துடன் கேட்க.. மனப்பூர்வமாய் 'இல்லை' என்று தலையாட்டினாள் சசிரேகா.

''உனக்கே தெரியும் மாலினி.. என் வீட்டினரின் நிலை என்ன என்பது. நீ வசதியான குடும்பத்தில் பிறந்து வாழ்ந்தவள். சித்தப்பா ஸ்டேட் கவர்ன்மெண்டில் பெரிய வேலையில் இருக்கிறார். அண்ணன் வெடரினரி டாக்டர். சென்னையில் சொந்தமாக வீடு, கார் என்று வாழ்ந்தவள் நீ. வாடகை வீட்டில் வருகின்ற வருமானத்தில்.. வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி படிக்க வேண்டி வந்த என் நிலைமை உனக்குத் தெரியும்தானே...''

''சசி...''

''நான் காலேஜில் படித்துக் கொண்டிருந்தபோது எங்கள் காலேஜ் ஃபங்ஷனுக்கு சீஃப் கெஸ்டாய் வந்தவர்தான் என் வீட்டுக்காரர். அந்த விழாவில் நான் ஆடிய நடனத்தைப் பார்த்து மயங்கிப் போய் என்னைக் காதலிக்க ஆரம்பித்து விட்டார்..''

''ஏன்.. நீ அவரைக் காதலிக்கவில்லையா?''

''நான் அப்படிச் சொன்னேனா.. எனக்கும் அவர் மேல் காதல் வந்துவிட்டது. அவரின் வசதியைப் பற்றி அறிந்ததும் என் காதல் நிறைவேறாதுன்னு நினைத்து அவரிடமிருந்து விலகிவிடத்தான் நினைத்தேன். ஆனால்.. தெய்வம் போல் வந்து நின்றார் அவருடைய அண்ணன்...''

''யாரை தெய்வம் என்கிறாய்.. இந்த வீட்டு ஹிட்லரையா?''

''எனக்கு இது.. அப்போது தெரியாதே...''

''ஐஸீ... மேலே சொல்லு...''

''அவர் கல்யாணத்திற்கு முன்னாலேயே எங்கள் கல்யாணத்தை நடத்தி வைத்தார். இப்படி ஒரு அதிர்ஷ்டம் எனக்குக் கிடைத்த பின்னால்.. பேசவும் சிரிக்கவும் முடியாமல் போனது எனக்கு பெரிய விஷயமாய் ஆரம்பத்தில் தோன்றவில்லை...''



''இப்போது தோன்றுகிறதா?''

''ஆமாம்.. மூச்சு முட்டுகிறது..''

''அளவுக்கு மீறினால் அமிர்தமும் நஞ்சு.. அளவுக்கு மீறிய கட்டுப்பாடு.. அதுதான் உன் பிரச்னையே...''

''ம்ம்.. இதில் நீ சொன்னது போல் நான் நினைத்தவுடன் குழந்தை பெற்றுக் கொள்ள முடியாது மாலினி. ஏற்கெனவே அண்ணன் இருக்கும்போது.. தான் முதலில் கல்யாணம் பண்ணிக் கொண்டோமென்ற குற்ற உணர்வு.. என் கணவரின் மனதில் இருக்கிறது. அதனாலேயே.. வீட்டிலிருக்கும் மற்றவங்க முன்னால் என்னிடம் பேசக்கூட யோசிப்பார்..''

''இதில் சிரிப்புக்கு எங்கே போகிறது..''

''புரிந்துகொண்டாய். அதனால்.. அண்ணனுக்கு கல்யாணமாகி அவர் குழந்தை பெற்றுக் கொள்ளும் வரையில் நாங்கள் குழந்தை பெற்றுக்கொள்ளக்கூடாதுன்னு தீர்மானமாய் இவர் சொல்லிவிட்டார்..''

''அப்படியா விஷயம்?''

''அப்படித்தான்..''

பேச்சை பாதியிலேயே நிறுத்திவிட்டு சசிரேகா வாய்மூடிக் கொள்ள... அவள் எதிரில் நின்று.. உள்ளேயிருந்து வந்து கொண்டிருந்த பரந்தாமனைத் திரும்பிப் பார்க்காமலேயே ''வாங்க பரந்தாமன் சார்..'' என்றாள் மாலினி.

''அது எப்படிம்மா.. என்னைத் திரும்பிப் பார்க்காம லேயே கரெக்டாகக் கண்டுபிடித்தீங்க?''

பரந்தாமன் பொங்கிப் பூரித்துவிட்டார். சசிரேகாவின் முகம் பார்த்துக் கண்களைச் சிமிட்டிக் கொண்டே மாலினி பதில் சொன்னாள்.

''எனக்கு முதுகிலும் ஒரு கண்ணிருக்கு சார்..''

''உங்களுக்குத்தானே... இருந்தாலும் இருக்கும். சின்னம்மா.. உங்க இரண்டு பேரையும் பெரியம்மா கூப்பிடுகிறாங்க..''

பரந்தாமன் போய்விட.. சசிரேகாவின் முகத்தைப் பார்த்த மாலினி புருவம் உயர்த்தினாள். சற்றுமுன் மாலினி யிடம் சகஜமாய் பேசிக்கொண்டிருந்த சசிரேகாவின் முகத் தில் இனம்புரியாத கலவரம் தெரிந்தது.

அதைக் கண்டுகொள்ளாதவள் போல் வேடிக்கையாய் பேசி அவளை சகஜமாக்க முயன்றாள் மாலினி.

''ஏன் சிரி.. என் அம்மா.. சென்னையில் இல்ல இருக் கிறாங்க. இவர்.. இங்கே வந்து பெரியம்மான்னு சொல் கிறாரே...''

''சும்மாயிரு மாலினி.. அவர் என் மாமியாரைத்தான் அப்படிச் சொல்கிறார்..''

''அதைச் சொல்லு.. அவருக்குத்தான் உன் மாமியார் மேல்.. சாமியாரின் மேலிருக்கும் பக்தியைப் போல பக்தி பொங்கி வழிகிறதே...''

''நான் வாசலில் பேசியது என் மாமியாருக்குத் தெரிந் திருக்குமோ... எனக்கு பயமாய் இருக்கிறது மாலினி...''

இப்படிச் சொன்னவளின் இருண்ட முகத்தை யோசனை யுடன் பார்த்தாள் மாலினி.





*கார்காலப் பொழுதில்...*
*என் கனவு சொன்ன தூதை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

சசிரேகா அவசரமாக வீட்டுக்குள் செல்ல.. அவளைப் பின்தொடர்ந்து சென்றாள் மாலினி. ஹாலின் நடுமையத் தில் மாலினியின் பெட்டிகளை வைத்து.. அதன் மேல் பெரிய டிராவல் பேக்கை வைத்துவிட்டு பரந்தாமன் சென்றிருக்க.. அங்கிருந்த பெரிய சோபாக்களில் நடு நாயகமாக இருந்த சோபாவில் கால் மேல் கால் போட்டு தோரணையாய் சாய்ந்து அமர்ந்திருந்தாள் அந்தப் பெண்மணி.

சந்தன நிறத்தில் கெட்டி ஜரிகையிட்ட புடவை யுடுத்தி... நெற்றியில் சந்தக் கீற்று வைத்து.. தங்கத் தினாலேயே பிரேமிட்ட மூக்குக் கண்ணாடியை லேசாக சரிசெய்து கொண்டு சசிரேகாவை மூக்குக் கண்ணாடிக்குள் விழியுருட்டி உறுத்துப் பார்த்தாள் அவள். அந்தப் பார்வை யைக் கண்டு சசிரேகா நடுங்கிய நடுக்கத்தைக் கண்டு அவள்தான் சசிரேகாவின் மாமியார் நர்மதா என்பதை மிகச் சரியாக யூகித்துக் கொண்டாள் மாலினி.

'அடேங்கப்பா.. மகாராணி போல் என்னவொரு கம்பீரம். ஜமீன் வம்சம் என்பது அப்படியே தெரிகிறதே... இப்படியிருக்கும் இந்த அம்மாவிற்கு.. காலில் பூப்போட்டு பரந்தாமன் கும்பிடுவதில் ஆச்சரியம் இல்லை..'

வைரங்கள் ஒளிர அமர்ந்திருந்த நர்மதா.. மாலினியை ஏற இறங்கப் பார்த்தாள். பின் வீரபாண்டிய கட்டபொம்மன்

திரைப்படத்தில் வரும் வெள்ளைக்கார உயர் அதிகாரி வினவியதைப் போல..

''நீதான் மாலினி என்பதோ?'' என்று வினவினாள்.

'நீங்கள்தான் சசிரேகாவின் மாமியாராகப் பட்ட மேன்மைமிகு நர்மதா என்பதோ..!' என்று பதிலுக்கு கேட்க லாமா என்று யோசித்த மாலினி... பக்கத்தில் மருண்ட பார்வையுடன் நின்றுகொண்டிருந்த சசிரேகாவின் முகத் தைப் பார்த்ததும் அந்த யோசனையை உடனடியாக கைவிட் டாள்.

'எதற்கு வம்பு... இதுதான் உன்னைப் பெற்றவர்கள் உன்னை வளர்த்து வைத்திருக்கும் லட்சணமா என்று இவங்க கேட்டு வைப்பாங்க. சென்னையில் தேமே என்று தாங்களுண்டு தங்கள் வேலையுண்டு என்று இருக்கும் என்னைப் பெற்றவர்களுக்கு ஏன் அந்தப் பெயரை வாங்கி வைக்க வேண்டும்...' என்ற யோசனையுடன்,

''ஆமாம் மேடம்..'' என்றாள் மாலினி.

''மேடமா?'' அவள் சசிரேகாவைப் பார்க்க... சசிரேகா கைகளைப் பிசைந்தாள்.

'இது என்ன... இந்த அம்மா... என்னைக் கேள்வி கேட்டுவிட்டு சசியை முறைக்கிறாங்க. கேள்வி இங்கே... பார்வை அங்கேயா...'

''நான் எதுவும் தவறாக சொல்லிவிட்டேனா மேடம்?'' என்று மாலினி மீண்டும் ஒரு மேடத்தைப் போட்டு வைத்தாள்.

நர்மதாவின் முகத்தில் மெல்லிய சிரிப்பின் ரேகை ஓடியது.

''எதனால் என்னைப் பார்த்து மேடம் என்று சொல் கிறாய்?''



''உங்களைப் பார்த்ததும் என் மனதில் பொங்கி வரும் மதிப்பும் மரியாதையும்.. அப்படிச் சொல்ல வைக்கிறது மேடம்..''

மாலினி இதைப் பவ்யமாய் நர்மதாவிடம் சொன்ன விதத்தைக் கண்டு சசிரேகா அயர்ந்துவிட்டாள்.

'இது மாலினிதானா... இவளுக்கு இப்படியெல்லாம் அடக்க ஒடுக்கமாய் நின்று பேசக்கூடத் தெரியுமா.. அவள் ஆச்சரியத்தில் இமை மூடித் திறந்தாள்.

''பரவாயில்லையே... நன்றாகப் பேசுகிறாயே... உன்னைப் பெற்றவங்க நன்றாகத்தான் உன்னை வளர்த் திருக்கிறாங்க...''

'ஆஹா.. ஒருவழியாய் என்னைப் பெற்றவங்களுக்கு இந்தம்மா வாயால் நல்ல பெயர் வாங்கிக் கொடுத்துவிட் டேன்..' என்று மாலினி நிம்மதிப் பெருமூச்சு விட்டாள்.

''உங்களைப் பற்றியும்.. இந்தக் குடும்பத்தின் அருமை... பெருமைகளைப் பற்றியும் அப்பாவும் அம்மா வும் நிறையச் சொல்லி அனுப்பினாங்க மேடம்..'' என்று சொல்லும்போதே.. அந்த நிறையச் சொல்லிய விஷயங்கள் என்ன என்ன என்பது மாலினியின் நினைவில் தோன் றியது.

''அந்த அம்மா ராங்கி பிடிச்ச பொம்பளையாம் மாலினி... அது போட்டிருக்கும் மூக்குக்கண்ணாடிகூட தங்கத்திலேயே செய்ததாம். வைரமும்.. பிளாட்டினமுமாய் வேளைக்கு ஒரு நகை போடுமாம். பணக்கார இடம். பார்த்து நடந்து கொள். அதுகிட்ட அதிகமாய் பேச்சு வைத்துக் கொள்ளாதே. போனோமா... வேலையைப் பார்த்தோமான்னு இருக்கணும். புரிந்து நடந்து கொள்...'' என்றாள் காவேரி.

''சசியின் மாமியார் முன்னால் யாரும் பேசவே பயப்படுவாங்களாம்.. என் தம்பி குடும்பத்தை மனுஷரா மதித்ததே இல்லையாம். அந்த அம்மாளின் திமிரைப் பற்றிக் கேள்விப்பட்டும் உன்னை அவங்க வீட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டியதாகப் போய்விட்டது மாலினி.. வேறு வழியில்லை. அந்த வீடுதான் உனக்குப் பாதுகாப்பாக இருக்கும். ம்ஹூம்.. மனிதரை மதிக்கத் தெரியாத பிறவியான அந்தம்மா இருக்கிற வீட்டுக்குப் போகப் போகிறாய்.. பார்த்து இரும்மா. கூடுமானவரை அவங்க கண்ணில் படாமல் இருக்கப் பார்..'' என்றார் ஜானகிராமன்.

இப்படிப் பெருமையாய் தன் பெற்றோர் கூறியதை இந்த அம்மாவிடம் சொன்னால்.. இந்த அம்மாவின் முகம் எப்படி மாறிவிடும் என்று நினைத்துப் பார்த்த மாலினிக்கு லேசாக சிரிப்பு வந்தது.

''பரவாயில்லை.. சிரிச்ச முகமாய் இருக்கிறாய்.. சசியின் சித்தப்பா மகளுக்கு சிரிக்கக்கூடத் தெரியுமா?'' நர்மதா மருமகளை கூரிய பார்வை பார்த்த வண்ணம் வினவினாள்.

'அதுசரி... சசிக்கு சிரிக்காமல் இருக்கத்தான் தெரியாது. அவளின் சிரிப்பைப் பிடுங்கிக் கொண்டு சவடால் வேறு அடிக்கிறீங்களா..' என்று நன்றாக நான்கு கேள்விகள் கேட்டு வைக்க வேண்டும் என்று மாலினிக்குத் தோன்றியது.

ஆனால், அவள் அப்படிச் செய்துவிடப் போகிறாளே என்ற பயத்துடன்.. விழியால் எச்சரித்த சசியின் பயந்த பார்வையைக் கண்டதும் தன் எண்ணத்தினைக் கைவிட்டவளாய் மாலினி அமைதியை வரவழைத்துக் கொண்டு நர்மதாவைப் பார்த்தாள்.

''இந்த வீட்டிற்குள் வந்து உங்கள் முகத்தைப் பார்த்த பின்னாலும் ஒருவருக்கு கவலை முகம் வருமா?'' என்று



மீண்டும் ஒரு ஐஸ்கட்டியைத் தூக்கி நர்மதாவின் தலையின் மேல் வைத்தாள்.

இப்போது நர்மதா வாய்விட்டுச் சிரித்தாள்.

''பரவாயில்லை சசி.. உன் சித்தப்பா மகள் கெட்டிக்காரியாகத்தான் இருக்கிறாள். பிழைத்துக் கொள்வாள்..'' என்று மருமகளைப் பார்த்து சொன்னாள்.

'இந்தம்மா சொல்லாவிட்டால் நான் பிழைத்துக் கொள்ள மாட்டேனா..' மாலினி விழிகளால் சசியிடம் வினவினாள்.

அவசரமாய் தன் பார்வையை விலக்கிக் கொண்ட சசியை நினைத்து மனதிற்குள் பரிதாபம் மேலிட..

''பிழைக்கத்தானே இந்த ஊருக்கு வந்திருக்கிறேன் மேடம்?'' என்று கூறினாள் மாலினி.

''புரியவில்லையே..'' தன் மூக்குக்கண்ணாடியை சரிசெய்தபடி வினவினாள் நர்மதா.

''ஐ மீன்.. வேலை செய்வதற்காகத்தானே இந்த ஊருக்கு வந்திருக்கிறேன்... அதைச் சொன்னேன் மேடம்..''

''பரவாயில்லையே.. நீ கெட்டிக்காரி மட்டுமில்லை.. புத்திசாலியும்கூட... நீ பேசுவது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது...''

'இப்படிக் குல்லாய் போட்டு.. ஜால்ரா அடித்தால் யாருக்குத்தான் பிடிக்காது...'

எண்ணியதை வெளியே சொல்லாமல் இதழ் விரியச் சிரித்தாள் மாலினி.

''எனக்கும் உங்களை ரொம்பப் பிடித்திருக்கிறது..''

''நேற்று எந்நேரம் வீட்டை விட்டுக் கிளம்பினாய்..''

''ஈவினிங் டைம் மேடம்..''

''ஐயோ பாவம்.. விடிய விடிய பஸ் பிரயாணம் செய்து களைத்துப் போய் வந்திருப்பாய்...''

'அதுகூட உங்களுக்கு நினைவிருக்கிறதா..'

''பசியோடு இருப்பாய்...''

'அப்பா.. இப்போதாவது என் வயிற்றுக்கு எதையாவது ஈய வேண்டுமென்ற ஈகை குணம் உங்களுக்கு வந்ததே...'

''போய் குளித்துவிட்டு வந்து சாப்பிடு...''

'எங்கே போய் குளிப்பது?'

''எது பேசினாலும்... பதில் பேசாமல் அமைதியாய் நிற்கிறாயே... அப்படியே சசியின் குணம்தான்.''

'ஐயையோ... என்னையும் அவளைப் போல் ஆக்கி விடத் திட்டம் போட்டு விட்டீங்களா...'

''ஆனால், ஒரு விஷயம் மாலினி...''

''என்ன விஷயம் மேடம்?''

''வார்த்தைக்கு வார்த்தை மேடம் போடுகிறாயே.. இதுதான் விஷயம்...''

''ஏன் மேடம்?''

''திரும்பவும் மேடமா?''

''ஐ ஆம் ஸாரி.. ஆனால், மரியாதைக்குரிய உங்களை வேறு எப்படித்தான் கூப்பிடுவது?''

''அத்தையென்று கூப்பிடுவது...''



''என்னடா இது... மனிதரை மதிக்காத பிறவின்னு அப்பா இந்தம்மாவைப் பற்றி சொன்னார். ராங்கி பிடித்த பொம்பளைன்னு அம்மா சொன்னாங்க. இந்தம்மா என்னடா வென்றால்.. உறவுக்கு கை கொடுக்கிறாங்களே..''

''அது வந்து.. நான் எப்படி உங்களைப் போய் அத்தையென்று கூப்பிடுவது?''

''ஏன் வாயால்தான் கூப்பிட வேண்டும்.. ஹ.. ஹ..''

சசிரேகாவிற்கு மாமியாரின் சிரிப்பைக் கண்டு ஆச்சரியம் வந்துவிட்டது. வெள்ளைக் காக்கா பறந்து போயிருந்தால்கூட அப்படி விழி விரிய அதிசயமாய் பார்த் திருக்க மாட்டாள். மாமியார் சிரிப்பதை அத்தனை அதிசய மாய் பார்த்து.. நம்ப முடியாமல் மீண்டும் இமை மூடித் திறந்தாள்.

'ஜோக்கடித்து விட்டாங்களாக்கும்.. இந்தம்மா ஜோக்கை இவங்களேதான் ரசித்துச் சிரிக்க வேண்டும்..' என்று எண்ணியபடி சசிரேகாவைப் பார்த்த மாலினிக்கு தூக்கிவாரிப் போட்டது.

'இவள் ஏன்.. இவளுடைய மாமியாரை மியூஸியத் தில் வைத்திருக்கும் அபூர்வ விலங்கினம் போல் பார்க் கிறாள்...'

மாலினிக்கு சசிரேகாவின் திகைத்த தோற்றத்தைக் கண்டதும் சிரிப்பு வந்துவிட்டது. அவள் வாய்விட்டுச் சிரித்தாள். அந்தச் சிரிப்பை தன்னுடைய நகைச்சுவையை ரசித்துதான் அவள் சிரிப்பதாக நர்மதா எண்ணிக் கொண்டு இன்னும் பலமாக கலகலவென்று சிரித்தாள்.



*இமையோரம் உன் நினைவில்...*
*என் இதயம் வாழும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல?*

அந்த ஹாலில் நர்மதாவுடன் இணைந்து... மாலினி சிரிக்கும் சத்தத்தை வியப்புடன் கேட்டபடி மாடியிலிருந்து இறங்கி வந்தான் கருணாகரன்.

காலடியோசையிலேயே அது கணவன் என்பதை கண்டுபிடித்துவிட்ட சசிரேகா.. முகம் மலரக் கணவனிடம் திரும்பினாள்.

''என்னங்க... இவள்தான் மாலினி.. என் சித்தப்பாவின் மகள்.. மாலினி.. இவர்தான் என் கணவர்...''

கருணாகரனைக் கண்டதும் சிரிப்பை வாயில் புதைத்துக் கொண்ட மாலினி.. மரியாதையுடன் கைகுவித்தாள்.

''வணக்கம்...''

''வாங்க...''

சிறு தலையசைவுடன் பதில் சொன்ன கருணாகரனிடம் சங்கடத்துடன் பேசினாள் மாலினி.

''எனக்குப் போய் வாங்க.. போங்கன்னு மரியாதை கொடுக்க வேண்டாம்...''

''அப்படியென்றால் சரிம்மா.. இனி வா.. போ என்றே கூப்பிடுகிறேன். அம்மா.. இந்தப் பெண்தான் மாலினி...''

''இதை நீ எனக்குச் சொல்கிறாயா. இவ்வளவு



நேரமாக இந்தப் பெண்ணுடன்தான் நான் பேசிக் கொண்டிருந்தேன்..''

''நான் வரும்போது இரண்டு பேரும் சிரித்துக் கொண்டு இருந்தீர்களே...''

''அதுவா கருணா... மாலினி என்னை மேடம் என்று கூப்பிட்டாள். நான் அத்தையென்று கூப்பிடச் சொன்னேன். அவள்... அப்படி எப்படிக் கூப்பிடுவது என்று கேட்டாள். நான் உடனே வாயால்தான் கூப்பிட வேண்டும்னு சொன்னேன்... இது எப்படி இருக்கு.. ஹ.. ஹா...''

'நல்லாவே இல்லை...' என்று சொல்லத்தான் மாலினி ஆசைப்பட்டாள்.

ஆனால்.. தாயோடு இணைந்து புன்னகைத்த கருணாகரனைக் கண்டதும் வாய்மூடிக் கொண்டாள்.

''புதியவள்தானே அம்மா.. நம்மையெல்லாம் இப்போதுதான் பார்த்திருக்கிறாள். அதனால் தயக்கமாய் இருந்திருக்கும்..''

''நீ சொல்வது சரிதான் கருணா. ஆனால்.. நாம் நமக்காக மட்டுமே எப்போதும் பார்க்க முடியுமா.. வீடு நிறைய வேலையாள்கள் இருக்கிறார்கள். அவர்கள் காதில்.. மாலினி 'மேடம்' என்று என்னைக் கூப்பிடுவது விழுந்து வைத்தால் என்ன செய்வது.. நாம் உறவுக்காரப் பெண் என்று சொல்லியிருக்கிறோம். அவங்க முன்பின் தெரியாத.. அயல்வீட்டுப் பெண் என்று நினைத்துவிடக் கூடாதில்லையா?''

இதில் இத்தனை விஷயம் அடங்கியிருக்கிறது என்று மாலினிக்கு இப்போதுதான் புரிந்தது. அவள் நர்மதாவை புதிதாய் தோன்றிய மதிப்புடன் வியப்பாக பார்த்தாள்.

சும்மா ஒன்றும் பரந்தாமன் புகழ்ந்துவிடவில்லையென்று அவளுக்கு தோன்றியது.

''கேட்டாயா மாலினி...'' கருணாகரன் நட்புடன் புன்னகைத்தான்.

''கேட்டேன் சார்..'' என்று மரியாதையுடன் மாலினி பதில் சொல்லி வைக்க...

''என்ன சொன்னாய்... சாரா?'' என்று கேட்டு நர்மதா இன்னும் சிரிக்க ஆரம்பித்தாள்.

கருணாகரனின் முகத்திலும் சிரிப்புத் தோன்ற, அவன் மனைவியைப் பார்த்தான். இப்போது சசிரேகாவும் சிரித்துக் கொண்டிருந்தாள்.

''நல்லா 'சார்' போட்ட போ.. இவர் உனக்கு அக்கா வின் கணவர் இல்லையா?'' என்று நர்மதா கேட்க,

'நான் அதை எப்போது மறுத்தேன்?' என்ற நினை வுடன் மாலினி.. 'ஆமாம்' என்ற பாவனையில் தலையை அசைத்தாள்.

''சசி.. உன் தங்கையிடம் சொல்லிவிடம்மா.. என்னை அத்தையென்றுதான் அழைக்க வேண்டும்.. உன் கணவரை அத்தான் என்றுதான் அழைக்க வேண்டும்..''

''சரிங்க அத்தை...''

''மாலினிக்கு எந்த ரூமை கொடுக்கலாம்?''

''நீங்களே சொல்லுங்கள்..''

''மாடியிலிருக்கும் கெஸ்ட் ரூம்களில் ஒன்றைக் கொடு..''

''சரிங்க அத்தை...''

''இவள் வேலைக்கு எப்போது போக வேண்டுமாம்?''



''நாளைக்குப் போக வேண்டுமாம்..''

''அப்படியா... ம் ம்... கருணா...''

''அம்மா...''

''இவள் வேலை பார்க்கப் போகும் மில் எங்கே இருக்கிறது?''

''தக்கலையில் இருக்கிறதும்மா...''

''ஓஹோ... இங்கேயிருந்து தினமும் எப்படி அங்கே போய் வேலை பார்த்துவிட்டு வரப் போகிறாள்?''

'இந்தக் கேள்விக்கு என்ன அர்த்தம்?' என்று திகைத்துப் போய் சசிரேகா கணவன் முகத்தைப் பார்த்தாள்.

வீட்டில் உள்ள அனைவரிடமும் சம்மதம் வாங்கிய பின்னர்தான் அவள் மாலினியை வரச் சொல்லியிருந் தாள். இப்போது மாமியார் இப்படிப் பேசுவது ஏன் என்று அவளுக்குப் புரியவில்லை.

ஆனால், மாலினி அந்தக் கேள்வியை இலகுவாக எடுத்துக் கொண்டு நர்மதாவிற்கு பதில் சொன்னாள். சென்னையில் பிறந்து வளர்ந்தவளுக்கு போக்குவரத்து ஒரு பிரச்னையாகவே தோன்றவில்லை.

''நான் பஸ்ஸிலே போய் கொள்வேன் மேடம்.. ஸாரி.. ஸாரி.. அத்தை...''

நர்மதா.. மாலினியின் தடுமாற்றமான அத்தையைக் கேட்டுப் புன்னகைத்தாள்.

''உனக்கு இது புரியாதும்மா..''

''ஏன்... எனக்குப் பஸ்ஸில் போய் வந்து பழக்கம் உண்டு அத்தை.. நான் சென்னைக்காரி...''

''ஆனால், இது சென்னையில்லைம்மா.. மார்த் தாண்டம்..''

''அதனால் என்ன?''

''இங்கே.. நீ இன்னார் வீட்டு உறவுக்காரப் பெண் என்றுதான் பார்ப்பார்கள். எங்கள் வீட்டில் இருந்து கொண்டு நீ பஸ்ஸில் போய் வருவது சாத்தியப்படாது...''

'என்னடா.. இது..' என்று அலுப்பாக இருந்தது மாலினிக்கு.

நினைத்தவுடன் பஸ்ஸையோ ஆட்டோவையோ பிடித்து கல்லூரிக்கும் கடைகளுக்கும் போய் வந்து பழக்கப் பட்டவள் அவள். சுதந்திரமாய் இருந்தவளுக்கு ஏதோ சிறையில் வந்து மாட்டிக் கொண்டதைப் போல முதல் நாளிலேயே மூச்சு முட்டியது.

சசிரேகாவை ஏக்கத்துடன் பார்த்தாள். அவள் செய்வது அறியாதவளாய் கணவனைப் பார்த்தாள். அவனோ தாயின் வாய்மொழியை அறிய அவள் முகம் பார்த்தான். நர்மதா வாய் திறந்தாள்..

''கருணா...''

''அம்மா...''

மாலினிக்கு ஏனோ அந்தக் காலத்து மகாராணி ஒருத்தி அரியாசனத்தில் அமர்ந்துகொண்டு 'யாரங்கே..' என்று அழைப்பது போலவே இருந்தது.

''பரந்தாமனிடம் சொல்லிவிடு.. தினமும் காலையில் மாலினியைக் கொண்டு போய் விட்டுவிட்டு.. மாலையில் வேலை முடிந்ததும் கூப்பிட்டுக் கொண்டு வந்துடட்டும்..''

''ஆகட்டும்மா...''

'ம்ஹூம்.. இனி தினமும் இந்த வீட்டினரின் பாரம் பர்ய பெருமையை காது புளிக்கப் பரந்தாமன் பேச.. நான் விதியே என்று 'உம்' கொட்ட வேண்டுமா...'



மானசீகமாய் தலையில் கை வைத்துக் கொண்டாள் மாலினி. சசிரேகாவோ தன் சித்தப்பாவின் மகளுக்கு வீட்டில் கிடைத்துவிட்ட பாதுகாப்பைக் கண்டு முகம் மலர்ந்து போய் மாலினியைப் பார்த்தாள்.

கருணாகரன், சசிரேகாவிடம் மெதுவாக எதையோ கூற.. அவள் அவசரமாய் தலை அசைத்தாள். அவன் நர்மதாவின் அருகே அமர்ந்து பேச ஆரம்பிக்க.. சசிரேகா மாமியாரின் முகத்தைப் பார்த்தாள்.

''சரிம்மா.. உன் தங்கைக்கு ரூமைக் காட்டு...''

நர்மதா ஒருவழியாய் விடுதலை கொடுக்க.. உத்தரவு கிடைத்துவிட்ட நிம்மதியுடன் மாலினியைப் பார்த்தாள் சசிரேகா.

''வா மாலினி...''

''பொறு சசி.. என் பெட்டிகளைத் தூக்கிக் கொள் கிறேன்..''

மாலினி பெட்டிகளுக்கு அருகே சென்று குனிந்து தூக்க முயல.. பதற்றத்துடன் சசிரேகா அவளைப் பிடித்து நிறுத்தினாள். அவள் பார்வை செய்யக்கூடாத செயலை மாலினி செய்வதைக் கண்டிப்பதைப் போல அவளைப் பார்த்தது...

''ஏன்.. சசி..'' மாலினி புரியாமல் வினவினாள். சசிரேகா பதில் சொல்லாமல் மாமியாரைப் பார்க்க... அவள் உள்பக்க மாய் திரும்பி...

''பொன்னி...'' என்று குரல் கொடுத்தாள்.

''என்னங்கம்மா..'' என்றபடி இருபத்து நான்கு வயது மதிக்கத்தக்க ஒரு பெண் ஓடிவந்து நின்றாள்.

''நீயும் செந்தாமரையும் சேர்ந்து இந்தப் பெட்டி களைத் தூக்கிக் கொண்டு போய் மாடி ரூமில் வையுங்க...''

நர்மதா பேச்சு முடிந்தது என்பது போல் சசிரேகாவை ஒரு பார்வை பார்த்துவிட்டு மகனின் பக்கம் திரும்பிவிட... மாலினியின் புறங்கையில் ஒரு தட்டு தட்டி.. அவளை அழைத்துக் கொண்டு மாடியேறினாள் சசிரேகா.

மாடிப்படிகளின் முடிவில் நின்று கீழே ஹாலில் அமர்ந்திருந்த நர்மதாவை ஒரு முறை திரும்பிப் பார்த்த மாலினி...

''ஸ்ஸ்... அப்பாடி... இப்பவே கண்ணைக் கட்டுதே... நீ எப்படிடீ இந்த வீட்டில் குப்பை கொட்டுகிறாய்?'' என்று சசிரேகாவிடம் கேட்டு வைத்தாள்.

''வாயைத் திறக்காதே மாலினி.. யார் காதிலாவது விழுந்துவிடப் போகிறது...'' என்று கலவரத்துடன் கூறிய படி சற்று முற்றும் பார்த்துக் கொண்டாள் சசிரேகா...

''இதுதான்.. உன்னுடைய ரூம்..'' சசிரேகா அறை யைத் திறந்துவிட்டாள்.

''அதாவது, நான் தங்கப்போகும் ரூம்..''

''ஆமாம்..''

''அதைச் சரியாகச் சொல்லு.. இல்லாவிட்டால் இந்த ரூமை நான் எப்படிச் சொந்தம் கொண்டாடலாம் என்று உன் மாமியார் தடியைத் தூக்கிக் கொண்டு என்னை அடிக்க வந்து விடுவாங்க...''

''சும்மாயிருடி...''

அறைக்குள் வந்து செந்தாமரையும் பொன்னியும் பெட்டிகளை வைத்துவிட்டுப் போக.. அதுவரை வாயை மூடிக் கொண்டிருந்த சசிரேகா.. அவர்கள் போனதும் அவசரமாக கதவை அடைத்தாள்.

பெட்டிகளில் இருந்த துணிகளை அலமாரியில் அடுக்கிக் கொண்டிருந்த மாலினி.. புருவம் உயர்த்தினாள்.

''எதற்காக இந்த முன்ஜாக்கிரதை நடவடிக்கை சசி?''

''பயமில்லாமல் பேசலாமில்லையா?''

''ஏண்டி.. என்னிடம் நீ பேச யாருக்கு பயப்பட வேண்டும்.. இந்த வீட்டில் நடப்பதையெல்லாம் பார்த்தால் எனக்கு என்னவோ காமெடி ஸீனைப் பார்க்கிறது போலவே இருக்கிறது...''

''இன்னும் நீ ஹிட்லரை நேரில் பார்க்கவில்லை. அவரைப் பார்த்தவுடன் சொல்லு... உனக்கு காமெடி தோன்றுகிறதா... இல்லை டிராஜடி தோன்றுகிறதான்னு...''

சசிரேகாவின் வார்த்தைகளைக் கேட்டதும் மாலினி சிரித்துவிட்டாள். ஆனால்.. சசிரேகா கூறிய அந்த ஹிட்லரை நேரில் பார்த்தபோது.. சசிரேகா கூறியது உண்மையென்று தெரிந்தது.



*நீ சிந்துகின்ற சிரிப்பை...*
*சேகரிக்கும் என் தவிப்பை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

''என்னவோ மாலினி... நீ வந்தபின் எனக்கு தெம்பு வந்தது போல் இருக்கிறது. எங்கே எனக்கு பேச்சே மறந்து விடுமோன்னு நான் பயந்து கொண்டு இருந்தேன்...''

''இப்போது அந்த பயம் உன்னிடமிருந்து எனக்கு வந்துவிட்டது..''

''என்னடி சொல்கிற?''

''இங்கே நான் வந்ததால் உனக்கு பேச்சு, திரும்பவும் கிடைக்கலாம் சசி.. ஆனால், எனக்கு பேச்சு மறந்துபோய் விட்டால் என்ன செய்வது?''

''போடி அரட்டை.. அப்படியெல்லாம் ஆகாது..''

''எந்த தைரியத்தில் சொல்கிறாய்?''

''நீ யாரோ.. இந்த வீட்டில் இருப்பவர்கள் யாரோ என்ற தைரியத்தில்தான் சொல்கிறேன். நான் இந்த வீட்டு மருமகள்.. இவர்கள் சொல் கேட்டு நடக்க வேண்டிய கடமை எனக்கு இருக்கிறது. உனக்கு அப்படியா?''

''ஓ.. அப்படியொரு பாயிண்ட் இருக்கில்ல?''

''ஆமாம்.. அதோடு நீ வேலை செய்ய என்று பகல் முழுவதும் வெளியே சென்று விடுவாய்..''

''தப்பித்துப் போய்விடுவேன்னு சொல்லு...''

''ஒரு வகையில் அப்படித்தான். நான்தான் இருபத்து நான்கு மணி நேரமும் இவர்கள் பார்வையில் இருக்க வேண்டுமே...''

''அந்தக் கொடுமையைச் சொல்லு...''

''சரி.. சரி.. குளித்துவிட்டு வா.. சாப்பிட்டுப் போகலாம்..''

''தேங்க்ஸ் சசி...''

''எதற்குடி எனக்குப் போய் தேங்க்ஸ் சொல்லுகிற.. சென்னையில் இருந்து என் ஊருக்கு வேலைக்கு வந்திருக்கிறாய். உன்னை என் வீட்டில் தங்க வைத்துக் கொள்வது என் கடமையில்லையா?''

''நான் அதற்கு தேங்க்ஸ் சொல்லவில்லை..''

''வேறு எதற்குடி சொன்னாய்?''



''இப்போதாவது எனக்குச் சாப்பாடு போட வேண்டுமென்ற நினைவு உனக்கு வந்ததே... அதற்கு தேங்க்ஸ் சொன்னேன்..''

''உன்னை!''

சசிரேகா பொங்கிச் சிரிக்க.. மாலினி.. மாற்றுடையுடன் குளியலறைக்குள் புகுந்தாள்.

ஆரஞ்சு வண்ண பிரிண்டட் சில்க் புடவையையுடுத்தி அழகாக முடியை பின்னலிட்டு.. தன்னைக் கண்ணாடியில் ஒரு தரம் பார்த்துக் கொண்டாள் மாலினி. கழுத்தினில் போட்டிருந்த இரட்டை வடத்தில் முத்துக்கள் கோத்தது போன்ற செயினும் மூன்று இதழ்களைக் கொண்ட டாலரும் அட்டிகை போலவும் இல்லாமல் நீண்ட செயினைப் போலவும் இல்லாமல் இடைப்பட்டு கழுத்தினில் இருந்து சற்று இறங்கி அழகாக அவளது சேலையின் மேல் படிந்து நின்றது. காதுகளில் பூவிதழ்கள் விரிந்ததைப் போன்ற தோடு கலைநயத்தோடு வடிவமைக்கப்பட்டு இருந்தது.

''யூ லுக் வெரி பியூட்டிஃபுல்..'' என்றாள் சசிரேகா.

''உன்னை விடவா நான் அழகு?''

''இதற்கு நான் என்ன பதிலைச் சொல்ல.. மல்லிகை அழகா.. முல்லை அழகா என்று கேட்பதைப் போல் இருக்கிறது உன் கேள்வி...''

''புலவியாகவே மாறிவிட்டாய்டி... குளித்து முடித்து நீ சொன்னது போல சுடிதாரை மாட்டாமல் சேலையைக் கட்டிக் கொண்டும் விட்டேன். இனியாவது சாப்பாட்டைக் கண்ணில் காட்டு சசி..''

''உன்னோடு முடியாது மாலினி.. வா, போகலாம்..''

அவர்கள் இருவரும் பேசிக்கொண்டே அறையை விட்டு வெளியே வந்ததும்.. ஸ்விட்ச் போட்டது போல்

சட்டென்று சசிரேகாவின் பேச்சு நின்றுவிட்டது. அதற்குப் பழகிப் போயிருந்த மாலினி.. லேசாகத் தோளைக் குலுக்கிக் கொண்டு படிகளில் இறங்கினாள்.

டைனிங் ஹால் மிகப் பெரியதாக இருந்தது. அத்தனை பெரிய ஹாலையும் அடைத்துக் கொண்டு டைனிங் டேபிள் போடப்பட்டு இருக்க.. அதன் இரு முனைகளிலும் இரண்டு சேர்களும் பக்கவாட்டில் ஏறக்குறைய பக்கத்திற்கு பதினொன்று வீதம் இருபத்து இரண்டு சேர்கள் போடப்பட்டிருந்தன.

அந்த டைனிங் ஹாலின் நடுமையத்தில் கூரையிலிருந்து அழகான லஸ்தர் விளக்கு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

திரைப்படங்களில் மட்டுமே இதுபோன்ற வீடுகளையும் டைனிங் ஹாலையும் பார்த்திருந்த மாலினிக்கு நேரில் அவற்றைப் பார்க்கும்போது மலைப்பாக இருந்தது.

இவ்வளவு பெரிய அரண்மனை போன்ற வீட்டில் இருப்பவர்களுக்கு பெருமையும் கர்வமும் இருப்பதில் ஆச்சரியமில்லை என்று எண்ணிக் கொண்டாள் மாலினி.

டைனிங் டேபிளின் ஒரு முனையில் இருந்த சேரில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள் நர்மதா. அவளுக்கு அருகில் பக்கவாட்டில் இருந்த சேர்களில் இரண்டு பக்கமும் இருவர் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருக்க... அவர்களில் ஒருவன் கருணாகரன் என்று கண்டுகொண்ட மாலினி.. இன்னொருவன் யாராக இருக்கும் என்று யோசித்தாள்.

'இவன்தான்.. இந்த வீட்டின் ஹிட்லரோ...'

ஆனால், தற்செயலாகத் திரும்பி மாலினியைப் பார்த்த அந்த அவனின் கண்களில் வெட்டிய மின்னலையும் உதடுகளில் தோன்றிய புன்னகையையும் கண்டு அவசரமாக தன் நினைவை மாற்றிக் கொண்டாள் மாலினி.



'ஊஹூம்.. இவன் அவனில்லை... அவனுக்காவது சிரிப்பு வருவதாவது..'

அந்த இவன்.. மாலினியைப் பார்த்து இன்னும் அகலமாய்ப் புன்னகைக்க.. வேறுவழியின்றி லேசாக பதிலுக்குப் புன்னகைத்தாள் மாலினி.

''ஹாய்...''

''ஹாய்...''

''நீங்கள்தான் மாலினியா?''

பதிலுக்கு நீங்கள்தான் இன்னாரா என்று கேட்க முடியாமல்.. 'ஆமாம்' என்ற பாவனையில் தலையசைத்தாள் மாலினி.

''நான் யாரென்று தெரியவில்லையா...''

அவன் இயல்பாக வினவினான். அவனது சிரிப்பிலும் இயல்பான பேச்சிலும் கவரப்பட்ட மாலினி.. மீண்டும் தலையசைத்தாள்.

''நான் தினகரன் உங்கள் அக்காவின் கொழுந்தனார். உங்கள் அக்காள் கணவரின் இளைய தம்பி... என் அம்மாவிற்கு செல்ல மகன்...''

மகன் பேசிய விதத்தில் நர்மதா சிரித்தாள்.

''போதும்டா.. சாப்பிடு. சசி.. நீயும் மாலினியும் சாப்பிட உட்காருங்கம்மா...''

'இதற்குகூட அனுமதி வேண்டுமா?' என்ற எண்ணத்துடன் மாலினி, சசியைப் பார்த்தாள். அவள் மாலினியின் பார்வையைத் தவிர்த்து.. கணவனின் அருகே அமர்ந்தாள். அவள் பக்கத்தில் மாலினி உட்கார்ந்தாள்.

''செந்தாமரை.. மாலினி இந்த வீட்டு விருந்தாளியாக இருந்தாலும் இனி இங்கேதான் தங்கியிருக்கப் போகிறாள்.. அவளுக்கு வேண்டியதைக் கேட்டு பரிமாறு..''

விருந்தோம்பலில் நர்மதா காட்டிய கவனத்தைக் கண்டு மாலினியின் மனதில் அவள் மேல் ஒரு மரியாதை உதித்தது.

எதையும் அவள் அவளாகப் பேசுவதையும் ஆணை யிடும்போது அவளின் குரலில் தொனிக்கும் கம்பீரத்தையும் அவளின் கண்ணசைவில் பெற்ற பிள்ளைகளும் வேலை யாள்களும் பணிந்து அவள் சொன்ன வேலைகளைச் செய்து முடிப்பதையும் பார்க்கும்போது அவள் உண்மையிலேயே ஒரு மகாராணிக்கு உரிய அனைத்து தன்மைகளையும் பெற்றிருப்பது மாலினிக்கு தெளிவாகப் புரிந்தது.



*நீயிருக்கும் திசையில்...*
*என் நினைவிருக்கும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

பசியின் வேகத்தில்.. தன் முன் வைக்கப்பட்ட பதார்த்தங்களை மின்னல் வேகத்தில் காலி செய்தாள் மாலினி. ஒருவழியாய் பசி அடங்கியதும்தான் தலை நிமிர்ந்து மற்றவர்களைப் பார்த்தாள்.

நர்மதா அப்போதும் கருணாகரனிடம் எதையோ வினவிக் கொண்டிருக்க.. அவன் தாய்க்கு பதில் சொல்லிக் கொண்டிருந்தான். சசிரேகா குனிந்த தலை நிமிராமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள். தினகரன் மட்டும் பார்வையை விலக்காமல் மாலினியைப் பார்த்துக் கொண் டிருந்தான். அவன் விழிகளில் தெரிந்த மயக்கம் மாலினியை சங்கடத்தில் ஆழ்த்தியது.

''நீங்க இன்ஜினீயராமே...'' அவன் வினவினான்.

''ஆமாம்.. மெக்கானிக்கல் இன்ஜினீயர்..''

''ஆச்சுவலா.. சென்னையில் இருக்கிறவங்க கம்ப்யூட் டர் இன்ஜினீயரிங்தான் படிப்பாங்க. ஏதாவது ஒரு ஐடி கம்பெனியில் சாஃப்ட்வேர் இன்ஜினீயராக நுழைந்து விடுவாங்க. ஆனால், நீங்கள் இதிலும் வித்தியாசமாய் இருக்கீங்க..''

'வேறு எதிலே நான் வித்தியாசமாக இருக்கிறேன்..' என்று யோசித்தவாறு தினகரனைப் பார்த்தாள் மாலினி.

''எனக்கு இந்த கோர்ஸ்தான் பிடித்திருந்தது...''

''ஊஹூம்.. பிடித்ததை செய்யவும் ஒரு மன திடம் இருக்க வேண்டும்.. அது உங்களிடம் இருக்கிறது..''

'இன்ஜினீயரிங் கோர்ஸில் பிடித்த கோர்ஸை படித்த தற்கு இவன் ஏன் ஜான்ஸி ராணி லட்சுமிபாயின் ரேஞ்சிற்கு என்னை உயர்த்தி பில்டப் கொடுக்கிறான். இவன் பேசுவது இவனுக்கே ஓவராய் தெரியவில்லையா...'

தலையை நிமிர்த்தியதால் இப்படி ஒரு பேச்சுவார்த் தையைச் சந்திக்க வேண்டுமென்று முன்பே தெரிந்திருந் தால்.. பேசாமல் தலையை நிமிர்த்தாமலேயே சாப்பாட்டை முடித்திருக்கலாமே என்று தாமதமாய் ஞானோதயம் வந்தது மாலினிக்கு.

''என்ன மாலினி.. பதிலைக் காணோம்..''

''யோசித்துக் கொண்டிருக்கிறேன்...''

''எந்தக் கோட்டையைப் பிடிக்க யோசித்துக் கொண்டிருக்கிறீங்க?''

''உங்களுக்குச் சொல்வதற்கான பதிலைப் பிடிக்கத்தான் யோசித்துக் கொண்டிருக்கிறேன்?''

தலை நிமிர்த்தாமல் மீண்டும் சாப்பாட்டில் கவனமாகி விட்ட மாலினி கூறிய பதிலைக் கேட்டு தினகரன் ரசித்து சிரித்தான்.

''இவ்வளவு இன்ட்ரஸ்டிங்காய் பேசுவீங்கன்னு எனக்குத் தெரியாது...''

'நீயும் இப்படி ரம்பம் போடுவாய்னு எனக்கும் தெரியாது...'

''உங்களுடன் பேசிக் கொண்டிருப்பது ரொம்ப சுவாரஸ்யமாக இருக்கிறது...''

'எனக்கு தலை வேதனையாய் இருக்கிறது...'

''பை தி வே.. மாலினி.. நாளைக்கு நீங்கள் வேலையில் ஜாயின் பண்ண வேண்டுமில்லையா...''

'பின்னே.. வேண்டாமென்றா சொல்வேன்.. வேறு எதற்கு சிங்கார சென்னையை விட்டுவிட்டு இந்த மார்த்தாண்டத்திற்கு வந்து இறங்கியிருக்கிறேன் என்று நினைத்தாய்.. நீ கடலை போடுவதை சகித்துக் கொள்வதற்கா?'

மனதிற்குள் எரிச்சலுடன் கேட்டுக் கொண்ட மாலினி.. இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் இருக்க முடியாது என்பதால் தலைநிமிர்ந்து பதில் சொன்னாள்..

''ஆமாம்...''

''நானே உங்களை டிராப் பண்ணி விடுகிறேன்...''

'இது என்ன புது வம்பாக இருக்கிறது..' என்ற நினைவுடன் மாலினி, நர்மதாவை நோக்க.. அவள் முகத்தில்



எந்தவித உணர்வையும் பிரதிபலிக்காமல் மகனைப் பார்த்துச் சொன்னாள்.

''தினா.. மாலினிக்கு கார் அனுப்புவது என் பொறுப்பு... உனக்கு இதைவிட முக்கியமானதாய் ஆயிரம் பொறுப்புகள் இருக்கின்றன. நீ அதைக் கவனி. நான் இதைக் கவனித்துக் கொள்கிறேன்..''

''இது அநியாயம் அம்மா..''

''எது அநியாயம்..''

''பொறுப்பில்லாமல் இருக்கிறேனென்று நீங்கள் தானே அடிக்கடி சொல்வீங்க..''

''இப்போதும் அதைத்தான் சொல்கிறேன்..''

''அதனால் பொறுப்பாக ஒரு வேலையைச் செய்ய நினைத்தால் அதற்கு தடை போடுகிறீங்களே...''

''இதைச் செய்யத்தான் பரந்தாமனை நாம் வேலைக்கு வைத்திருக்கிறோம்...''

''இட்ஸ் ஓகே...''

தினகரன் தோளைக் குலுக்கிக் கொண்டு எழுந்து சென்றுவிட்டான்.

''நீங்கள் சொன்னது போலவே செய்து விடுகிறேன் அம்மா...''

''கவனம் கருணா.. எதையும் பிரபாவிடம் கலந்து விட்டுச் செய். அதுதான் உனக்கு நல்லது...''

''இதை நீங்கள் எனக்குச் சொல்ல வேண்டுமா? எனக்கு அது தெரியாதா? அண்ணனிடம் நேற்றே இதைப் பற்றிப் பேசிவிட்டேன்...''

கருணாகரன் எழுந்து கைகழுவச் சென்றுவிட... அவசரமாய் அவனைப் பின்தொடர்ந்தாள் சசிரேகா.

சாப்பாட்டு அறையில் நர்மதாவுடன் தனித்து விடப் பட்ட மாலினி.. பெரியவளிடம் என்ன பேசுவது என்று அறியாத சங்கடத்துடன் சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

நர்மதாவின் பார்வை தன் மேல் கூர்மையுடன் படிவதை உணர்ந்தவளின் நெற்றியில் முடிச்சு விழுந்தது.

'இந்தம்மா.. ஏன் என்னை இப்படிப் பார்த்து வைக்கி றாங்க. இந்நேரம் வரை இவங்க மகன் என்னை ஒரு மார்க்க மாக பார்த்து வைத்தான். இப்ப இவங்க வேறு தினு சாய் பார்த்து வைக்கிறாங்க. ஆனால், இவங்க மகனின் பார்வைக்கு அர்த்தம்.. சைட் அடிப்பது என்று எனக்கு நன்றாகத் தெரியும். இவங்க பார்வைக்குத்தான் என்ன அர்த்தமுன்னு விளங்கித் தொலைக்க மாட்டேங்குது...'

நர்மதாவின் முகம் கண்டிப்புக்கு மாறியது. அவள் மாலினியின் முகத்தைப் பார்த்தபடி...

''தினா.. சிறுவயதிலிருந்தே செல்லமாக வளர்ந் தவன்..'' என்று கூறினாள்.

'இதையேன் என்னிடம் சொல்கிறாங்க..' என்ற நினை வுடன்.. மரியாதைக்காக..

''அப்படியா அத்தை...'' என்றாள் மாலினி.

''அவன் உன்னிடம் மட்டுமில்லை.. எல்லோரிடமும் சகஜமாகத்தான் பேசிப் பழகுவான்...''

''அப்படியா..''

''பிரபாவுக்கும் கருணாவிற்கும் யாரிடம் எந்த அள வில் நிறுத்திக் கொள்ள வேண்டும் என்ற லிமிட் தெரியும். ஆனால், தினாவுக்கு அது தெரியாது..''

''அப்படியா...''



''கருணாவின் கல்யாண விஷயத்தில் எனக்கு துளிக் கூட விருப்பமில்லை. ஆனால், பிரபா பிடிவாதமாக இருந் தான்...''

''அப்படியா..''

''கருணாவின் காதல்தான் இந்தக் குடும்பத்தில்.. முதலும் முடிவாகவும் இருக்க வேண்டும்னு நான் நினைக் கிறேன்..''

இப்போது மாலினி 'அப்படியா..' என்று சொல்ல வில்லை. நர்மதா சொல்ல வருவது என்ன என்று அவளுக்கு விளங்கிவிட்டது.

'இந்தம்மாவிற்கு இருக்கும் நினைவைப் பாரேன். சசியின் நிலையைப் பார்த்த பின்னும் இந்த வீட்டிற்கு மருமகளாய் வர எனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக் கிறது. மனதில் இருப்பதை வாய்விட்டுப் பேச முடியாத வாழ்க்கையெல்லாம் ஓர் வாழ்க்கையா.. இப்படியொரு வாழ்க்கை கோடி ரூபாய்களை கொட்டிக் கொடுத்தாலும் எனக்கு வேண்டவே வேண்டாம்..'

ஆனால், இதை மனதில் மட்டும் நினைத்துப் பயனில் லையே... வாய்விட்டு நர்மதாவிடம் சொல்லியாக வேண் டுமே. அதை எப்படிச் சொல்வது என்ற யோசனையுடன் மாலினி நர்மதாவைப் பார்த்தாள்.

''உண்மையில் அத்தை... எனக்கும் உங்கள் கருத்தில் உடன்பாடு இருக்கிறது...''

''என்ன சொல்கிறாய்...''

''இந்தக் காதல்.. கத்தரிக்காய் எல்லாம் டேன்ஜரான சமாசாரம். ஆயிரம்தான் சொல்லுங்கள்.. அப்பா.. அம்மா பார்த்து செய்து வைக்கும் கல்யாணத்திற்கு ஈடாகுமா..

சசியின் விஷயத்தில் நீங்கள் பெருந்தன்மையுடன் அவளை ஏற்றுக் கொண்டதால் அவளது காதல் பிழைத்தது. இல்லா விட்டால்.. அவள் நிலைமை என்னவாகியிருக்கும்?''

''இது உன் பெரியப்பாவின் மகளுக்கு நினைவில் இருப்பது போல் தெரியவில்லை. நீயாவது சொல்லு. அப்போதாவது அவளது புத்தியில் இது ஏறுகிறதா என்று பார்ப்போம்..''

''அதற்கென்ன அத்தை.. சொல்லிவிட்டால் போச்சு. இதைவிட எனக்கு வேறென்ன முக்கியமான வேலை இருக்கப் போகிறது...''

''தினா?''

''நான் சென்னையில் பிறந்து வளர்ந்தவள் அத்தை... அவரைப் போல் தினமும் பலரைச் சந்தித்துக் கொண்டு தான் இருக்கிறேன். அவாய்ட் பண்ண எனக்குத் தெரியும்..''

''நீ புத்திசாலிப் பெண்...''

''தேங்க் யூ...''

கை கழுவ எழுந்து கொண்ட மாலினியின் மனதில் சீக்கிரமாய் ஏதாவது ஒரு லேடீஸ் ஹாஸ்டலில் இடம் பார்த்துக் கொண்டு அந்த வீட்டை விட்டுப் போய்விட வேண்டும் என்ற எண்ணம் தீவிரமாகத் தோன்றியது.



*உறங்காத என் விழிகள்...*
*உனைத் தேடும் தவிப்பை...*
*என்னவென்று நான் சொல்ல..?*



அறைக்கதவு படபடவென்று தட்டப்பட்டதும் உறக்கத்திலிருந்து உலுக்கி விழித்தாள் மாலினி அருகி லிருந்த செல்போனை எடுத்து மணி பார்த்தாள். மாலை ஆறு என்றது.

'இவ்வளவு நேரமாகவா தூங்கிவிட்டேன்..'

பதற்றத்துடன் எழுந்து சென்று கதவைத் திறந்தாள். சசிரேகா நின்றிருந்தாள். அவள் பின்னாலேயே காபி-டிபன் தட்டுக்களுடன் செந்தாமரை தென்பட்டாள்.

''என்ன மாலினி.. இப்படித் தூங்கிவிட்டாய்?''

''நேற்று சாயந்திரம் பஸ்ஸில் ஏறியது சசி.. உனக்கே தெரியும்.. பஸ் பிரயாணத்தில் எனக்குத் தூக்கம் வராது என்று. விடிய விடிய விழித்திருந்தது உடம்பில் அயர்வை உண்டுபண்ணிவிட்டது..''

''அதற்காக மதியம்கூடச் சாப்பிட வராமல் தூங்கு வாயா?''

''ஆமாமில்ல.. காலையில் டிபன் சாப்பிட்டதும்.. ரூமில் வந்து படுத்ததுதான் தெரியும்..''

''மதியம் நான் வந்து பலமுறை கூப்பிட்டுப் பார்த் தேன்.. நீ கதவையே திறக்கவில்லை..''

''ஸாரி.. ஸாரி...''

அதற்கு மேலும் எதையோ பேசப் போன சசிரேகா.. செந்தாமரையைப் பார்த்து அமைதியாகி விட்டாள்..

''உன் பெயர் செந்தாமரைதானே...''

மாலினி வினவவும்.. மகா சந்தோஷமாய் அவள் ''ஆமாங்கம்மா..'' என்றாள்.

''ஏன்.. கை வலிக்க பிளேட்களை வைத்துக் கொண் டிருக்கிறாய்.. இங்கே கொடு...''

''இருக்கட்டும்மா...''

''இதோ பார் செந்தாமரை... நானே தூக்கத்தில் மதியம் சாப்பிடாமல் இருந்துவிட்டேன். இதில் டிபன், காபியை எனக்குக் கொடுக்காமல் இருக்கட்டும்னு நீ வைத்துக் கொள்வது நியாயமா? எனக்குப் பசி தாங்காது செந்தாமரை...''

''அம்மா...''

செந்தாமரை அடக்க முடியாமல் சிரித்துவிட.. இந்த முறை பயமில்லாமல் சசிரேகாவும் கூடச் சேர்ந்து சிரித்தாள்.

''இவள் இப்படித்தான் செந்தாமரை.. சிரிக்கச் சிரிக்க பேசி வைப்பாள். இவள் பேச்சைக் கேட்டு நாம்தான் வயிறு வலிக்கச் சிரிப்போம். இவள் ஒன்றுமே நடக்காதது போல நம்மைப் பார்த்துக் கொண்டு நிற்பாள்...''

''ஆமாம்மா.. உங்களைப் போல உங்கள் தங்கை அமைதியான சுபாவமில்லை. கெட்டிக்காரங்களாக இருக்கிறாங்க..''

செந்தாமரை காபி, டிபன் தட்டுக்களைக் கொடுத்து விட்டு சிரித்துக்கொண்டே படியிறங்கிப் போய்விட.. மாலினி.. சசிரேகாவைப் பார்த்து குறும்புடன் வினவினாள்.

''ஏன் சசி.. இப்ப உன் வீட்டு வேலைக்காரப் பெண் என்ன சொல்லிவிட்டாள்னு இப்படி மகிழ்ந்து போய் சிரித்துக் கொண்டு நிற்கிறாய்.. அவள் என்னைக் கெட்டிக் காரின்னு சொல்லிவிட்டுப் போகிறாள்..''

''அதற்கு என்னடி?''

''போடி மக்கு.. நீ கெட்டிக்காரியில்லைன்னு மறைமுகமாய் சொல்லிவிட்டுப் போகிறாள்..''

''அவள் பாவம் யதார்த்தமாய் பேசினாள். நீ உடனே அதிலே திரியைப் போட்டு வெடியைப் பத்த வைக்காதே..''



''ஊஹூம்.. நீ தேறவே மாட்டாய்..''

''நான் தேறுவது இருக்கட்டும். உனக்கு இப்போ காபி, டிபன் வேண்டுமா.. வேண்டாமா?''

''அடிப்பாவி.. செந்தாமரையிடமிருந்து இந்தத் தட்டுக்களை கைப்பற்றியது நீயே காலி செய்யும் நோக்கத்தில் தானா.. நீ இப்படிச் செய்தால்.. நான் எப்படித் தேறுவது?''

''தெரியுதில்ல.. என்னைத் தேற்றுவதை விட்டு விட்டு.. நீ தேறுகிற வழியைப் பாரு.. போய் முகம் கழுவி விட்டு வா...''

''அதற்கும்.. டிபன், காபி சாப்பிடுவதற்கும் என்ன சம்பந்தம்?''

சசிரேகாவுடன் ஊர்க்கதையைப் பேசியபடி டிபன் தட்டை நொடிப்பொழுதில் காலி செய்த மாலினி, காபியைக் குடித்து முடித்ததும் தெம்பாக நிமிர்ந்தாள். சசிரேகாவைப் பார்த்தாள்.

''இப்போது சொல்லு.. இனிமேல் நாம் என்ன செய்யலாம்?''

''முகம் கழுவி.. தலை வாரிக்கொண்டு வா.. தோட்டத்துப் பக்கமாய் போகலாம்..''

''இது பேச்சு.. இதோ.. ஒரு செகண்டில் வருகிறேன் பார்..''

தோட்டத்து அலங்கார வளைவுகளை ரசித்தபடி இருவரும் பேசிக்கொண்டே சுற்றி வந்தார்கள். முயல் குட்டிகள் ஓட, மாலினி அவற்றைத் துரத்திக் கொண்டு பின்னால் ஓட ஆரம்பித்தாள். அவள் கைகளில் அகப்பட்டுக் கொள்ளாமல் அவை பூச்செடிகளின் அடியில் பதுங்கிவிட.. உற்சாகமாய் சிரித்தபடி நிமிர்ந்தாள்.

''வாயில்லா பிராணிகளின் பயத்தைக் கண்டு இவ்வளவு சந்தோஷமா?''

அவளது முதுகிற்குப் பின்னாலிருந்து வந்த கோபக் குரலைக் கேட்டு அதிர்ந்து திரும்பினாள். அப்படியொரு கோபக் குரலில் அதற்கு முன்னர் அவளிடம் யாருமே பேசியது இல்லை.

அவளைக் கடிந்துகொண்டவனின் முகத்தில் கடுமை நிலவியது. இரு புருவங்களும் முடிச்சிட.. கண்கள் தீட்சண்யமாய் மின்ன.. மாலினியை முறைத்துக் கொண்டு நின்றிருந்தான் அவன்.

முதல் பார்வையிலேயே அவனது முகக் கடுமையையும் தாண்டி அவனது உயரமான கம்பீரமான தோற்றம் மாலினியின் மனதில் பதிந்துவிட்டது.

'வாவ்.. இவன்தான் எப்படியொரு மேன்லி ஹேண்ட்சம்மாக இருக்கிறான்...'

அவனது ஆண்மை ததும்பும் தோற்றத்தையும் அலையலையாய் படியாமல் சிலுப்பிக் கொண்டு நின்ற கேசத்தையும் மனதிற்குள் ரசித்தபடி பார்த்த மாலினி...

''அந்த வாயில்லா பிராணிகள் பயந்து போய்விட்டதுன்னு உங்களுக்கு எப்படித் தெரியும்.. அவை வந்து உங்களிடம் சொல்லினவா?'' என்று வினவினாள்.

எதிரே நின்றிருந்தவனின் கண்களில் சிறு மின்னல் வெட்டியது. அவன் அவளை ஏற இறங்கப் பார்த்தான். அவனது அந்த எடை போடும் பார்வை... ஏனோ மாலினியின் மனதிற்கு உற்சாகத்தை தந்தது.

'பேசாமல்.. இவன் முன்னால்.. பூனை நடை நடந்து காண்பித்து விடலாமா...' என்று எண்ணியவள்.. சசிரேகாவின் அரண்ட முகத்தைக் கண்டு அந்த நினைவை அரைமன தாய் கைவிட்டாள்.

'பாவம்.. போனால் போகிறதென்று இருக்க இடம் கொடுத்திருக்கிறாள். பிழைத்துப் போகட்டும்..'

சசிரேகாவின் முகத்திற்காக அவள் அமைதியைக் கடைப்பிடித்துக் கொண்டிருப்பதை உணராதவனாக அவன்...

''பயத்தைச் சொல்ல அவைகளுக்கு வாயில்லை என்ற தைரியமா உனக்கு?'' என்று பதிலுக்கு வினவினான்.

'அட.. கேள்விக்கு கேள்வியைத்தான் இவன் பதிலாகத் தருவானா.. என்ன ஒரு தெனாவெட்டு..'

''அவைகளின் உற்சாகத்தைச் சொல்லவும் அவைகளுக்கு வாயில்லை என்ற பரிதாபம்தான் எனக்கு...''

மீண்டும் அவனது கண்களில் மின்னல் தோன்றி மறைந்தது. கண்களில் தோன்றும் சுவாரஸ்யத்தை கவனத்துடன் அவன் மறைத்துக் கொள்வதை மாலினி கண்டு கொண்டாள்.

'ம்ஹூம்.. இலகுவாக பேசக்கூட மாட்டானாம். ஏனாம்.. என்னைப் பார்த்தால் இவனுக்கு சமதையாய் பேசத் தோன்றாதா?'

''துரத்துகிறவர்களைக் கண்டால் ஓடுகிறவர்களுக்கு உற்சாகம் எப்படி வரும்?''

''ஓடிப்பிடித்து விளையாடும் விளையாட்டைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டதே இல்லையா?''

''என்னைப் பார்த்தால் விளையாட்டுப் பையன் போல உனக்குத் தோன்றுகிறதா?''

''என்ன சார் இது.. விளையாட்டைப் பையன்கள் தான் விளையாட வேண்டுமா? அப்படியென்றால்.. டோனி.. சச்சின்.. யுவராஜ்சிங்.. மகேஷ் பூபதி.. செஸ் ஆனந்த்.. இவர்கள் எல்லோருமே உங்கள் பார்வையில் விளையாட்டுப் பையன்கள்தானா?''

''கெட்டிக்காரத்தனமாய் பேசுவதாக நினைப்பா?''

''என் மனதில் எந்த நினைவும் இல்லை. உங்கள் மனதில்தான் என்னைப் பார்த்தால் முயல்குட்டிகளைத் துரத்தும் கொடூரமானவள் என்கிற நினைவு இருக்கிறது...''

''பயத்தில் ஓடும் முயல்குட்டிகளின் கண்களை ஒரு தரம் பார்.. அப்போது உனக்கு அவைகளைத் துரத்தத் தோன்றாது..''

''பாவம்.. அதன் பார்வையே அப்படித்தான் சார். மருண்ட மான் விழிப் பார்வை என்பார்கள். அதனால்.. மானைப் பார்த்துவிட்டால் தொட்டு விளையாட ஆசை வராமல் போகுமா?''

''மானுடன் விளையாட ஆசைப்பட்ட சீதையின் கதி என்னவாகிப் போனது என்பதை நினைவில் வை. பெண்கள் தேவையில்லாத பொருள்களின் மீது ஆசைப்படவும் கூடாது. தேவையில்லாத விளையாட்டுகளை விளையாடவும் கூடாது. தேவையில்லாத பேச்சுகளை பேசவும் கூடாது. மைண்ட் இட்...''

மாலினி துணுக்குற்றாள். எதற்கு எதை இணை கூட்டிப் பேசுகிறான் இவன்.. அவள் என்ன சொல்லிவிட்டாள் என்று இவ்வளவு கடினமான வார்த்தைகளை அள்ளி அவள் மேல் வீசுகிறான்.. இவன் யாராக வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும்.. முன்பின் தெரியாத பெண்ணிடம் முதல் அறிமுகத்தில் அக்கினிக் கங்குகளைப் போன்ற வார்த்தைகளை அள்ளிவீச வேண்டிய அவசியம் என்ன?



மாலினி சிலிர்த்துக் கொண்டு நிமிர்ந்தாள். சசிரேகாவின் கெஞ்சல் கலந்த பார்வையை லட்சியம் செய்யாதவளாக அவன் முகம் பார்த்து சண்டைக்கு போய்விட்டாள்.

''ஏன் சார்.. நானும் பார்க்கிறேன். அது என்ன.. உங்கள் ஆண்குலம் எல்லாம் வாயைத் திறந்தால்.. சீதை மானின் மேல் ஆசைப்பட்டாள்.. சீதை கோட்டைத் தாண்டினாள்.. அதனால் அவள் கதி என்னவாச்சுன்னு பெண்குலத்திற்கு அட்வைஸ் பண்ணக் கிளம்பி விடுகிறீங்க?''

''உள்ளதைத்தானே சொல்கிறோம்..''

''உங்களுக்கு வேண்டியதை மட்டும் சொல்கிறீங்க..''

''புரியவில்லை...''

''உங்களுக்கா புரியாது.. எல்லாம் நடிப்பு..''

''நீ யாரிடம் பேசிக் கொண்டிருக்கிறாய் தெரியுமா?''

''ஒரு ஆணாதிக்க மனப்பான்மை படைத்த மனிதரிடம் பேசிக் கொண்டிருக்கிறேன்னு தெரியது..''

''என்னைப் பார்த்து இப்படிப் பேச உனக்கு எவ்வளவு தைரியம்?''

''நீங்கள் என்ன.. சிங்கம்.. புலி.. கரடியா.. என்னைப் போல் நீங்களும் மனித ஜீவன்தானே.. உங்களிடம் பேச எனக்கு என்ன தைரியம் வேண்டிக் கிடக்கு?''

''நான் யார் என்று தெரியாமல் பேசிக் கொண்டிருக்கிறாய் என்று நினைக்கிறேன்...''

''நீங்கள் யாராக இருந்தால் எனக்கென்ன சார்.. பேச்சு என்று வந்துவிட்டால்.. அதற்கு பதில் சொல்லித்தான்

ஆக வேண்டும்.. பதில் சொல்லாமலிருக்க என்னால் முடியாது..''

கோபத்தில் முகம் சிவக்க.. வரிந்து கட்டிக்கொண்டு பேசத் தயாராக நின்றவளை சிறு வியப்புடன் பார்த்தான் அவன். அவன் முகத்தில் எதுவோ தோன்றி மறைந்தது.



*யாரோவென்று உனைப் பார்த்தபோது*
*நீயெனக்கு அனைத்துமாகி போன கதையை*
*என்னவென்று நான் சொல்ல...?*

''சரி.. சொல்லு...''

உத்தரவிடும் பாவனையில் அவன் சொல்ல.. ரோஷத்துடன் மாலினி அவனை உறுத்துப் பார்த்தாள்.

''சீதை யார் சார்?''

''அதையும் நீயே சொல்லு.. எனக்கெதற்கு வம்பு?''

''அடேங்கப்பா.. நீங்கள் வம்புக்குப் பயப்படுகிறவர் தான்..''

''அதை நீ சொல்கிறாயா? வெரிகுட்..''

''உங்களைப் பற்றிய பேச்சு இப்போது எனக்கு எதற்கு?''

''வேறு எப்போது உனக்கு வேண்டும்?''

''எப்போதுமே எனக்கு வேண்டாம். இப்போது நமக்குள் இருப்பது சீதையைப் பற்றிய பேச்சுத்தான்..''

''அது எனக்கு நினைவில் இருக்கிறது..''



''எனக்கும் மறந்துவிடவில்லை.. சீதை யார் சார்.. தெருவில் போகும் சாதாரணப் பெண்ணா?''

''இல்லைதான்..''

''அவள் ஜனகனின் மகள்.. மிதிலையின் இளவரசி.. ஆனானப்பட்ட.. சிரிப்பதற்கு கூலி கேட்கும் ராமனையே தன் கண்ணசைவில் கட்டிப் போட்ட காதலி...''

''பொறு.. பொறு.. ராமன் சிரிப்பதற்கு கூலி கேட்பான்னு யார் உனக்குச் சொன்னது?''

''வேறு யார் வந்து சொல்வார்கள்? எல்லாம் நம்ம வால்மீகியும் கம்பரும்தான் சொல்கிறார்கள்..''

என்னவோ கம்பரும் வால்மீகியும் அவளின் பக்கத்து வீட்டுக்காரர்கள் போல சாதாரணமாகப் பேசிய மாலினியைப் பார்த்தவனின் இதழ்கள் லேசாக விரிந்தன. சசிரேகாவே சிரிப்பை அடக்கிக் கொள்ள படாத பாடுபட்டாள்.

''அப்படியா.. ம்ம்.. மேலே சொல்லு?''

''எதைப் பற்றிச் சொல்ல.. சீதையின் சிறப்பைப் பற்றியா... ராமனின் சிரிப்பைப் பற்றியா?''

''முதலில் ராமனின் சிரிப்பைப் பற்றிச் சொல்லிவிடேன்..''

''ஏன் சார்.. எப்போது பார்த்தாலும் கடமை.. கண்ணியம்.. கட்டுப்பாடு என்று எம்.ஜி.ஆர். ரேன்ஜிற்கு வசனம் பேசிக் கொண்டு... வில்லைத் தூக்கி தோளில் மாட்டிக் கொண்டு அம்பை விட ரெடியாக இருப்பவருக்கு சிரிப்பு எப்படி சார் வரும்... இப்போது உங்களையே எடுத்துக் கொள்ளுங்கள்.. முயல்குட்டிகளுடன் நான் ஓடிப் பிடித்து விளையாடிக் கொண்டிருந்தேன். அதைப் பார்த்து

உங்களுக்குச் சிரிப்பு வந்ததா.. வரவில்லையே.. அது ஏன்?''

''ஏன்?''

''உங்களை மாதிரி ஆண்களுக்கு எல்லாம் அது வராது சார்..''

'கடவுளே..' என்று மனதிற்குள் தெய்வத்தை துணைக்கு அழைத்தபடி சசிரேகா, மாலினியை கலவரமாக பார்த்தாள். உன் பார்வையைக் கண்டுகொள்வேனா என்று பிடிவாதமாக சசிரேகாவின் முகத்தைப் பார்க்காமல் சட்டமாக நின்று பேசிக்கொண்டிருந்தவளைப் பார்த்து.. உணர்ச்சிகளைக் காட்டாத குரலில் வினவினான் அவன்.

''ஏன் அப்படி?''

''ஏனென்றால்.. நீங்கள் எல்லோரும் தீவிரமாய் சிந்திப்பவர்கள். உங்களுக்கு முயல் உற்சாகமாய் ஓடுவதாகத் தோன்றாது. பயத்தில் ஓடுவதாகத்தான் தோன்றும்...''

''ஓஹோ.. ராமராஜ்ஜியத்தில் குற்றங்களே கிடையாதும்மா... அதற்குப் பின்னால் ஆயிரம் ராஜ்ஜியங்கள் வந்திருக்கின்றன. அதற்கு முன்னாலும் ஆயிரம் ராஜ்ஜியங்கள் இருந்திருக்கின்றன. ஆனால், புராண காலம் தொட்டு இன்றுவரை... ராமராஜ்ஜியத்திற்கு இணையான ஆட்சி இதுவரை நடந்ததே இல்லை...''

''இருந்து என்ன சார் பிரயோஜனம்.. கிருஷ்ணனை நினைத்தால் மனதில் தோன்றும் புத்துணர்வு ராமனை நினைத்தால் வருகிறதா.. கிருஷ்ணன் ஜாலியான கேரக்டர் சார்..''

''உனக்கு ஜாலியான ஆண்களைத்தான் பிடிக்கும் போல..''



அவன் ஒரு தினுசான குரலில் வினவினான். அதற்கு அவள் சொல்லும் பதிலால் பிற்காலத்தில் எத்தனை மனவேதனைகளைச் சந்திக்கப் போகிறாள் என்பதை அறியாதவளாக.. அவனை மட்டம் தட்டிவிடும் வேகத்துடன் உற்சாகமாய் மாலினி பதில் சொன்னாள்.

''ஆமாம் சார்.. அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது?''

''பார்த்தாலே தெரிகிறது...''

''இப்போது சீதையின் விஷயத்திற்கு வருவோம்..''

''வா..''

''அப்பேர்ப்பட்ட ராமனையே காதலிக்க வைத்த பேரழகி அவள். ராமனை மணந்தவள்.. ராமனின் மனைவி.. அயோத்தியின் ராணி.. தசரத சக்கரவர்த்தியின் மருமகள். அப்பேர்ப்பட்ட ராஜகுல அரசி.. கணவன் அனைத்தையும் துறந்து காட்டிற்கு போகிறேனென்று போனபோது தானும் பின்னாலேயே போனாளே.. அதை நீங்கள் நினைத்துப் பார்த்திருக்கிறீர்களா?''

''நினைத்துப் பார்த்திருக்கிறேன்..''

''என்னவென்று...''

''இந்த மகராசி பேசாமல் அரண்மனையிலேயே அடங்கி உட்கார்ந்திருந்தால் ராமன் நிம்மதியாய் வனவாசம் முடித்துவிட்டு திரும்பி வந்திருப்பார் என்று நினைத்துப் பார்த்திருக்கிறேன்..''

மாலினி பல்லைக் கடித்துக் கொண்டு அவனை முறைத்தாள். அவன் புருவங்களை உயர்த்தினான்.

''அதுதானே பார்த்தேன்.. உங்கள் நினைப்பு வேறெப்படிப் போகும்? சார்.. ராமனின் மேல் அவளுக்கிருந்த காதல்.. அவளை எல்லாவற்றையும் துறந்து அவன்

பின்னால் போகச் செய்தது.. இன்றைக்கும் ராமன் இருக்கு மிடம்தான் சீதைக்கு அயோத்தியென்று எல்லோரும் சொல் கிறாங்க..''

''அப்படியா..''

''இதெல்லாம் வசதியாய் உங்களுக்கு நினைவுக்கு வராமல் போய்விடுமே.. அதை விடுங்க.. ராமனைப் பிரிந் திருக்க முடியாத சீதையின் காதல்.. உங்கள் கவனத்தில் படவில்லையா?''

''அதைவிட.. கடமையாற்றப் போன கணவனுக்காக பிரிவை ஏற்றுக்கொண்டு காத்திருந்த ஊர்மிளையின் துயரம்தான் என் கவனத்தில் படுகிறது..''

''ஊர்மிளையும் பெண்குலம்தான் சார்.. அதை நீங்கள் மறந்து விடாதீங்க..''

''மறக்கவில்லைம்மா.. நீ கதையைச் சொல்லி முடி..''

''காட்டுக்குப் போன சீதை... பட்டு வேண்டும் என்று ஆசைப்பட்டாளா... இல்லை வைரம் வேண்டும் என்று ஆசைப்பட்டாளா... சும்மா... காட்டுக்குள் அலைந்து கொண்டு இருந்த மான்குட்டியின் மேல்தானே ஆசைப் பட்டாள். அது ஒரு பெரிய தப்பா?''

''உன்னிடம் போய் அது தப்பு என்று நான் சொல்லி விட முடியுமா..?''

''ஆஹா.. நீங்கள் ரொம்ப பயந்தவர்தான். எல்லோ ரையும் பயமுறுத்தப் பிறந்தவர் நீங்கள். சரி, சார்.. சீதை தான் மானின் மேல் ஆசைப்பட்டாள் என்றால் இந்த ராமன் என்ன செய்திருக்க வேண்டும்?''

''என்ன செய்திருக்க வேண்டும்?''

'''என்னால் அதைப் பிடித்துத் தர முடியாது. நீ பேசாமல் இரு'ன்னு சொல்லியிருக்க வேண்டும். அதை



விட்டுவிட்டு பெண்டாட்டி கேட்டுவிட்டாள் என்றவுடன் வில்லைத் தூக்கிக் கொண்டு மானின் பின்னால் போய் விடுவதா?''

''அதுதான் ஆண்மை. தன்னுடையவள் எதைக் கேட் டாலும் அதைத் தருவதுதான் ஆண்மையின் அடையாளம்...''

''என்னவோ போங்க... லட்சுமணன் போகும்போது கோட்டைக் கிழித்து வைத்துவிட்டுப் போனார். சீதை அதை தாண்டிவிட்டாள்னு குற்றப்பத்திரிகை வாசிக்கி றீங்களே.. சீதை என்ன பாண்டி ஆடவா அந்தக் கோட்டைத் தாண்டினாள்?''

சசிரேகா இப்போது அடக்க முடியாமல் சிரித்துவிட.. அவனின் பார்வை.. மாலினியை விட்டுவிட்டு சசிரேகா வின் மேல் தாவியது. உடனே ஸ்விட்ச் போட்டாற்போல் சசிரேகாவின் சிரிப்பு நின்றுவிட்டது.

''இல்லைதான்..'' அவன் மீண்டும் மாலினியைப் பார்த்து பதில் கூறினான்.

''உங்களைப் போல் ஒரு ஆண்தான் வந்து அவளைக் கோட்டைத் தாண்ட வைத்தான்...''

''என்னைப் போல் ஒருவன்?''

''ஆமாம்...''

''எவன்.. அவன்?''

''அவன்தான் சார்.. ராவணன்...''

இப்போது சசிரேகாவின் சிரித்த முகம் மாறி வெளிறி விட்டது. அவள் பயத்துடன் மாலினியை அடக்க முயன் றாள்.

''சும்மா இரு மாலினி...''

''அதெல்லாம் சும்மா இருக்க முடியாது. பேச்சை ஆரம்பித்தால் அதை முடித்தே தீருவேன்...''

''விடேன் சசி.. அவள் பேசியே முடிக்கட்டும். நீ பேசும்மா..''

'இது எங்கே போய் முடியப் போகிறதோ?' என்று உலகில் உள்ள அத்தனை கடவுள்களையும் உதவிக்கு அழைத்து கையைப் பிசைந்து கொண்டிருந்தாள் சசிரேகா.

''எங்கே விட்டேன்?''

''ராவணனில் விட்டாய். ஏம்மா.. தெரியாமல்தான் கேட்கிறேன்... எதை வைத்து ராவணனை என்னைப் போல் ஒருவன் என்று சொன்னாய்?''

அப்போதுதான்... ஏன் சசிரேகா அப்படியொரு அச்சப் பார்வையை பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்பது புரிந்தது மாலினிக்கு.

''ஐயையோ சார்.. நீங்கள் அந்த அர்த்தத்தில் எடுத்துக் கொண்டீங்களா... நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை சார்...''

''வேறு எந்த அர்த்தத்தில் சொன்னாய்?''

''அவனும் ஆண்குலம்தானே.. அந்த அர்த்தத்தில் தான் சொன்னேன்..''

''ஓஹோ.. ம்ம்.. அப்புறம்?''

''அந்த ராவணன் வந்து மாறுவேடத்தில் சாப்பாடு கேட்டான். பசிக்கு சாப்பாடு போடத்தானே சீதை கோட்டைத் தாண்டினாள்?''

''ஆமாம்.. பாண்டி ஆடத் தாண்டவில்லைதான்..''

சசிரேகாவின் முகம் இப்போது தெளிந்துவிட்டது.



லேசான புன்னகையுடன் அவள் மாலினியைப் பார்த்தாள். அவள் முகத்தில் கடவுள் காப்பாற்றி விட்டாரென்ற நிம்மதி தெரிந்தது.

''அப்படியிருக்க, சீதையின் மேலேயே தப்பு சொல்ல லாமா சார்..''

''சொல்லக்கூடாதுதான். ஏன் சசி... இந்தப் பெண்தான் நம் வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தாளியா?''

அதுவரை அவன் யாரென்று தெரியாமலேயே பேசிக்கொண்டிருந்த மாலினி விழித்தாள்.

'நம் வீடா... இது என்ன.. 'நம் நாடு' என்பது போல இவன் 'நம் வீடு' என்கிறான்.. யார் இவன்?'

''ஆமாம்.. பெரிய அத்தான்...'' என்று சசிரேகா பதில் சொன்னதும், மாலினிக்கு தூக்கிவாரிப் போட்டது.

அவள் பதறிப் போய் தன்னையுமறியாமல் மீண்டும் வாய் விட்டாள்.

''என்னது... பெரிய அத்தானா? இவர்தான் அந்த 'ஹிட்லரா'?''

''ஹிட்லரா?!'' என்றபடி அவன் சசிரேகாவைப் பார்க்க... அவள் பேயறைந்தது போன்ற முகத்துடன் மீண்டும் ஊரில் உள்ள கடவுள்களை எல்லாம் துணைக்கு அழைக்க ஆரம்பித்தாள்.




*உன்னோடு ஒருநாள்..*
*என்னுயிர் கரைந்த நொடியை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

''ஹிட்லரா? நான்? ம்ம்... நீ ரொம்ப தைரியசாலி தான்...'' அவன் நிதானமாக மாலினியை உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை அளவெடுத்து வைக்கும் பார்வை யொன்றைப் பார்த்து வைத்தான்.

''என்ன சார்.. பெண்பார்க்க வந்திருக்கும் மாப்பிள்ளை பார்ப்பது போலவே என்னையும் பார்த்து வைக்காதீங்க...'' என்று மாலினி அவனைப் பார்த்து கேட்டு வைத்தாள்.

''மாலினி...'' சசிரேகா இப்போது அதட்டியே விட்டாள்.

ஆனால்.. மாலினியின் கேள்வியைக் கேட்ட பிரபாகரனின் கண்களில் ஒரு மின்னல்தான் வந்துபோனதே தவிர.. அவன் முகம் கோபத்தைக் காட்டவில்லை. அதே சமயம் சிரிப்பையும் காட்டவில்லை.

''உன் சித்தப்பா மகள் பெரிய அறிவாளியாய் இருக்கிறாளே சசி...'' அவன் அமர்த்தலாய் கூறவும்.. சசி கொஞ்சம் ஆசுவாசமானாள்.

''ஆமாம் அத்தான்...''

''ஆனால், இந்த அறிவுக்கடலை மார்த்தாண்டம் தாங்குமான்னுதான் தெரியவில்லை...'' என்று அடுத்து அவன் கூறியதைக் கேட்டதும்.. சசிரேகாவின் முகத்தில் பயம் வந்துவிட்டது.

''நான் இவளிடம் சொல்லிவைக்கிறேன் அத்தான்..''

''என்ன சொல்வாய் சசி.. நீ சொல்லும் விவரங்களை வைத்து இவள்.. இன்னும் யார் யாருக்கு என்ன என்ன பட்டப் பெயரையெல்லாம் வைக்கப் போகிறாளோ.. தெரியவில்லை. ஹிட்லர்! ஆமாம் மாலினி...'' என்று சசிரேகாவிடம் ஆரம்பித்து.. மாலினியிடம் கேள்வி கேட்டான் பிரபாகரன்.



அவள் 'என்ன' என்பது போல் பார்த்து வைக்க...

''பேச மாட்டாயா?'' என்று வேறு துணை கேள்வி கேட்டான்.

''ஏன் சார்... இவ்வளவு நேரமும் என்னைப் பேச வைத்து வேடிக்கை பார்த்துவிட்டு இப்படி ஒரு கேள்வியைக் கேட்கறீங்களே.. இது உங்களுக்கே நன்றாக இருக்கிறதா?''

''இல்லை. பேச்சு மறந்துவிட்டதோன்னு நினைத்தேன்..''

'உன் வீட்டில் இன்னும் கொஞ்ச நாள் இருந்தால் கட்டாயம் மறந்துதான் போகும்..'

''என்ன பதிலைக் காணோம்..''

''நான் ஊமையில்லை சார்.. நீங்க கேட்க வந்ததை தாராளமாக கேளுங்க..''

''உன் பெயர் மாலினிதானே..''

'தேவைதான் எனக்கு...' என்று மனதிற்குள் நினைத்தபடி அவனை இமைக்காமல் பார்த்தாள் மாலினி.

அவளை வாயைத் திறக்கவிட்டால் எக்குத்தப்பாய் எதையாவது பேசி வைத்துவிடுவாள் என்று பயந்து போன சசிரேகா.. அவசரமாய் பதில் சொன்னாள்..

''ஆமாம் பெரிய அத்தான்.. இவள் பெயர் மாலினி தான்..''

''ஏன்.. உன் தங்கை வாய் திறந்து பேச மாட்டாளா?''

இப்போதும் கேள்வியை சசிரேகாவிடம் கேட்டுக் கொண்டே பார்வையை மாலினியின் மேல் பாய்ச்சினான் பிரபாகரன்.

''எதற்கு சார் வம்பு? நான் வாயைத் திறந்தால் அவ்வளவு சீக்கிரமாக மூட மாட்டேன்..''

''பரவாயில்லை.. உனக்கும் இது தெரிந்திருக்கிறது..''

''ஊருக்கே தெரியும் சார்.. அதனால்தானே உங்களிடம் அறிவுக்கடல்னு பட்டம் வாங்க வேண்டியிருக்கு..''

''ஹிட்லர் என்கிற பட்டத்தைவிட அறிவுக்கடல் என்கிற பட்டம் மட்டமாகப் போய்விடவில்லை..''

அவன்.. இவ்வளவு இலகுவா.. விஷயத்தை விட்டு விட்டானே என்று சசிரேகா நிம்மதியாக உணர்ந்து கொண் டிருந்தபோது.. அவன் மீண்டும் மாலினியைப் பார்த்து..

''அது ஏன்.. எனக்குப் போய் ஹிட்லர் என்கிற பட்டப் பெயரை வைத்தாய்?'' என்று மீண்டும் கேட்டு வைத்தான்.

''அதைவிட பொருத்தமான பட்டப் பெயர் எனக்கு கிடைக்கவில்லை சார்..'' மாலினி போலி மரியாதையோடு கூறினாள்.

சசிரேகாவிற்கு சற்று முன் கிடைத்த நிம்மதி பறந்தே போய்விட்டது. உயிர் வந்து உயிர் போகும் இந்த நிலைமை மாறாதா என்று அவள் மனதிற்குள் ஏக்கப்பட ஆரம்பித் தாள்.

மாலினியின் பதிலைக் கேட்ட பிரபாகரனின் கண் களில் மீண்டும் மின்னல் வெட்டு வந்து போனது.

''ஓஹோ.. அதுசரி.. சார்.. சார்னு என்னைப் பார்த்துக் கூப்பிடுகிறாயே.. நீயென்ன.. என் ஆபீஸ் ஸ்டாஃபா?''

''இல்லைதான்..''

''பின் ஏன் சார் போடுகிறாய்?''

''வேறு என்ன போடுவது?''



'எப்படித்தான் இவள் வாயை மூடவைப்பது..' என்று கடுமையாக யோசிக்கவே ஆரம்பித்து விட்டாள் சசிரேகா.

அந்த வீட்டில் பிரபாகரனுக்கு எதிராக நின்று பேச நர்மதாவே யோசிப்பாள். அப்படியே பேச நேர்ந்தாலும்.. 'சரிப்பா.. சரிப்பா..' என்றுதான் மரியாதையுடன் பதில் கூறுவாள். அப்பேர்ப்பட்டவனிடம் கொஞ்சம்கூட பய மில்லாமல் மாலினி வாயடித்துக் கொண்டிருந்ததைக் கண்டு சசிரேகாவிற்கு கவலையாக இருந்தது.

ஆனால் பிரபாகரன்.. மாலினியின் பேச்சை இலகு வாக எதிர்கொண்டான்.

''என்ன போடுவதா? ஏன்.. 'அத்தான்' போடுவது'' என்று அவன் சொல்லவும்.. சசிரேகாவிற்கு ஆச்சரியமாகப் போய்விட்டது.

'பெரிய அத்தானா.. இப்படிப் பேசுவது?' என்று அவள் திறந்த வாயை மூடாமல்.. பிரபாகரனைப் பார்த்தாள்.

''அத்தான் என்று சொல்வதா.. யாரை.. உங்களையா?'' மாலினி.. கழுத்தைச் சாய்த்து பிரபாகரனை ஒரு மார்க்கமாய் பார்த்தாள்.

''ஏன்.. என்னை அத்தான் என்று கூப்பிட்டால் ஆகாதா?''

''முன்பின் தெரியாதவங்களிடம் எல்லாம் நான் உறவுமுறை சொல்லிக் கூப்பிடுவது இல்லை...''

''நான் முன்பின் தெரியாதவன் இல்லையே...''

''அதுதானே... என் கண்ணெதிரேதானே நீங்க நின்று கொண்டிருக்கீங்க...''

''நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை...''

''வேறு எந்த அர்த்தத்தில் சொன்னீங்க...''

''சசிரேகாவின் பெரிய அத்தான்... உனக்கும் அத்தான் முறைதானே ஆக வேண்டும்? நான் அந்த அர்த்தத்தில் சொன்னேன்..''

''எனக்கு அப்படியெல்லாம் கூப்பிட வராது சார்..''

''ஊஹூம்.. இந்த சாரை அவாய்ட் பண்ணு. என் வீட்டில் உறவுக்காரப் பெண்ணாக வந்து தங்கியிருப்பவள் என்னை சார்ன்னு கூப்பிட்டு வைத்தால் இந்த ஊர் என்ன சொல்லும்?''

''என்ன சொல்லும்?''

''நீ எங்கள் உறவுக்காரப் பெண்ணில்லையென்று சொல்லும்..''

இதையேதான் நர்மதாவும் சொன்னாள் என்பதை நினைவுகூர்ந்த மாலினி... பதிலுக்கு வழக்கடிக்காமல் அமைதி காத்தாள்.

''என்ன பதிலைக் காணோம்..''

'இவன் பெரிய கேள்வியின் நாயகன்.. கேள்விக் கணைகளை வீசிக்கொண்டே இருப்பான். நான் வாய் வலிக்கப் பதில் சொல்லிக்கொண்டே இருக்க வேண்டும்.

மனதிற்குள் பிரபாகரனை தாளித்தபடி வெளியே அதைக் காட்டிக் கொள்ளாமல் நிமிர்ந்து அவனைப் பார்த் தாள் மாலினி.

''அதுவா அத்தான்... நீங்கள் கேள்விகளை நான்தான் கேட்பேன்னு.. அத்தான்... குத்தகைக்கு எடுத்து வைத்திருக் கிறீங்களா அத்தான்.. அதனால் அத்தான்.. என்னால் அத்தான்.. உங்கள் வேகத்துக்கு ஈடுகொடுத்து அத்தான்.. பதில் பேச முடியவில்லை அத்தான்.. போதுமா அத்தான்..''



''ஒரு அத்தான் போடச் சொன்னதற்கு... நீ எட்டு அத்தான் போட்டுவிட்ட பின்னாலும் நான் போதாது என்று சொல்வேனா. அதுதான் வார்த்தைக்கு ஒரு அத்தானைப் போட்டு விட்டாயே... இன்றைக்கு இதுபோதும்..''

''நாளைக்கும் இருக்கிறதா அத்தான்...''

''இல்லாமல் போய்விடுமா...''

அவன் இப்போது மெல்லிய சிரிப்பை உதிர்த்து விட்டு வீட்டை நோக்கிச் சென்றான். வீட்டுப்படிகளில் ஏறியவன்.. கடைசி வினாடியில் திரும்பி மாலினியைப் பார்க்க... அவ்வளவு நேரமும் அவனையே பார்த்துக் கொண் டிருந்த மாலினி.. அவசரமாய் பார்வையை விலக்கிக் கொண்டாள்.

அவளுடைய பார்வையை கண்டுகொண்ட மர்ம சிரிப்புடன் அவன் வீட்டிற்குள் சென்றுவிட்டான்.

'கண்டுகொண்டானே...' மாலினிக்கு வெட்கமாக போய்விட்டது.

''மாலினி..'' சசிரேகா ஆச்சரியத்துடன் பேசினாள்.

''என்ன சசி...''

''இது.. கனவா.. இல்லை, நனவான்னு எனக்கு இருக்கு..''

''ஏன்?''

''பெரியவர் யாரிடமும் இவ்வளவு நேரம் நின்று பேசியதில்லை..''

''பெரியவரா... உன் வீட்டில் வயதானவர்கள் யாரும் இல்லையே... உன் மாமியாரையா சொல்கிறாய்?''

''ஏண்டி.. நீ வேற.. நான் பெரிய அத்தானைச் சொல் கிறேன்..''

''ஹிட்லரையா பெரியவர்னு சொன்னாய்.. நான் என்னவோ தடியூன்றும் தொண்டுக் கிழவர்னு நினைத்து விட்டேன்..''

''இந்த வாய்தானேடி என்னைக் கதிகலங்க வைக்குது..''

''கவலையே படாதே... இனி கொஞ்சம் அடக்கி வாசிக்கிறேன்..''

''அதைச் செய்யடி தாயே... உனக்கு கோடி புண்ணியமாக போகும். கொஞ்சம் கருணை காட்டு..''

அவர்கள் சற்றுநேரம் தோட்டத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். பேச்சின் மும்முரத்தில் நேரம் ஓடுவதை மறந்துவிட்ட சசிரேகா.. பதறிப்போய் எழுந்தாள்.

''என்னடி.. என்ன ஆச்சு?''

''இருட்டி இவ்வளவு நேரம் ஆகிவிட்டதா?''

''அதனால் என்னடி... வீட்டுக்குள்தானே இருக்கிறோம்?''

''உனக்குப் புரியாது.. என் ஹஸ்பெண்ட் வரும் நேரமாகி விட்டது. வா.. வீட்டுக்குள் போய்விடலாம்..''

சசிரேகா.. மாலினியின் கையைப் பிடித்துக் கொண்டு வீட்டுப் படிகளில் ஏறிக்கொண்டிருந்தபோது... காரின் முன்பக்க விளக்கின் ஒளிவெள்ளம் அவர்கள் மேல் பாய்ந்தது.

''அத்தான் வந்துவிட்டார்..'' சசிரேகா பதறி நின்றாள்.

'இவள் ஏன் இப்படிப் பயப்படுகிறாள்?' என்ற யோசனையுடன் காரைப் பார்த்தாள் மாலினி..

காரின் கதவைத் திறந்துகொண்டு கருணாகரன் இறங்கினான். மனைவியைப் பார்த்து.. அவன் மெலிதாகப் புன்னகைக்கவும்..



''அப்பாடி..'' என்று வாய்விட்டுச் சொல்லி நிம்மதியாக மூச்சுவிட்டாள் சசிரேகா..

''ஏண்டி.. இப்படிச் செத்துச் செத்துப் பிழைக்கிறாய்..''

''என் தலைவிதி..'

''உன்னைப் போய் எல்லோரும் மார்த்தாண்ட அரண்மனையின் இளைய ராணின்னு பெருமையாய் பேசிக்கிறாங்க.. கடைசியில் உன் நிலைமை இதுதானா?''

''அத்தான் வருகிறார் மாலினி... கீப் கொய்ட்..''

அவர்களை சமீபித்த கருணாகரன்... மாலினியைப் பார்த்து..

''ரெஸ்ட் எடுத்தாயாம்மா?'' என்று விசாரித்தான்.

''எடுத்தேன் அத்தான்..''

''எங்கள் வீட்டில் இருப்பதில் உனக்கு வசதிக் குறைவு எதுவும் இல்லையே...''

'அது இருக்கிறது நிறைய. ஆனால், அதை வாயைத் திறந்து என்னால் சொல்லவா முடியும்?'

''அதெல்லாம் இல்லை அத்தான்..''

''குட்.. சசி.. உன் தங்கையை சாப்பிடக் கூப்பிட்டுக் கொண்டு வா...''

''நான் வந்து கொள்வேன் அத்தான்.. சசி.. நீ போய் அத்தானைக் கவனி...''

நன்றி கலந்த பார்வையை மாலினியின் மேல் வீசிவிட்டு சசிரேகா கணவனின் பின் சென்றுவிட.. மாலினி யோசனையுடன் மாடிப்படி ஏறினாள்.

''நீதான்.. இந்த வீட்டிற்கு வந்திருக்கும் விருந் தாளியா?''

ஏளனமான அந்தக் குரலைக் கேட்டதும்.. நிமிர்ந்து பார்த்தாள் மாலினி. எதிரே... மிகப் பகட்டான.. விலை யுயர்ந்த சுடிதாரில் இருந்த பெண்ணின் விழிகளில் உதாசீனம் தென்பட்டது. அவளது கை.. காது.. கழுத்துக் களில் இருந்த வைர நகைகள் ஒளிர்விட.... அவள் மிக அலட்சியத்துடன் நின்றுகொண்டிருந்தாள்.



*உன்னைத் தொட்ட காற்று...*
*என்னைத் தொட்ட உணர்வை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

'ஏன் இந்தப் பெண் இப்படியொரு உதாசீனப் பார்வை பார்க்கிறாள்?' என்றுதான் அவளைப் பார்த்த வுடன் மாலினி யோசித்தாள். அதே ஆராய்ச்சியுடன்தான் அந்தப் பெண்ணைப் பார்க்கவும் செய்தாள். ஆனால், அந்தப் பெண்ணோ...

'நீயெல்லாம் எனக்கு நிகரா...' என்பது போல ஒரு அலட்சியப் பார்வை பார்த்தபடி உதடுகளை ஏளனமாக வளைத்தாள்.

''என்ன அப்படிப் பார்க்கிறாய்.. நீ வைரங்களை பார்த்திருக்க மாட்டாய்தான். என் நகைகளின் ஜொலிப் பைப் பார்த்தால் பட்டிக்காட்டான் மிட்டாய் கடையைப் பார்த்தது போல பார்க்கத் தோன்றும்தான். அதற்காக இப்படியா ஆன்னு வாயைப் பிளப்பாய்?''

'ஓ.. இவளுக்கு.. இவளுடைய வைர நகைகளின் மேல் தற்பெருமையா... ஆனால்.. இந்த வீட்டில் பிறந்த



பெண் இப்படி அலட்டிக்கொள்ள மாட்டாளே.. நிறைகுடம் எங்காவது தளும்புமா?'

மாலினிக்குள் யோசனை வந்தது.. அப்போது.. ''ஸ்வேதா.. யாருடன் பேசிக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்டபடி வேறு ஒரு பெண் படியிறங்கி வந்தாள்.

ஆகாய வண்ணத்தில் பிரிண்டட் சேலையுடுத்தி யிருந்த அந்தப் பெண்ணும் வைர நகைகளைத்தான் அணிந் திருந்தாள். சுடிதார் பெண்ணிடம் இருந்த உதாசீனப் பார்வை அவளிடம் இல்லை. மாறாக நளினம் கலந்த கம்பீரமான அழகுடன்.. ஒரு ராஜகுமாரியைப் போல் இருந்தாள் அவள்.

'ராஜகுமாரி! ஒருவேளை.. இவள்தான் இந்த வீட்டின் கடைக்குட்டி பெண் காயத்ரியோ...'

மாலினி நினைத்தது சரியென்று உணர்த்தினாள் அந்த ஸ்வேதா.

''நான் ஒன்றும் இவளுடன் பேசிக் கொண்டிருக்க வில்லை காயத்ரி. இவள்தான் என் வைர நகைகளைப் பார்த்துவிட்டு வாயைப் பிளந்துகொண்டு நிற்கிறாள்...''

ஸ்வேதா பேசியதைக் கேட்டதும்.. கண்டிப்புடன் முகத்தைச் சுளித்தாள் காயத்ரி.

''ஸ்ஸ்... இப்படியெல்லாம் பேசக்கூடாதுன்னு உனக்கு லட்சம் தடவை சொல்லிவிட்டேன் ஸ்வேதா. நீ கேட்கிறபாடாய் இல்லை. அம்மாவுக்கும் பெரிய அண்ண னுக்கும் நீ இப்படிப் பேசியது தெரிந்தால் கோபப்படு வார்கள்..''

''என்னவோ போ.. கருணா அத்தானுக்கு நமக்கு சமமில்லாத வீட்டிலிருந்து பெண்ணை எடுத்தாலும் எடுத்தீங்க... யார் யாரோ உறவு கொண்டாடிக்கிட்டு இந்த வீட்டுக்குள் வந்து நின்றுவிடுகிறாங்க?''

ஸ்வேதாவின் இந்தப் பேச்சு சுருக்கென்று முள்ளாக மாலினியின் மனதில் தைத்தது.

'இவளுக்கு எதற்காக.. இவ்வளவு ஆணவம்..'

மாலினி கோபத்துடன் பேச வாய்திறந்தபோது காயத்ரி அவளை முந்திக் கொண்டு ஸ்வேதாவை அதட்டினாள்.

''ஷட் அப் ஸ்வேதா.. நீ கீழே போ.. நான் வருகிறேன்..''

''மூன்றாம் மனிதர்கள் முன்னால் என்னை அதட்டாதே காயத்ரி...''

''இவங்க மூன்றாம் மனுஷியில்லை. என் அண்ணியின் தங்கை. வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தாளி. புரிந்ததா?''

ஸ்வேதாவின் கோபத்தின் பரிமாணம் அவள் தடதடவென்று படிகளில் இறங்கிப் போன வேகத்திலிருந்தே தெரிந்தது.

''அவள் பேசியதை மனதில் வைத்துக் கொள்ளாதீங்க...'' காயத்ரி அழகாக புன்னகைத்தாள்.

''நீங்கள்தான் காயத்ரியா?''

''என்னை உங்களுக்குத் தெரியுமா?''

''உங்கள் வீட்டுக்கு வருவதற்கு முன்னாலேயே.. உங்க வீட்டில் இருக்கிறவங்க எல்லோரின் பயோடேட்டாவும் எனக்குத் தெரியும்..''

''எப்படி... அண்ணி சொன்னாங்களா?''

''அவள் போனில்.. ஹலோ சொன்னாலே அதிகம்..''

''வேறு யார் சொன்னது?''

''எல்லாம்... அந்த பரந்தாமனின் வாக்குமூலம்தான்..''

''ஓ.. பரந்தாமன் சொன்னாரா?''

''ம்ம்ம்...''

''நீங்கள் மெக்கானிக்கல் இன்ஜினீயராமே..''

''ஆமாம்.. நீங்க என்ன பண்றீங்க?''

''பி.ஈ... கம்ப்யூட்டர் இன்ஜினீயரிங் படிக்கிறேன்..''



''எங்கே?''

''கன்யாகுமரியில்...''

நட்புடன் புன்னகை செய்த காயத்ரி... தலையசைத்துவிட்டுப் படியிறங்க.. மாலினி படியேறி.. அவளுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தாள்.

சற்று நேரத்தில் அறைக்கதவு தட்டப்பட்டது. அலமாரியில் இருந்த துணிகளை சரிபார்த்துக் கொண்டிருந்த மாலினி.. அறைக்கதவைத் திறந்தாள். பொன்னி நின்றிருந்தாள்.

''என்ன பொன்னி?''

''அம்மா சாப்பிட வரச் சொன்னாங்க..''

''இதோ வருகிறேன்..''

அறைக்கதவை பூட்டிவிட்டு பொன்னியிடம் பேசியபடி இறங்கினாள் மாலினி.

டைனிங் ஹாலில் போடப்பட்டிருந்த பெரிய டைனிங் டேபிளைச் சுற்றியிருந்த இருபத்து நான்கு சேர்களிலும் அவர்கள் அமர்ந்திருந்தால் எப்படியிருக்கும் என்று எண்ணியபடி சசிரேகாவின் அருகே சென்று அமர்ந்து கொண்டாள் மாலினி.

''வர வர நம் வீட்டில் நிம்மதியாகவே சாப்பிட முடியவில்லை அத்தை...'' என்றாள் ஸ்வேதா.

'ஆஹா... இவள் ஏதோ வில்லங்கமாய் பேசப் போகிறாளோ..' என்று எண்ணினாள் மாலினி.

அவள் எண்ணியதையே காயத்ரியும் எண்ணினாளோ என்னவோ அவள் விழிகளால் ஸ்வேதாவை அதட்டினாள்.

ஆனால்.. ஸ்வேதாவா அதைக் கண்டுகொள்வாள்.

அவள் தன் போக்கில் உதாசீனப் பார்வையொன்றை மாலினியின் மீது வீசியபடி நர்மதாவின் பக்கம் பார்த்தாள்.

''ஏன் ஸ்வேதா அப்படிச் சொல்கிறாய்?'' என்றாள் நர்மதா.

அவள் அந்தக் கேள்வியைக் கேட்க வேண்டும் என்பதற்காகத்தானே ஸ்வேதா அப்படிச் சொன்னாள். அவள் உடனே வாய்திறந்தாள்.

''வரவர நம் வீடு சத்திரம் சாவடியைப் போல ஆகி விட்டது அத்தை. நம் மனுஷங்களாக உட்கார்ந்து ஒரு வாய் சாப்பிட முடியவில்லை...''

ஸ்வேதாவின் பார்வை மாலினியின் மேல் படிய.. அவள் மாலினியைத்தான் சொல்கிறாள் என்பது எல்லோருக்கும் விளங்கிவிட்டது.

நர்மதா தர்மசங்கடம் அடைந்தாள். வெளிப்படையாய் ஸ்வேதாவைக் கண்டிக்க முடியாது. அப்படிக் கண்டித்தால் மாலினி சங்கடப்படுவாள். கண்டுகொள்ளாமல் இருக்கவும் முடியாது. ஏனென்றால்.. ஸ்வேதா அதை தனக்குச் சாதகமாக நினைத்துக் கொண்டு மேலே மேலே பேசுவாள்.

'என்ன செய்வது..' என்று நர்மதா யோசித்துக் கொண்டிருக்கும்போது.. மாலினி நிமிர்ந்து ஸ்வேதாவின் முன்னால் இருந்த தட்டைப் பார்த்தாள்.

தட்டில் சிறிதளவுகூட இடம் இல்லாமல்.. உணவு வகைகள் நிரம்பியிருந்தன.

'இதுதான் இவள் ஒரு வாய் சாப்பிடும் லட்சணமா.. ஒரு வாய் சாப்பிடும் திருவாயா இது.. பத்துப் பேர் சாப்பிடுவதை இவள் ஒற்றை ஆளாக வரிந்து கட்டிக் கொண்டு உள்ளே தள்ளிவிட்டு பேச்சை பார் பேச்சை!

மாலினியின் பார்வை அவளது நினைவைச் சொல்லிவிட... ஸ்வேதாவின் முகம் கடுத்தது.

'கொஞ்சமாவது ரோஷம் வருகிறதா... அதை விட்டு விட்டு என் தட்டை பார்வையிடுகிறாளே...'

மாலினி, சசியின் பக்கம் திரும்பினாள். ஒன்றும் அறியாதவள் போல முகத்தை வைத்துக் கொண்டு வினவினாள்.



''சசி.. இந்தச் சத்திரம் சாவடின்னா என்ன... நான் பிறந்ததில் இருந்து இதைக் கேள்விப்பட்டதே இல்லை... நீ கேள்விப்பட்டிருக்கிறாயா?''

ஸ்வேதா.. கருணாகரனுக்கு ஒன்றுவிட்ட மாமன் மகள். ஸ்வேதாவின் அப்பா.. நர்மதாவின் பெரியப்பா மகன். அந்த உறவுமுறையைச் சொல்லிக் கொண்டு அவளுடைய ஊரான கருங்கல்லில் இருக்காமல் மார்த்தாண்டபுரத்திலேயே மையம் கொண்டு விடுவாள். அவள் வரும்போதெல்லாம் சசிரேகாவை மட்டம் தட்டுவதால் சசிரேகாவிற்கு அவளைக் கண்டாலே ஆகாது. போதாக் குறைக்கு.. அவள் கருணாகரனை மணந்து கொள்ள நினைத்தாளென்று ஒரு நாள் கருணாகரன் பேச்சுவாக்கில் மனைவியிடம் சொல்லிவிட.. அது முதல் சசிரேகா, ஸ்வேதாவை எதிரியைப் பார்ப்பது போலத்தான் பார்த்து வைப்பாள்.

பல நாள் பகையைத் தீர்த்துக் கொள்ள சந்தர்ப்பம் கிடைத்த உற்சாகத்தில் சசிரேகா நிமிர்ந்து அமர்ந்தாள்.

''ஊஹூம்.. எனக்கும் அதைப் பற்றியெல்லாம் தெரியாது... நம் வீட்டில் அதைப் பற்றி பேசியதுகூட இல்லையே... நாமெங்கே அதைக் கண்டோம்?''

ஸ்வேதாவின் முகத்தில் ஈயாடவில்லை. இதுபோல ஒரு உடனடியான பதில் தாக்குதல் வரும் என்று நினைத்துக் கூடப் பார்த்திராதவள்... என்ன சொல்வது என்று தெரியாமல் வேறு பேச்சிற்கு தாவினாள்.

''ஸ்.. ஸ்... என்ன அத்தை... டைனிங் ஹாலில் ஏ.ஸி. பண்ணுங்கன்னு எத்தனை நாள் உங்களிடம் சொல்லியிருக்கிறேன்... இப்படி புழுங்குகிறதே...''

'புழுக்கம் உன் உடலிலா.. இல்லை மனதிலா..' மாலினியின் இதழ்களில் கேலிப் புன்னகை உதயமானது.

நர்மதாவோ வாய்விட்டுச் சிரித்துவிட்டாள். அவளுக்கு மாலினியின் புத்திசாலித்தனத்தைக் கண்டு பிரியம் வந்தது.

''செந்தாமரை.. மாலினிக்கு என்ன வேண்டும்னு கேட்டுப் போடு...'' என்று உத்தரவு வேறு பிறப்பித்தாள்.

''இதென்னம்மா... என் தட்டில் எல்லாம் காலியாகி விட்டது. என்னைக்கூடக் கவனிக்காமல்.. புதிதாய் வந்திருக்கும் பெண்ணைக் கவனிக்கிறீங்களே.. இது உங்களுக்கே நியாயமாய் இருக்கா..'' என்று பிரபாகரன் கேட்டதும்.. சசிரேகாவைத் தவிர அங்கேயிருந்த எல்லோருமே ஆச்சரியப்பட்டுப் போனார்கள்.

காயத்ரி வெளிப்படையாகவே தன் கையைக் கிள்ளிக் கொண்டாள்.

''என்ன காயத்ரி இது.. சிறுபிள்ளை போல் கையைக் கிள்ளிக் கொள்கிறாய்.. கை வலிக்காதா?'' நர்மதா மகளைக் கடிந்து கொண்டாள்.

''இது கனவா.. இல்லை நனவான்னு எனக்குச் சந்தேகம் வந்துவிட்டது அம்மா..'' காயத்ரி குறும்புடன் பிரபாகரனைப் பார்த்து நகைத்தாள்.

அங்கிருந்த எல்லோருமே காயத்ரியின் கேலியைப் புரிந்துகொண்டு சிரித்தார்கள், ஸ்வேதாவைத் தவிர.

''ஏன் உனக்கு அப்படியொரு சந்தேகம் வந்தது காயத்ரி?'' என்று அவள் கேட்டாள்.

''பெரியண்ணா இவ்வளவு இயல்பாக கிண்டலடித்துப் பேசி நான் இப்போதுதான் கேட்கிறேன் ஸ்வேதா..'' காயத்ரி சிரிப்பு மறையாமல் பதில் சொன்னாள்.

''அவர் இருக்கும் உயரத்திற்கு.. அவர் இவ்வளவு கீழே இறங்கி வந்தெல்லாம் பேசவே கூடாது. இதைக் கண்டிப்பதை விட்டுவிட்டு.. அத்தை கூட சேர்ந்து சிரிக்கிறாங்களே என்று எனக்கு இருக்கிறது. வரவர இந்த டைனிங் ஹால் சமபந்தி போஜனம் நடக்கும் இடமாகி விட்டது...'' ஸ்வேதா பார்வையாலேயே மாலினியைச் சுட்டாள்.



'நீ பார்க்கும் பார்வை என்னை ஒன்றும் செய்து விடாது...' என்பது போல அலட்சியமாய் ஒரு பதில் பார்வை பார்த்த மாலினி... ஸ்வேதாவின் பேச்சிற்கும் தனக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்பது போல சாப்பாட்டில் கவனமாக இருந்தாள்.

சசிரேகாவினால் அப்படி இருக்க முடியவில்லை. அவள் நிமிர்ந்து கருணாகரனை ஒரு பார்வை பார்த்தாள். கருணாகரன்.. பிரபாகரனைப் பார்த்தான். பிரபாகரன் அழுத்தமான பார்வை ஒன்றை ஸ்வேதாவின் மீது வீசினான்.

எப்போது அவன் தன்னைப் பார்ப்பான் என்று காத்துக் கிடந்த ஸ்வேதாவிற்கு அந்தப் பார்வையைக் கண்டதும் உள்ளுக்குள் குளிரெடுத்தது.



*நீ தொடாத போதும்...*
*உன் பார்வை தொடும் உணர்வை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

''நான் என்ன பேச வேண்டும்.. எதைப் பேசக் கூடாது என்று சொல்ல நீ யார்?'' பிரபாகரனின் கேள்வி கடுமையாக வெளிவந்தது.

''அத்தான்..'' ஸ்வேதா ஏதோ சொல்லப் போனாள்.

''ஸ்டாப் இட்.. இந்த டைனிங் ஹால் சமபந்தி போஜனம் செய்யும் இடமாகிவிட்டதுன்னு எதை வைத்துச் சொல்கிறாய்.. நீயும் எங்களுடன் சேர்ந்து சாப்பிடுவதாலா?'' பிரபாகரன் அனலாய் சுட்டான்.

''அத்தான்..'' ஸ்வேதாவின் முகம் அவமானத்தில் சிறுத்துவிட்டது.

'இதைவிட மோசமாக இவள் மூக்கு உடைபட முடியாது..' மாலினி நினைத்துக் கொண்டாள்.

அதற்குப் பின் டைனிங் டேபிளில் யாருமே வாய் திறக்கவில்லை. குண்டூசி விழுந்தால்கூடச் சத்தம் கேட்கு மளவிற்கு அங்கு அமைதி நிலவியது.

'ரொம்ப நாள் கழித்து பெரியண்ணன் சிரித்து இரண்டு வார்த்தை பேசினார். அதை இந்த ஸ்வேதா வாய்விட்டுக் கெடுத்துவிட்டாளே' என்று காயத்ரி.. ஸ்வேதாவை மனதிற்குள் திட்டிக் கொண்டிருந்தாள்.

மாலினி கைகழுவ எழுந்தாள். பின்னாலேயே வந்த சசிரேகா கிசுகிசுப்பான குரலில்..

''உன் அறைக்குப் போய்விடு.. நான் பின்னாலேயே வருகிறேன்'' என்றாள்.

மாலினி தலையசைக்காமல் அங்கிருந்து வெளி யேறி.. மாடிப்படிகளில் ஏறினாள். அவசரக் காலடியோசை அவளுக்குப் பின்னால் கேட்டது. ஸ்வேதாவாக இருக்கும் என்று நினைத்துக் கொண்டாள்.

''ஏய்ய்.. நில்லு..''

மாலினியின் கணிப்பு சரியாக இருந்தது. ஸ்வேதா மூச்சிரைக்க மாலினியின் அருகே வந்து நின்றாள்.

'நீ.. சொல்லி நான் நிற்பதா...'

மாலினி நிற்காமல் படியேறினாள். ஸ்வேதாவின் கோபம் அதிகமானது. அவள் மாடி ஹாலில் மாலினியை வழிமறித்தாள்.

''உனக்கு எவ்வளவு திமிரிருந்தால் நான் கூப்பிடக் கூப்பிட காதில் விழாதது போலப் போவாய்...''

''எனக்கு டயர்டாக இருக்கிறது. நாளைக் காலை யில் நான் வேலையில் ஜாயின் பண்ண வேண்டும். நின்று பேச எனக்கு நேரமில்லை...''



இவளிடமெல்லாம் இப்படித்தான் பேச வேண்டும் என்ற முடிவோடு மாலினி அலட்சியமாகப் பதில் கூறி விட்டு நகரப் போனாள். ஸ்வேதாவின் முகம் பயங்கரமாய் மாறிவிட்டது.

''உனக்குத்தான் வேலையிருக்கிறது.. எனக்கு வேலை இல்லையென்கிறாயா?''

''அப்படி நான் சொல்லவில்லையே.. நீங்கள் வேலை பார்க்கறீங்களா? எங்கே வேலை பார்க்கறீங்க?''

''கூலிக்கு வேலை பார்க்க வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. நான் கூலி கொடுக்கும் முதலாளி பரம் பரையில் பிறந்து வளர்ந்தவள்..''

கர்வமாக ஸ்வேதா பேச... அதை முகத்தில் சலனமில் லாமல் கேட்டுவிட்டு...

'எனக்கென்ன...' என்று ஒரு பார்வையையும் ஸ்வேதாவை பார்த்து வைத்தாள் மாலினி.

''லுக் மிஸ் ஸ்வேதா... உங்கள் பெருமை உங்க ளோடு... எனக்கு அதைக் கேட்க நேரமில்லை. நான் தூங்க வேண்டும். நேற்று ஃபுல் நைட் பஸ் ஜர்னி பண்ணிவிட்டு வந்திருக்கிறேன். ஐ ஆம் ஸோ டயர்டு...''

ஸ்வேதாவிற்கு கோபம் அளவு கடந்து வந்தது. எவ்வளவு உதாசீனப்படுத்தினாலும் அதைக் கண்டுகொள் ளாமல் நொடிப் பொழுதில் அதைவிட நூறு மடங்கு அதிகமாக உதாசீனம் செய்யும் மாலினியைப் பார்த்து பல்லைக் கடித்தாள்.

''இப்படியொரு சாப்பாட்டை இதற்கு முன் நீ சாப்பிட் டதே இல்லையா... அந்த வெட்டு வெட்டினால் தூக்கம் வரத்தான் செய்யும்...''

''இதை நீங்கள் சொல்லக்கூடாது.. உங்கள் தட்டுதான் நொடிப்பொழுதில் நிறைந்து, மறுநொடியில் காணாமல்

போய் கொண்டிருந்ததே.. போன வாரம் டி.வி-யில் ஒரு பழைய பாட்டுப் பார்த்தேன். அதில் கடோத்கஜன் இப்படித் தான் சாப்பாட்டைக் காலி செய்தான். பாட்டுக்கூட நினை வில் இருக்கிறது..''

ஸ்வேதா முறைப்பதைப் பொருட்படுத்தாமல் மாலினி வாய்விட்டுப் பாடினாள்..

*''கல்யாண சமையல் சாதம்...*
*காய்கறிகளும் பிரமாதம்...*
*அந்த கௌரவ பிரசாதம்...*
*இதுவே எனக்குப் போதும்...''*

''போதும் மாலினி.. என் கோபத்துடன் அதிகம் விளையாடுகிறாய். இது உன் ஊரில்லை. பார்த்து நடந்து கொள்...''

''எனக்கும் இது சென்னையில்லை.. மார்த்தாண்டம் தான்னு தெரியும் ஸ்வேதா. என் கண்பார்வை தெளிவாகத் தான் இருக்கிறது.. நான் பார்த்துதான் நடக்கிறேன்...''

''நான் இந்த வீட்டின் வருங்கால மருமகள்...''

'பாவம்.. எவன் உன்னிடம் மாட்டப் போகிறானோ..'

''எனக்கு இந்த வீட்டில் எல்லா உரிமையும் இருக் கிறது...''

'இருந்தால் இருந்துவிட்டுப் போகட்டும்... எனக்கு அதைப் பற்றி என்ன வந்தது. நான் உன்னிடம் இதைக் கேட்டேனா..'

''நானும் பெரிய அத்தானும் இன்றைக்கு அடித்துக் கொள்வோம். நாளைக்கு கூடிக் கொள்வோம்..''

'உன்னைப் போய் ஒரு மனித ஜீவன்கூட நினைக் குமா.. அந்த பிரபாகரனை விவரமான ஆள்னு நினைத் தேனே..'

''எங்களுக்குள் ஆயிரம் இருக்கும்..''



'ஒரு கோடியேகூட இருக்கட்டும்.. எனக்கென்ன வந்தது. ஏன்.. என்னிடம் வந்து ரம்பம் போடுகிறாய்..'

''நீ தேவையில்லாமல் மனப்பால் குடிக்காதே..''

'இவள் என்னதான் சொல்ல வருகிறாள்..' மாலினிக்கு சுர்ரென்று கோபம் வந்துவிட்டது.

''நான் பசும்பாலை மட்டும்தான் குடிப்பேன். நீங்கள் சொல்லும் பாலைக் குடித்து எனக்குப் பழக்கமில்லை. உங்களுக்குத் தோன்றுவதையெல்லாம் என்னிடம் பேசிக் கொண்டிருக்காதீங்க. எனக்கு அது பிடிக்காது..''

''அதைப் பற்றி எனக்கென்ன கவலை?''

''இருக்க வேண்டும். கவலையிருக்க வேண்டும். இந்த வீட்டின் வருங்கால மருமகள்னு பெருமையாய் சொல்லிக் கிறீங்க.. உங்களின் வருங்கால மாமியாரின் கோபத்திற்கு ஆளாகலாமா?''

ஸ்வேதாவின் முகம் மாலினி சொன்னதைக் கேட் டதும் வெளிறிவிட்டது.

''நீ என்ன சொல்கிறாய்?''

''என் மனதைப் பாதிக்கும்படி யார் பேசினாலும் உடனே வந்து அவங்களிடம் சொல்லிவிடும்படி அத்தை என்னிடம் சொல்லியிருக்கிறாங்க...''

''அத்தையா.. யார் யாருக்கு அத்தை?''

''சசிரேகாவின் மாமியார்.. எனக்கு அத்தை...''

''என்ன ஒரு தைரியம்?''

''இதைச் சொல்ல தைரியம் வேண்டியதில்லை ஸ்வேதா.. உறவுமுறையிருந்தால் போதும்.. என் பெரியப்பா வின் மகளுக்கு யார் மாமியாரோ.. அவங்களே எனக்கு அத்தையும் ஆவாங்க. ஆம் ஐ கரெக்ட்?''

''அப்போ.. பெரியத்தானை நீ எப்படிக் கூப்பிடு வாய்?''

''அது என்ன பெரியத்தான்.. பெரிய.. அத்தான். அவருக்கென்ன தடியூன்றி நடக்கும் வயதா ஆகிவிட்டது? ஸ்மார்ட்டாய்.. ஹேண்ட்சம்மாய்.. மேன்லியாய்.. என்ன ஒரு அழகாய்.. அட்டகாசமாய் இருக்கிறார் தெரியுமா? வாவ்... ஐ லைக் ஹிம் வெரிமச்! அதனால் நான் அவரை ஆசையாய் 'அத்தான்.. அத்தான்'னுதான் கூப்பிடுவேன்..''

மாலினி காதலுடன் அந்த 'அத்தானை...' கிறக்கத் துடனும் மென்மையுடனும் உச்சரித்த விதத்தில் ஸ்வேதா கொதித்துப் போனாள்.

''நீ எப்படி அவரை அத்தான்னு சொல்லலாம்?''

''அத்தை மகனை அத்தான்னு கூப்பிடாமல் வேறு எப்படிக் கூப்பிடுவது?''

''மாலினி...''

ஏறக்குறைய ஸ்வேதா அலறியே விட்டாள்.

''உஸ்ஸ்...'' என்று வாயில் விரலை வைத்து அவளை அடக்கினாள் மாலினி.

''சத்தம் போடக்கூடாது. நானும் கெஸ்டாய் வந்திருக் கிறோமேன்னு அடக்கி வாசிக்கிறேன். நீ ஓவராய் பேசு கிறாயே. உன் மனதில் என்னதான் நினைத்துக் கொண் டிருக்கிறாய்? நான் உன்னை வாங்க போங்கன்னு கூப்பிடு கிறேன். நீ.. வா போ என்கிறாய். மரியாதை கொடுத்தால் தான் மரியாதை கிடைக்கும். புரிந்ததா? நான் வேலை செய்ய வந்திருக்கிறேன். புது ஊர் என்பதால் என் பெரியப்பா மகளின் வீட்டில் தங்கியிருக்கிறேன். என்னை பொறுத்தவரையில் இங்கே நான் வந்து தங்கியிருப்பதற் கான காரணம் இது மட்டும்தான். உன் மனதில் வேறு



பயம் வந்தால் அதற்கு நான் பொறுப்பில்லை. புரிந்ததா... அதை விட்டுவிட்டு என்னை ஓவராய் கிராஸ் பண்ணி னேன்னு வை.. நிஜமாகவே உன் பெரிய அத்தானை சைட் அடிக்க ஆரம்பித்து விடுவேன். அவரையும் என்னை சைட் அடிக்க வைத்து விடுவேன். அண்டர்ஸ்டாண்ட்?''

அதற்கு மேல் அங்கே நின்றால் மாலினி.. நிஜமாகவே பிரபாகரனை சைட் அடிக்க கிளம்பிவிடுவாள் என்று தோன்றியதாலோ என்னவோ ஸ்வேதா அந்த இடத்தை விட்டு அவசரமாய் அகன்றுவிட்டாள்.

எரிச்சலுடன் வாய்க்குள் முணுமுணுத்தவாறு அங்கு இருந்து நகரப் போன மாலினி.. அந்த ஹாலின் வாசலில் கைகளைக் கட்டியபடி சுவரில் ஒரு காலை ஊன்றி சாய்ந்து நின்ற பிரபாகரனைக் கண்டதும் தூக்கிவாரிப் போட்ட வளாய் நின்றாள்.

அவன் சாவதானமாக.. அவளருகில் வந்தான். அவ னுடைய கண்கள் சிரித்துக் கொண்டிருந்தன.

''ஸ்வேதாவை மிரட்டுகிறாயா..'' என்று கேட்டான்.

மாலினிக்கு போன கோபம் திரும்பவும் வந்து விட்டது.

''அவளை ஒரு ஆள் மிரட்ட முடியுமா?'' என்று பதிலுக்குக் கேட்டாள்.

''ஏன்.. நான் அவளை டைனிங் ஹாலில் மிரட்ட வில்லையா?'' அவன் கண்களில் அதே சிரிப்பு நிலைத் திருக்க.. மீண்டும் கேட்டான்.

''உங்களுக்கும் அவளுக்கும் ஆயிரம் இருக்கும். நீங்கள் அவளை மிரட்டலாம். மற்றவர்கள் மிரட்ட முடியுமா?'' மாலினி அவனுடைய பாணியிலேயே பதில் கொடுத்தாள்.

''அவளை சிறுவயதிலிருந்து எனக்குத் தெரியும்..''

''அப்படியா...''

தனக்கு அந்தக் கதையைக் கேட்க ஆர்வமில்லை என்பதை பிரபாகரனுக்கு உணர்த்தும் விதமாக.. அசுவாரஸ் யமாக கேட்டபடி தன் கையிலிருந்த கைக்கடிகாரத்தை பார்த்தாள் மாலினி.

''அவளுக்கும் என்னை சிறு வயதிலிருந்து தெரியும்...''

மாலினி அவனை ஒரு மார்க்கமாக பார்த்தாள்.

''ஏன் அப்படிப் பார்க்கிறாய்..''

''வேறு எப்படிப் பார்ப்பது.. சென்னையிலிருந்து மார்த்தாண்டம் எவ்வளவு தூரமோ அதே அளவு தூரம் தானே மார்த்தாண்டத்திலிருந்து சென்னைக்கும் இருக்கும்? இதைப் போய் ஒரு பெரிய விஷயமாக நினைத்து என்னிடம் கதை சொல்லிக் கொண்டிருக்கிறீர்களே...''

பக்கத்தில் நின்று பதற்றத்துடன் கைபிசைந்து அதட்ட சசிரேகா இல்லாத காரணத்தினால் தன் மனதில் நினைத்ததை வாய்விட்டுச் சொல்லிவிட்டாள் மாலினி.

சிறுவயதிலிருந்து உனக்கு அவளைத் தெரிந்தால் அவளுக்கும் உன்னைத் தெரிந்துதானே இருக்கும் என்ற ரீதியில் மாலினி பதில் சொன்னதைப் புரிந்துகொண்ட வனாக பிரபாகரன் கண்களில் ஒரு பாராட்டுதலுடன் அவளைப் பார்த்தான்.

''அதை எதற்குச் சொன்னேன் தெரியுமா?''

''சொன்னால்தானே தெரியும்?''

''அவள்கூட என்னை ஸ்மார்ட்டாய்.. ஹேண்ட்சம் மாய்... மேன்லியாய்.. அழகாய்.. அட்டகாசமாய் இருக்கி றேன்னு சொன்னதில்லை...''



பிரபாகரனின் வார்த்தைகளில் குறும்பு கூத்தாடியது. மாலினி வெட்கத்துடன் முகம் சிவக்க... வேறு பக்கம் பார்வையைத் திருப்பினாள்.

'அடக்கடவுளே... இவன் அதைக் கேட்டுவிட்டானா?'

அத்துடன் விட்டுவிடவில்லை பிரபாகரன். அவள் அருகில் வந்து மெதுவான குரலில்..

''உன்னைப் போல் ஆசையாய்.. 'அத்தான்..'னும் கூப்பிட்டதில்லை..'' என்று சொல்லிவிட்டுப் போய்விட் டான்.



*வாய் தொட்ட வார்த்தை...*
*வெளிப்படாத நிலைமை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

**மா**லினி அவன் போவதையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தாள்.

''இன்னும் நீ உன் அறைக்குப் போகவில்லையா மாலினி?'' என்று கேட்டபடி சசிரேகா அங்கு வந்தாள்.

''போகணும்னு எனக்கும் ஆசைதான். போகவிட்டால் தானே..'' அலுப்புடன் கூறினாள் மாலினி.

''ஏண்டி.. என்ன ஆச்சு?''

''முதலில் மோகினிப் பேய் வந்து வழிமறித்தது..''

''யாரு.. அந்த ஸ்வேதா வந்தாளா?''

''அது எப்படிடீ சரியாக அவள்தான் பேய்னு கண்டு பிடித்தாய்?''

''இதுக்குப் போய் வெத்தலையில் மை தடவியா பார்க்கணும்.. அவளால்தான் எனக்கு இம்சையே..''

''அதுவும் செய்கிறாளா?''

''அடுத்து யார் வந்தது?''

''ஹிட்லர்..''

''பெரிய அத்தானா?''

''அவரேதான்...''

மாலினி தனக்குத் தரப்பட்டிருந்த அறையை நோக்கி நடந்தபடி கூறினாள். அவளுடன் அறைக்குள் சென்ற சசிரேகா.. கதவை மூடிவிட்டு மாலினியுடன் கட்டிலில் அமர்ந்தாள்.

''ஸோ... உன் வீட்டில் வெற்றிகரமாக இன்று ஒரு நாள் முடிந்துவிட்டது..'' என்றாள் மாலினி.

''என் வீட்டு மனிதர்களைப் பற்றி என்ன நினைக்கிறாய் மாலினி..'' என்று கேட்டாள் சசிரேகா.

''ஒவ்வொருவரும் ஒவ்வொரு ரகம். உன் வீட்டில் இருப்பவர்கள் மனிதர்கள்தான். ஆனால், அந்த ஸ்வேதாவை மனித குலத்தில் நான் சேர்க்கவே மாட்டேன்..'' கட்டிலில் அமர்ந்து தலையணையை எடுத்து மடியில் வைத்தபடி கூறினாள் மாலினி.

''நானும் சேர்க்க சொல்லமாட்டேன். அவளால் நான் படும் அவதி இருக்கிறதே... அப்பப்பா...''

''ஏன்.. உன்னை அவள் என்ன பண்ணினாள்?''

''என் கணவரைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள அவள் நினைத்திருந்தாளாம்..''



மாலினி ஆச்சரியத்துடன் சசிரேகாவின் பேச்சை இடைமறித்தாள்.

''பொறு.. பொறு.. இப்போது என்ன சொன்னே?''

''அவள் என் ஹஸ்பெண்டின் மேல் ஆசைப்பட்டாளாம்டி...''

''என்னடி நீ இப்படிச் சொல்கிற.. அவள் வேறு மாதிரி சொன்னாளே...''

''என்ன சொன்னாள்?''

''ஹிட்லரின் மீதுதான் அவள் ஆசைப்படுகிறாளாம்..''

''அது இப்போ.. இது அதுக்கு முன்னாடி..''

''என்னடி இது.. அவள் உன் வீட்டிலிருக்கிற அத்தனை ஆண்பிள்ளைகள் மேலேயும் ஆசைப்பட்டாள்னு சொல்லுவ போல இருக்கே. தினகரனை மட்டும் விட்டு வைத்திருக்கிறாளே.. அது ஏன்?''

''அவரையும் விடவில்லை. ஆனால், நெருங்க மாட்டாள்..''

''இதைப் பாருடா.. ஏன் தினகரனின் மீது மட்டும் கருணை காட்டினாளாம்?''

''இவள் பாச்சா அவரிடம் எடுபடவில்லை...''

''பரவாயில்லையே.. தினகரன் ஜாலியான ஆளுன்னு நான் நினைத்தேன். சுதாரிப்பான ஆள்தான்..''

''அதனால் அவளுடைய பார்வையை பெரிய அத்தானின் மேல் திருப்பிவிட்டாள்..''

''என்னவோ.. பெரிதாக ஹிட்லர்.. ஹிட்லர் என்கிறாயே. கடைசியில் அவர் போயும் போயும் இவளிடம்தான் மயங்கி நிற்கிறாரா.. இவ்வளவுதானா அவர்?''

இதைச் சொல்லும்போது.. ஏன் தன் மனம் இப்படி வலிக்கிறது என்று யோசித்தாள் மாலினி.

''அவர் ஒன்றும் இவளிடம் மயங்கி நிற்கவில்லை...''

''அப்பாடா' என்று இருந்தது மாலினிக்கு. பிரபாகரன், ஸ்வேதாவிடம் மயங்கவில்லை என்ற செய்தி ஏன் தன் மனதிற்கு இத்தனை இதத்தை தருகிறது என்று தனக்குத் தானே வினவிக் கொண்டாள் அவள்.

''அவளாகத்தான் உன் பெரிய அத்தானின் பெயரைச் சொலலிக் கொண்டிருக்கிறாளா?''

''ஆமாம்.. என் ஹஸ்பெண்டிற்கு முதலில் கல்யாணம் ஆகிவிட்டதால் பெரியத்தானின் மேல் அவளுக்கு கருணை வந்துவிட்டதாம். அவளை விட்டால் அவரைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள ஆளில்லையாம். பெரியத்தானின் தியாகத்திற்கு பரிசாக அவள் தன்னையே தரப்போகிறாளாம்..''

''இப்படியெல்லாம் அவள் யாரிடம் பிதற்றினாள்.. ஹிட்லரிடமா?''

''அவர் இவளிடம் நின்று பேசக்கூட மாட்டார்..''

''ஈஸிட்?''

இந்தப் பதில் ஏன் தன் மனதிற்கு இத்தனை திருப்தியைத் தருகிறது என்ற ஆராய்ச்சியில் மீண்டும் இறங்கினாள் மாலினி.

''நிஜம்தான் மாலினி. பெரியத்தானுக்கு பெண் கொடுக்க நான் நீன்னு எங்கள் சொந்தக்காரங்க வட்டாரத்தில் அடித்துக் கொண்டு நிற்கிறாங்க. இந்த ஸ்வேதா என்ன பெரிய வசதியானவளா.. இவள்தான் அப்படி பீற்றிக் கொண்டிருக்கிறாள். இவளைவிட ஆயிரம் மடங்கு



வசதியானவர்கள் எல்லாம் அவர்களுடைய பெண்ணைக் கொடுக்கப் பறக்கிறாங்க..''

''அப்படியா?''

மாலினிக்கு திடீரென்று சசிரேகாவின் பேச்சில் சுவாரஸ்யம் போய்விட்டது. பிரபாகரனின் திருமணப் பேச்சை விட்டுவிட்டு வேறு பேச்சை இவள் பேசக் கூடாதா என்று மனதில் நினைத்தள் அவள்.

ஆனால், சசிரேகா அதை அறிவாளா.. அவள் தன் போக்கில் ஆரம்பித்துவிட்ட பேச்சை பாதியில் நிறுத்தாமல் பேசிக் கொண்டிருந்தாள்.

''பெரியத்தான் தக்கலையில் பெரிய மில் ஒன்றைக் கட்டிக் கொண்டிருக்கிறார். அவருடைய கனவெல்லாம் அதில்தான் இருக்கிறது. கல்யாணத்தில் இல்லை...''

'அட.. இதுகூட நல்லாயிருக்கே. ஹீரோ... நான் வேலை பார்க்கப் போகும் ஊரிலேயும் கால் பதித்துவிட்டாரா. வெரிகுட்...'

''ஏண்டி.. எங்க மில்லுக்கு போட்டி மில்லைக் கட்டுவார் உங்க பெரியத்தான். நீ அதை என்னிடம் வந்து பெருமையாய் சொல்கிறாயா?''

''உங்க மில்லா.. சரிதான் போ.. இன்னும் போய் வேலையிலேயே ஜாயின் பண்ணவில்லை. அதற்குள் உரிமைக்குரல் எழுப்புகிறாயா?''

''பின்னே... என்னை யாரென்று நினைத்தாய்?''

''உன் விசுவாசத்தை பாராட்டுகிறேன். ஆனால்... ஒன்று... என் பெரியத்தான் யாருக்கும் போட்டியில்லை...''

''அவ்வளவு பெருந்தன்மையானவரா?''

''ஊஹூம்... அவ்வளவு உயரத்தில் இருப்பவர்.. அவருக்குப் போட்டியாக வர ஒரு தகுதி இருக்க வேண்டும்..''

''என் மில்லுக்கு அந்த தகுதி இருக்கிறது..''

''உன் மில்லா.. நீ சொந்தமாக எந்த மில்லை வாங்கி இருக்கிறாய் மாலினி?''

''கிண்டலா?''

''பின்னே... நீ என் பெரிய அத்தானிடம் போட்டி போடுவாய்.. நான் அதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்கணுமா?''

''சும்மா இருக்காதே.. அவருக்கு சப்போர்ட்டாய் போர்க்கொடியைப் பிடி. இப்போது ராத்திரி நேரம்.. நைட்டில் போர் செய்யக்கூடாது. அதனால் நீ உன் அத்தானுடன் தூங்கப் போ. நான் தனியாக தூங்குகிறேன்..''

''ஏய்ய்ய்...''

சசிரேகா முகம் சிவக்க.. மாலினியின் கையில் கிள்ளிவிட்டுப் போய்விட்டாள்.

அதிகாலையில் எழுந்து கொள்ள வேண்டும் என்று நினைத்த மாலினி.. செல்போனில் அலாரம் வைத்துவிட்டு உறங்கிவிட்டாள்.

காலையில் சேவல் கூவும் ஒலி அவள் காதருகில் கேட்டதும் விழித்துக்கொண்டாள். செல்போனை அணைத்துவிட்டு எழுந்து அமர்ந்து இரண்டு உள்ளங்கையையும் சேர்த்து வைத்துப் பார்த்தாள். அறைக்கதவு தட்டப்பட்டது. எழுந்து சென்று கதவைத் திறந்தாள்.

கையில் காபிக் கோப்பையுடன் செந்தாமரை நின்று கொண்டிருந்தாள்.



''ஹாய்.. செந்தாமரை...''

''ஹை.. அம்மா...''

''இது உனக்கே கொஞ்சம் ஓவராகத் தெரியலையா செந்தாமரை. நான் என்ன உனக்கு அம்மாவா.. அவ்வளவு வயதானவள் போலவோ இருக்கிறேன்?''

''அது வந்தும்மா.. எங்க சின்னம்மாவுக்கு நீங்க தங்கச்சி முறையாகுதுங்களா.. அதனால்...''

''எதனால வேணும்னாலும் இருக்கட்டும். என்னை அம்மா.. சும்மான்னு கூப்பிடக்கூடாது..''

''வேற எப்படிக் கூப்பிடறது?''

''எனக்குப் பெயர் ஏன் வைத்திருக்கிறாங்க? மாலின்னு கூப்பிடு...''

''ஆத்தாடி.. பெரியம்மாவுக்குத் தெரிஞ்சா என்னைக் கொன்னுபுடுவாங்க...''

'என்னடா இது... பெயரைச் சொல்லிக் கூப்பிடுவது இந்த வீட்டின் எஜமானியை கொலைகாரியாய் ஆக்கி விடுமா?'

மாலினி இரக்கத்துடன் செந்தாமரையைப் பார்த்தாள்.

''அப்படின்னா ஒண்ணு செய்யலாம்..''

''என்ன... என்ன?''

''ம்ஹூம்.. இந்த வீடு.. மாற்றத்திற்காக ஏங்குது.. இந்த வேலையாள்கூட இந்த பரபரப்புக் காட்டினால்.. வீட்டில் இருக்கிறவங்க எவ்வளவு பரபரப்பை காட்ட மாட்டாங்க?''

''பொறுமை.. செந்தாமரை... பொறுமை...''

''ஹி.. ஹி...''

''நாம் தனியாகப் பேசும்போது நீ என் பெயரைச் சொல்லிக் கூப்பிடு. அத்தையின் முன்னால் என்னவோ செய்து கொள்...''

''சரிங்கம்மா...''

''பார்த்தியா.. திரும்பவும் 'அம்மா' போடுகிறாய்?''

''சரிங்க மாலினியம்மா..''

''உன்னால் 'அம்மா' போடாமல் இருக்கவே முடியாதா?''

''அது எப்படிங்க.. மண்டையில் அடித்ததைப் போலப் பெயரைச் சொல்லிக் கூப்பிடுறது?''

இவர்களின் உள்ளத்தில் காலம் காலமாய் ஊறிவரும் உணர்வு இது என்று நினைத்துக் கொண்டாள் மாலினி.

இவர்களை மாற்ற முடியாது. இவர்கள் இப்படித்தான் இருப்பார்கள்.

''பெயரைச் சொல்லிக் கூப்பிட்டால் தலையில் அடித்ததைப் போல் வலிக்குமா?''

''செந்தாமரை..''

''என்னங்க.. மாலினியம்மா...''

''உனக்கு கோடி புண்ணியமாக இருக்கும்.. அந்த அம்மாவை விட்டுவிடேன்..''

''ஏம்மா.. என் வேலைக்கு உலை வைக்கப் பார்க்க றீங்க..''

'ஊஹூம்.. இது வேலைக்கு ஆகாது..' என்ற நினைவுடன் கையிலிருந்த காபித் தம்ளரை காலி செய்துவிட்டு காலி தம்ளரை செந்தாமரையிடம் நீட்டினாள் மாலினி.

'இன்றைக்கு வேலையில் ஜாயின் பண்ணணுமே...!'



அவசரமாய் குளியலறைக்குள் புகுந்தவள் அரை மணி நேரத்தில் தயாராகி வெளியில் வந்தாள்.




*உன் நினைவு தரும் இதத்தை...*
*உன் நிழல் தரும் வரத்தை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

மெரூன் கலரில் பொடிப் பொடியாய் கொடி பின்னல் போல் சிறு மலர்கள் தெறித்து விழுந்த டிசைனில் கார்டன் சேலையை உடுத்தியிருந்தாள் மாலினி. அதே புடவையில் வெட்டித் தைக்கப்பட்ட ரவிக்கை பாந்தமாக பொருந்தியிருப்பதை ஆளுயுரக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டாள்.

அடர்த்தியான கூந்தலை சிறு பின்னலாக போட்டு கூந்தல் பேண்டில் இறுக்கியிருந்தாள். காதுகளில் மெரூன் கற்கள் பதித்த பூத்தோடு.. கழுத்தில் மெரூன் வண்ணக் கற்கள் பதித்த அட்டிகை.

''எதுக்கும்மா கல் அட்டிகைகளைக் கொண்டு போகச் சொல்கிறீங்க.. எனக்கு ஃபேன்ஸியாய் எதையாவது மாட்டிக் கொள்ளத்தானே பிடிக்கும்?''

காவேரியிடம் அவள் முரண்டுபிடித்துப் பார்த்தாள். மாலினியின் அடம் காவேரியிடம் எடுபடவில்லை.

''நீ தங்கப் போகும் இடம் பாரம்பர்யம் பார்க்கும் குடும்பம். உன் சுடிதார்களையும் ஃபேன்ஸி நகைகளையும் இங்கேயே மூட்டை கட்டி வை. அந்த வீட்டுப் பெண்கள் வேளைக்கொரு வைர நகைகளைப் போட்டுக் கொண்டு

இருப்பார்கள். நீ அவர்கள் அளவுக்கு இல்லாவிட்டாலும் போலி நகைகளைப் போடாமல் நாளுக்கொரு கலரில் தங்க நகைகளைப் போடு..''

''அவர்கள் அளவுக்கு அவர்கள் இருக்கிறார்கள்...''

''நம் அளவுக்கு நாமும் இருக்கலாமில்லையா?''

''அதுக்காக.. இப்படி எல்லா நகைகளையும் மூட்டை கட்டி எடுத்துக் கொண்டு போகச் சொன்னால் எப்படிம்மா? அங்கே இவைகளை எப்படிப் பாதுகாப்பேன்?''

''வெளியில் சொல்லிவிடாதே.. கேட்டவர்கள் சிரித்து விடுவார்கள். வைரங்கள் கொட்டிக் கிடக்கும் வீட்டில் நம் தங்க நகைகளை யார் கை வைப்பார்கள்?''

காவேரி கூறியபோது அதை பெரிதாக மாலினி எடுத்துக் கொள்ளவே இல்லை. இப்போது.. இந்த வீட்டில் காலடி எடுத்துவைத்த பின்னால்தான் அன்னையின் அறிவுரையில் இருந்த அர்த்தம் புரிந்தது.

பெண்களுக்கான நுட்பமான அறிவை எண்ணி வியந்து கொண்டாள் அவள்.

கைப்பையை எடுத்துக் கொண்டு அறையைப் பூட்டி விட்டு கீழே இறங்கினாள். பாதிப் படிகளில் அவளை எதிர்கொண்ட செந்தாமரை..

''வந்துட்டீங்களாம்மா..'' என்று வாயெல்லாம் பல்லானாள்.

''செந்தாமரை..'' மாலினி பொய் கோபம் காட்ட..

''கீழே பெரியம்மா இருக்காங்கம்மா..'' என்று ரகசியம் பேசினாள்.

''அப்போ சரி..''



மாலினி.. டைனிங் டேபிளுக்குச் சென்றாள். அங்கே எல்லோரும் அமர்ந்திருக்க.. காயத்ரி.. மாலினியைப் பார்த்து சிநேகமாக சிரித்தாள்.

''இன்னிக்குத்தான் டியூட்டியில் ஜாயின் பண்ணப் போகிறீங்களா?''

''ஆமாம்..''

மாலினி.. சசிரேகாவின் அருகில் அமர்ந்து கொண்டே பதில் சொன்னாள்.

முதல் நாள் இரவு மாலினி குடுத்த குடுப்பில் ஸ்வேதா அடங்கிவிட்டது போலத் தெரிந்தாள். அதனால்.. சாப்பிடும் இடத்தில் கலவரம் வெடிக்கவில்லை.

''யூ லுக் வெரி நைஸ்..'' தினகரன் நிமிர்ந்து பார்த்துச் சொல்ல...

''தேங்க்ஸ்...'' என்று பதிலுக்கு சொல்லி வைத்தாள் மாலினி.

சசிரேகாவிடம் மெல்லிய குரலில் பேசியவாறு தோசையை மென்றுகொண்டிருந்தவள்.. தண்ணீர் குடிக்க நிமிர்ந்தபோது.. பிரபாகரன் அவளை உறுத்துப் பார்த்துக் கொண்டு இருந்தது தெரிந்தது. அவனது புருவச் சுளிப்பு உணர்த்திய அதிருப்தி செய்தியைக் கிரகித்துக் கொண்டவள்..

'ஏன் இப்படிப் பார்க்கிறான்?' என்று யோசித்தாள். ஒன்றும் பிடிபடவில்லை.

'எதற்கோ முறைக்கிறான். முறைத்தால் முறைத்து விட்டுப் போகட்டும்..' அலட்சியப்படுத்த முயன்றாள்.

ஆனால், மனம் சுற்றிச் சுற்றி அவனிலேயே வந்து நிற்க..

'என்ன இது.. அவன் கோபமாய் பார்த்தால் எனக்கென்ன வந்தது..' என்று அலுப்புடன் எழுந்து கொண்டாள்.

''அத்தை.. ஒரு நிமிடம்..'' என்ற குனிந்து நர்மதாவின் பாதத்தை நாசூக்காய் ஒரு விரலில் தொட்டுவிட்டு மாலினி நிமிர...

''என்னம்மா.. இது?'' என்று நர்மதா அதிசயப்பட்டுப் போனாள்.

''முதன்முதலில் வேலைக்குப் போகிறேன். பெரியவங்களிடம் ஆசீர்வாதம் வாங்கிக் கொள்ள வேண்டும்.. அதனால்தான்...''

மாலினி பேசியபடி ஸ்வேதாவைப் பார்த்தாள். அவள் முகம் பயங்கரமாய் மாறியிருந்தது.

'உடம்பெல்லாம் மிளகாயை அரைத்துப் பூசியது போல் எரிகிறதா.. எரியட்டும்..' கேலியுடன் சிறு சிரிப்பொன்றை சிரித்தபடி சசிரேகாவைப் பார்த்தாள் மாலினி.

'பிரமாதம்...' அவள் கண்களால் பாராட்டினாள். நர்மதாவிற்கு உச்சி குளிர்ந்துவிட்டது.

''பூஜையறையில் போய் சாமியைக் கும்பிட்டுக்கம்மா.. அதுபோதும்..''

''காலையிலேயே கும்பிட்டுவிட்டேன் அத்தை... மாலினி பவ்யமாகக் கூறினாள்.

''தினா.. பரந்தாமனைக் கூப்பிடு..''

நர்மதா உத்தரவிட்டதும் தினகரன் எழுந்து கொள்ளப் போனான். அவனை பார்வையிலேயே அமரவைத்த பிரபாகரன்,

''பரந்தாமன் எதுக்கும்மா?'' என்று வினவினான்.



''மாலினியை தக்கலையில் விட்டுவிட்டு சாயந்திரம் போய் கூப்பிட்டுக் கொண்டு வர வேண்டும்..''

''அதை நான் பார்த்துக் கொள்கிறேன்...''

பிரபாகரன் இலகுவாக கூறிக் கொண்டு எழுந்து நிற்கவும், மாலினிக்கு தூக்கிவாரிப் போட்டது.

'இவன் பார்த்துக் கொள்ளப் போகிறானா.. யாரை பார்த்துக் கொள்ளப் போகிறான்.. என்னையா?'

அவள் மனதிற்குள் நினைத்ததை வாய்விட்டுக் கேட்டாள் ஸ்வேதா.

''நீங்கள் எதைப் பார்த்துக் கொள்ளப் போகிறீர்கள் அத்தான்...''

பிரபாகரன் பதில் சொல்லாமல் கடுமையாய் ஒரு பார்வை ஸ்வேதாவை பார்த்து வைத்தான். அவள் அடங்கிப் போனாள். நர்மதாவின் பக்கம் திரும்பியவன்..

''அம்மா.. தக்கலையில் கட்டிக் கொண்டிருக்கும் மில்லைப் பார்க்க தினமும் நான் போய் வந்து கொண்டிருக்கிறேன்..'' என்று சொன்னான்.

''ஆமாம் பிரபா..''

''நான் போகும்போது மாலினியை அவள் வேலை பார்க்கும் மில்லில் விட்டுவிட்டு வரும்போது கூப்பிட்டுக் கொண்டு வந்து விடுகிறேனே. பரந்தாமன் ஏன் வீணாய் அலைய வேண்டும்?''

''அதுதானே... பரந்தாமன் அலைய வேண்டாம் தான்...''

''இங்கே.. வீட்டில் இருக்கிறவங்களுக்கு திடீர்னு வெளியில் போக வேண்டிய வேலை வந்துவிடும். அப்போது பரந்தாமன் இல்லாமல் கஷ்டமாகிவிடாதா?''

''அதுதானே.. பரந்தாமன் இல்லாமல் கஷ்டமாகி விடும்தான்...''

''மாலினி.. நம் வீட்டுக்கு.. நம்மை நம்பி வந்திருக் கிறாள். நாம்தான் அவளைப் பொறுப்பாக பார்த்துக் கொள்ள வேண்டும்..''

''அதுதானே.. நாம் பார்த்துக் கொள்ள வேண்டும் தான்..''

''இரண்டு பேரும் ஒரே ஊருக்கு.. ஒரே நேரத்தில்.. தனித்தனி காரில் போய் வருவதைப் பார்க்கிறவர்கள் என்ன சொல்வார்கள்? நம் சொந்தக்காரப் பெண்ணை அப்படித் தனி காரில் அனுப்பலாமா?''

''அதுதானே.. அனுப்பக் கூடாததுதான்...''

நர்மதாவின் கம்பீரமான தோற்றமும் அவளுடைய கண்டிப்பும் பிரபாகரனின் முன்னால் பணிந்து போவதை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள் மாலினி.

'இவனுக்கு ஹிட்லர்னு பெயர் வைத்ததில் தப்பே யில்லை..'

ஸ்வேதா கொதிகலனாய் மாறிக் கொண்டிருப்பதை மாலினியால் உணர முடிந்தது. அவளைக் கடுப்பேற்று வதற்காகவாவது பிரபாகரனுடன் காரில் சேர்ந்து போக வேண்டும் என்று கண நேரத்தில் முடிவெடுத்தாள் அவள்.

''அப்போ.. நாங்க கிளம்புகிறோம் அம்மா..''

''போய்விட்டு வாங்க...''

மாலினி, பிரபாகரனைப் பின்தொடர யத்தனிக்கும் போது நர்மதாவின் குரல் அவளைத் தடுத்து நிறுத்தியது.

''மாலினி... மதியச் சாப்பாட்டை எடுத்துக் கொண் டாயா?''



''அங்கே கான்டீன் இருக்கும் அத்தை... பார்த்துக் கொள்கிறேன்...''

பிரபாகரன் அவளைப் பார்த்த பார்வையின் பொருள் விளங்காதவளாய் புருவம் உயர்த்தினாள் மாலினி.

''கான்டீனில் போய் என்னத்தைப் பார்ப்பாய்?''

''சாப்பாட்டைத்தான்...''

''அதை அங்கே போய் பார்க்க வேண்டாம். என் னோடு சேர்ந்து சாப்பிடு. அம்மா.. எனக்கு லஞ்ச் அனுப்பும் போது மாலினிக்கும் சேர்த்து அனுப்புங்கள். அவள் என்னோடு சாப்பிட்டுக் கொள்வாள்...''

''அதுக்கென்ன பிரபா.. அப்படியே செய்து விடு கிறோம்..''

மாலினி ஒன்றைக் கவனித்தாள்.. பிரபாகரனின் பேச்சிற்கு எதிர்பேச்சைப் பேச யாரும் துணியவில்லை. அவன் வார்த்தைகளை வேதவாக்காய் எடுத்துக் கொண்டு செயல்பட்டார்கள்.

'பலே.. கில்லாடிதான்...'

அந்தக் கில்லாடி.. அவளுக்காக காரின் முன்பக்க கதவைத் திறந்துவிட்டான்.

'இவனை யார் இதையெல்லாம் செய்யச் சொன்னது.. எனக்கு ஏறிக்கொள்ளத் தெரியாதா?'

மாலினி சங்கடத்துடன் ஏறி.. அவன் பக்கத்தில் அமர்ந்தாள். கார் கிளம்பியது.

சிலுசிலுவென காற்று வந்து முன்னுச்சி முடியைக் கலைக்க.. அவன் சன்னமாய் விசிலடித்தபடி காரை ஓட்டி னான்.

'அட.. ஹிட்லருக்கு இதெல்லாம்கூடத் தெரியுமா?' அவள் ஆச்சரியப்பட்டுப் போனாள்.

மெதுவாக.. கூர்ந்து கவனித்தபோது.. அவன் விசிலில் ஒரு பாடலை 'ஹம்' பண்ணுவது அவளுக்குப் புரிந்தது. அவளின் பார்வையை உணர்ந்தவன்.. விசிலை நிறுத்தாமல் அவளைப் பார்த்து புருவம் உயர்த்தினான்.

''இது என்ன பாட்டு?''

*''அம்மாடி.. பொன்னுக்கு தங்க மனசு...*
*பொங்குது சின்ன மனசு...*
*கன்னுக்கு நூறு வயசு...*
*அவ சொல்லுக்கு நாலு வயசு...''*

பிரபாகரன் பாடிக் காட்டினான். அவனது குரல் அவளை வசீகரித்தது. வீட்டில் அவன் காட்டிய கண்டிப்பான முகத்திற்கும் இப்போது இவன் காட்டும் இலகுவான முகத்திற்கும் சம்பந்தமே இல்லை என்று அவளுக்குத் தோன்றியது.

'இவனுக்குத்தான் எத்தனை முகங்கள்?'



உன் முகம் பார்த்தபோது...
என் மனம் நிறைந்த நிறைவை
என்னவென்று நான் சொல்ல...?

*''என்னெயில் எரியும் விளக்கு...*
*அவள் என்னையே அழைக்கும் சிரிப்பு..*
*என்னவோ நடக்குது நடப்பு..*
*அதில்.. ஏனோ சுகமும் இருக்கு...*



*யாருக்கு இந்தக் கதை தெரியும்..?*
*சாமிக்கு மட்டும் அது புரியும்..*
*பாலுக்குள் மோரும் கூட இருக்கும்..*
*நாளுக்கும் காலம் வந்தால் நடக்கும்..''*

பிரபாகரன்.. மாலினியின் புன்னகையை ரசித்த வண்ணம் உற்சாகமாகப் பாடினான். அவளுக்கு அவனை அந்தத் தோற்றத்தில் பார்க்கப் பார்க்க ஆச்சரியம் கூடிக் கொண்டிருந்தது.

''நிஜத்தில்.. உங்களுக்கு பாட்டை ரசிக்கக்கூடத் தெரியாதுன்னு நான் நினைத்தேன்...'' உண்மையைச் சொன்னாள் மாலினி.

''வேறு எதை ரசிக்கத் தெரியும்னு நினைத்தாய்?''

''பணத்தை.. புகழை...''

''ஊஹூம்? பெண்களின் அழகை ரசிக்கத் தெரிந்தவன்னு நினைக்கவில்லையா?''

இவன் ஏன் இந்த வார்த்தையை இப்போது சொல்லுகிறான் என்று யோசித்தாள் மாலினி. சம்பந்தமில்லாமல் அவன் எதையும் பேசிவிட மாட்டானே என்று இருந்தது அவளுக்கு. தேவையில்லாத எந்த வார்த்தையையும் அவன் உதிர்க்க மாட்டான் என்று அறிந்து வைத்திருந்தாள் அவள்.

''எதற்காக இதைச் சொல்றீங்க?'' நேரடியாய் கேட்டு விட்டாள்.

''தினகரன் உன் அழகைப் புகழ்ந்ததும் அவனுக்குத் தேங்க்ஸ் சொன்னாயே.. அதனால் கேட்டேன்...''

'ஓஹோ.. கதை அப்படிப் போகிறதா... ஹிட்லர் என்னை சைட் அடிக்க ஆரம்பித்து விட்டானா.. இதனால்தான்

காலையில் அந்த முழி.. முழித்தானா?' மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது..

''ஏன் சிரிக்கிறாய்?''

''அவரை என் அழகைப் புகழச் சொல்லி நானா கேட்டேன்.. அவராகப் புகழ்ந்தார். அதற்கு என்ன பதில் சொல்வதுன்னு தெரியாமல் தேங்க்ஸ் சொன்னேன்..''

மாலினி இயல்பாக பேசிய விதத்தில் பிரபாகரன் அவளை ஆழமாகப் பார்த்தான்.

'என்னடா இது.. இவன் இப்படிப் பார்த்துத் தொலைக் கிறான்..' மாலினி முகம் சிவந்தாள்.

''ஸோ.. உன் அழகைப் புகழ்வதைப் பற்றி உனக்கு ஒன்றுமே இல்லை...''

'இவன் ஏன் சுற்றிச் சுற்றி அழகிலேயே வந்து நிற்கிறான்?'

''அழகு என்பது எது அத்தான்?'' மாலினி வேண்டு மென்றே அத்தானை அழுத்தமாக உச்சரித்தாள்.

பிரபாகரன் சுற்றுமுற்றும் பார்த்தான். ஏன் இப்படிப் பார்க்கிறான் என்று மாலினியும் சுற்றிலும் பார்த்து வைக்க..

''அத்தான்னு நீ யாரைக் கூப்பிட்டாய்?'' என்று கேட்டு வைத்தான் அவன்.

''இந்தக் காரில் நீங்களும் நானும் மட்டும்தானே இருக்கிறோம்.. இதில். அத்தான்னு யாரை நான் கூப்பிடு வேன்?''

''ஹப்பா.. என்னை ஒருவழியாய் உன் அத்தான்னு ஒப்புக்கொண்டாயே..''

''இப்போ இதுதான் பிரச்னையா?''



''ஊஹூம்... உண்மையான அழகு எது என்பதுதான் பிரச்னை...''

''ம்ம்.. சொல்லுங்க...''

''அது என்ன தேவைக்கு? நீ மனதில் அதைப் பற்றி ஒரு முடிவோடு இருக்கிறாய். நான் எதைச் சொன்னாலும் நீ அதற்கு எதிர்வாதம் பண்ணத்தான் போகிறாய். அதற்கு முதலிலேயே நீ சொல்லிவிட... நானும் கேட்டுக்கொள்வது பெட்டர் இல்லையா?''

அவன் வரவழைத்துக் கொண்ட பவ்யத்துடன் பேசி னான்.

அவ்வளவு பெரிய வீட்டில்.. தாய் முதற் கொண்டு அனைவரையும் கட்டுக்குள் வைத்திருக்கும் கண்டிப்பான வன்.. அவளிடம் மனம்விட்டுப் பேசி.. பாடி சிரிப்பதை நினைத்து அவள் வியந்து போனாள். அவன் பேச்சுக்கு எதிர்பேச்சு பேச எவரும் துணியாதபோது.. அவள் பேச்சுக்கு எதிர்பேச்சு பேசாமல் அவளை அவன் பேசவிடுவதை நினைத்து அவளது வியப்பு இன்னும் அதிகரித்தது.

''அழகு என்பது மனம் சார்ந்த ஒன்று அத்தான்...''

''யாருடைய மனம் சார்ந்தது?''

''பார்ப்பவரின் மனம் சார்ந்தது. மனம் விரும்பாத எதையும் அழகு என்று மனம் ஏற்றுக்கொள்ளாது. அதே சமயம் மனம் விரும்பிவிட்டால் அதைத்தான் உலகம் பேரழகு என்று சொல்லும்..''

பிரபாகரனின் விழிகளில் வியப்பும் பாராட்டும் கலந்து தோன்றி மறைந்தது.

''ஊம்.. அப்புறம்?''

''நானென்ன கதையா சொல்கிறேன்...''

''இதைக் கதைன்னு யாராவது சொல்வாங்களா? நீ கன்டினியூ பண்ணு மாலினி...''

''முக அழகைவிட அக அழகு வசீகரம் நிறைந்தது...''

''ஷ்யூர்...''

''அன்னை தெரஸா அழகா.. ஐஸ்வர்யாராய் அழகா.. என்ற கேள்வி வந்தால் நீங்கள் என்ன சொல்வீங்க?''

''நான் சொல்வது இருக்கட்டும்... நீயென்ன சொல் வாய்?''

''அன்னை தெரஸாதான் அழகுன்னு சொல்லுவேன்..''

''நம்ம தினாவைக் கேட்டால்.. ஐஸ்வர்யாராய்தான் அழகும்பான்!'' பிரபாகரன் வரிசைப் பற்கள் தெரிய சிரித் தான்.

சிரிக்கும்போது அவன் முகத்தில் தோன்றிய கவர்ச்சி அவளை ஈர்த்தது.

'இவன்தான் எவ்வளவு அழகாக இருக்கிறான்...'

ஒரு கணம் அவன் அவ்வளவு பெரிய கோடீஸ்வர னாக இல்லாமல் சாதாரண நிலையில் இருப்பவனாக இருந்திருக்கக் கூடாதா என்று மாலினி ஏங்கினாள்.

'அப்படி மட்டும் இவன் எட்டும் கனியாக இருந் திருந்தால் நான் என் மனதை கட்டுப்படுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் இல்லையே...'

அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தால் இப்படிப்பட்ட எண்ணங்கள்தான் ஆட்டுவிக்கும் என்று புரிந்தவளாய் மாலினி.. ஜன்னல் பக்கம் முகம் திருப்பிக் கொண்டாள்.

''தினாவின் நேச்சர் அப்படியாக இருக்கலாம்..'' மாலினி மெதுவாக கூறினாள்.



''ம்ம்.. அவனுக்கு அழகான பெண்கள் மீது ஆர்வம் அதிகம். நீ அழகான பெண்..'' பிரபாகரனின் முகத்தில் ஏதோ யோசனை படர்ந்தது.

''அழகைப் பற்றிச் சொல்லிவிட்டேன். அதற்கப்புற மும் என்னை அழகுன்னு சொன்னால் நானென்ன சொல்ல?''

''அன்னை தெரஸாவுக்கு எது அழகு சேர்க்கிறது?''

''அவர்களின் இரக்கம்.. கருணை.. அன்பு.. பாசம்.. தொண்டு.. அருள்.. இப்படி எத்தனையோ சொல்லலாம். அவங்க வாழ்விலயும் இளமை வந்தது. ஆனால், அவங்க தன் இளமைக் காலம் முழுவதையும் தொண்டிலேயே செலவழிச்சாங்க.. ஷி இஸ் ஸோ கிரேட்..''

''ரியலி...''

பிரபாகரன் மாலினியைப் பார்த்த பார்வையில் வேறு ஏதோ ஒன்று இருக்க.. அது என்னவென்று புரியாமல் மாலினி குழம்பினாள்.

''மாலினி...''

''சொல்லுங்க அத்தான்..''

''நீ சொன்னது உண்மையா?''

இப்படி மொட்டைக் காத்தான்... குட்டையில் விழுந் தான் என்று சொல்லி வைக்கிறானே என்று மாலினிக்கு இருந்தது.

''எதைச் சொன்னேன்.. யாரிடம் சொன்னேன்.. எப்போது சொன்னேன்?''

''யாரிடம்... எப்போது சொன்னாய்னு மட்டும் நான் சொல்கிறேன். எதைன்னு நீயே புரிந்து கொள்...''

பிரபாகரனின் கண்களில் சிரிப்பு இருந்தது. அவன்

உல்லாசமாய் பேசினான். அவன் அப்படி நினைத்து நினைத்து மகிழ்ந்து போவதைப் போல தான் எதைச் சொன்னோம் என்று புரியாமல் விழித்தாள் மாலினி.

''அதையாவது சொல்லுங்களேன்..''

''நேற்று நைட்.. நீ ஸ்வேதாவிடம் சொன்னாயே...''

அவ்வளவுதான்.. மாலினியின் முகம் குங்குமமாய் சிவந்துவிட்டது. இவன் அதை விடமாட்டான் என்று அவள் புரிந்து கொண்டாள்.

''லீவ் தட் மேட்டர்.. ப்ளீஸ்...''

''அது எப்படி.... அவ்வளவு சீக்கிரம் விடக்கூடிய விஷயமா அது?''

''ஸ்வேதாவை கடுப்பேற்ற அப்படிச் சொல்ல வேண்டியதாகிவிட்டது.. ஐ ஆம் ஸோ ஸாரி...''

பிரபாகரனிடமிருந்து எந்த பதிலும் வராமல் போகவும்.. அவள் திரும்பி அவன் முகத்தைப் பார்த்தாள். சற்று முன் அவளிடம் இருந்த இலகுத் தன்மை மறைந்து ஓர் கடினத்தன்மை அவளிடம் வந்திருந்தது.

'ஏன்.. இப்படி?' அவளுக்கு பிடிபடவில்லை..

''ஸோ.. நீ பொய் சொல்லியிருக்கிறாய்..'' என்று அவன் கூறவும்,

'இவ்வளவுதானா..' என்று நிம்மதியடைந்தாள் அவள்.

''நான் விளையாட்டுக்குக்கூட பொய் சொல்வதில்லை அத்தான்..'' அவளுக்குத் தெரியும்.. அவள் 'அத்தான்' என்று அழைத்துவிட்டால் அவன் மலையிறங்கி விடுவான் என்பது. அவள் கணிப்பு சரியாக இருந்தது. அவன் முகத்தில் லேசாக இணக்கம் தோன்றியது.



''இப்போதுதான்.. ஸ்வேதாவை கடுப்பேற்ற பேசினேன்னு சொன்னாய்?''

''ம்ம்.. உண்மையாக இருந்தாலும்.. எல்லா நேரத்திலேயும் அதை வெளியில் சொல்லிவிட முடியுமா?''

''ஏன் சொன்னால் என்ன?''

மாலினி இதற்கு என்ன பதிலைச் சொல்வது என்ற நினைவுடன் அவனைப் பார்த்து சிரித்தாள்.

''சிரித்து மழுப்பாதே.. கேட்டதற்கு பதிலைச் சொல்லு..''

''அத்தான்.. ஸ்வேதாவை கடுப்படிக்க நான் உண்மையைச் சொன்னேன் போதுமா. கொஞ்சம் ரோட்டைப் பார்த்து காரை ஓட்டுங்க..''

அவள் சொன்ன பதிலில் அவனது கோபம் முற்றிலும் தணிந்துவிட.. அவன் பழையபடி இலகுத் தன்மையுடன் அவளுடன் பேச ஆரம்பித்தான்.

''இது என்ன சென்னையா.. டிராஃபிக் ஜாம் ஆகிவிட. மார்த்தாண்டம்மா..''

''என்னது.. அம்மாவா.. நான் உங்களுக்கு அம்மாவா?''

அவள் விளையாட்டாய் சண்டைக்கு கிளம்ப.. அவன் கேலியாக சிரித்தான்.

''ஒரு மரியாதைதான்..''

''யாருக்கு வேணும் உங்க அம்மாங்கிற மரியாதை.. இப்படிக் கூப்பிட்டால் நான் உங்களை அத்தான்னு கூப்பிட மாட்டேன்..''

''வேற எப்படிக் கூப்பிடுவாய்?''

''மகனேன்னு கூப்பிடுவேன்..''

''ஐயையோ.. வேண்டாம்.. வேண்டாம்..''

''அஃது... அந்த பயம் இருக்கட்டும்...''

அவன் பதில் சொல்லாமல் அவளைப் பார்த்தான். அவனது மௌனப் பார்வைக்குப் பின்னால் கட்டாயம் ஏதாவது ஒரு செய்தியிருக்கும் என்று அறிந்து வைத்திருந்த மாலனி,

''ஊம்.. சொல்லுங்கள்..'' என்றாள்.

''எதைச் சொல்ல?''

''உங்கள் மனதில் ஓடிக்கொண்டிருக்கும் எண்ணத்தைச் சொல்லுங்கள்?''

''ஹா.. ஹா...''

''சிரித்துவிட்டால் தப்பித்துவிட முடியுமா?''

''ஊம்.. ஹிட்லரையே பயமுறுத்தும் உன்னை என்ன பெயர் சொல்லிக் கூப்பிடுவதுன்னு நினைச்சேன்.. சிரிச்சேன்...''

தக்கலையில் இருந்த மில்லின் முன்னால் ஸ்வேதாவை இறக்கிவிட்டான் பிரபாகரன்.



*உன் கண் போன போக்கில்..*
*என் கால் போகும் நிலைமை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

அந்த விசித்திரமான உணர்வை நினைத்து மனதிற்குள் ஆச்சரியப்பட்டாள் மாலினி.



வேலை பார்ப்பதற்காக என்று சென்னையை விட்டு மார்த்தாண்டம் கிளம்பி வந்தபோதுகூட இப்படியொரு உணர்வை அவள் உணரவில்லை.

பெற்றவர்களையும் கூடப் பிறந்தவனையும் பிரியப் போகும் வருத்தமிருந்தாலும் வேலைக்குப் போகிறோம் என்ற நினைவு அதை மறக்கடித்துவிட்டது.

ஆனால்.. மார்த்தாண்டத்திலிருந்து காரில் அழைத்து வந்து அவள் வேலை பார்க்கப் போகும் மில்லின் முன்னால் பிரபாகரன் இறக்கிவிட்டபோது... முதல் நாள் பள்ளிக்கு தாயை விட்டுப் பிரிந்துபோகும் குழந்தையின் மன நிலையை அடைந்தாள் அவள்.

தயக்கத்துடன் பிரபாகரனைப் பார்த்தபடி மில்லிற்குள் செல்ல அவள் கால் வைத்தாள். அது நேரம் வரை அவள் முகத்தின் உணர்வுகளை ஆராய்ந்தபடி காருக்குள் அமர்ந்திருந்தவன்,

''ஒரு நிமிடம் மாலினி..'' என்றபடி காரை விட்டு இறங்கினான்.

''என்ன அத்தான்?''

''வா...''

''நீங்களும் என்கூட வருகிறீங்களா?''

''ம்ம்ம்..''

சட்டென்று மாலினியின் கலக்கம் பறந்துபோய் விட, அவள் முகம் மலர்ந்தாள்.

''தேங்க்ஸ் அத்தான்...''

அவளுடைய மலர்வைக் கவனித்த பிரபாகரன், கனிவாக சிரித்தான்.

''எதுக்கு தேங்க்ஸ்.. இது எங்கள் ஊர்.. நீ என்னை நம்பி என்னுடன் வந்தவள்...''

பிரபாகரன் வேண்டுமென்றே அவளை வம்புக்கு இழுப்பதை அவனது சிரிக்கும் கண்கள் காட்டிக் கொடுத்து விட்டன.

''வேண்டாம் அத்தான்.. ஸ்வேதாவின் முன்னால் இப்படி வாய்விட்டு வைத்து விடாதீங்க..''

''ஏன்?''

''அவளுக்கு இதயம் வெடித்துவிடும்...''

''அப்படிப் பார்த்தால்... அவளுக்கு எத்தனையோ தடவை இதயம் வெடித்திருக்க வேண்டும். நீ வா..''

பிரபாகரன்.. அந்த மில்லின் மேனேஜிங் டைரக்டரின் அறைக்கே அவளை அழைத்துக் கொண்டு போய்விட்டான். பிரபாகரனை அங்கே அந்த நேரத்தில் எதிர்பார்த்திராத எம்.டி. எழுந்து அவனிடம் கைகுலுக்கினார். அவர் விழிகளில் அப்பட்டமான ஆச்சரியம் தெரிந்தது.

''வாங்க கே.பி.! எங்க மில்லில் உங்க காலடி பட்டிருக்கிறது.. வாட் கேன் ஐ டு பார் யூ?''

''ஷி இஸ் மாலினி...''

பிரபாகரன், மாலினியைக் காட்டிக் கூற.. அவர் மாலினியைப் பார்த்து லேசாக தலையை ஆட்டினார்.

அடுத்து பிரபாகரன் கூறிய வார்த்தைகளைக் கேட்டதும் அவர் விழிகளில் ஆச்சரியம் அதிகரித்தது. மாலினிக்கோ தூக்கிவாரிப் போட்டது.

''இவள் என் அத்தையின் மகள்..''

'இது எப்போதிருந்து?'



மாலினி திருதிருவென்று விழித்துக் கொண்டு பிரபாகரனைப் பார்க்க.. அவனோ அவள் பார்வையைத் தவிர்த்தான். அவன் இதழ்களில் குறும்புச் சிரிப்பு தவழ்ந்து கொண்டிருந்தது.

''உங்கள் மில்லில் வேலைக்குச் சேர வந்திருக்கிறாள்..''

''அந்த சென்னைப் பெண் இவங்கதானா?''

''ஆமாம்..''

''உங்களிடம் எத்தனையோ தொழில் இருக்கு. அதை விட்டுவிட்டு என் மில்லில் இவங்க ஜாயின் பண்ண வந்திருக்காங்களே..''

''என் மில்லில் வேலை செய்தால் வேலை கற்றுக் கொள்ள முடியாது. முதலாளிக்கு அத்தை மகள்னு முடக்கி விடுவாங்க. இவள் வேலையை வேலையாக செய்ய வேண்டாமா?''

இவன் எதற்கு இப்படி உதார் விடுகிறான் என்று விளங்காமல் இமை கொட்டினாள் மாலினி. அவளை அவன் இதற்கு முன்னால் பார்த்ததுகூட இல்லை. மார்த்தாண்டத்திற்கு வேலை கிடைத்த பின் அதைக் காரணமாக வைத்து வந்து இறங்கியிருக்கிறாள் மாலினி.

விஷயம் இப்படியிருக்க.. இவன் சணல் கயிறை திரிக்கிறானே என்று இருந்தது அவளுக்கு.

''வெல் மிஸ்டர் தங்கப்பன்! என் அத்தை மகளை விட்டு விட்டுப் போகிறேன். பார்த்துக் கொள்ளுங்கள்..''

'நானென்ன.. ஸ்கூலில் எல்.கே.ஜி-யில் சேர்ந்திருக்கும் குழந்தையா.. நீ பார்த்துக் கொள்ளச் சொல்ல..' மாலினி பல்லைக் கடித்தாள்.

''அதற்கென்ன பிரபாகரன்.. நாங்கள் பார்த்துக் கொள் கிறோம். டோண்ட் வொர்ரி...''

'என்னத்தை பார்த்துக் கொள்வார். இவர் என்னுடைய எம்.டி.. இவரிடம் போய் ஸ்கூல் டீச்சரிடம் பேசுவதைப் போல இவன் பேசுகிறானே...' மாலினி தலையில் கைவைத் துக் கொள்ளாத குறையாய் பிரபாகரனைப் பார்த்தாள்.

''வேலையை எல்லாம் நல்லா பார்ப்பாள். வெரி கிளவர் கேர்ள்.. ஸ்மார்ட் வொர்க்கர்..'' பிரபாகரன், மாலினியை ரசனையாய் பார்த்தபடி தங்கப்பனிடம் பேசினான்.

'ஆமாமாம்.. நீ ரொம்பக் கண்டுவிட்டாய்..'

''கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி பாடுமே..'' தங்கப்பன் புகழ்ச்சியாக பேசி வைக்க...

'இதை ஏன் அவர் இப்போது போய் சொல்கிறார்..' என்று பலத்த சிந்தனையில் ஆழ்ந்தாள் மாலினி.

மாலினியின் மனதைப் படித்தவனாக பிரபாகரன்..

''எதனால் அப்படிச் சொல்கிறீங்க?'' என்று கேட்டான்.

மாலினி மகா நன்றியுடன் பிரபாகரனை ஒரு பார்வை பார்த்தாள்.

''உங்கள் வீட்டிலிருக்கும் உங்கள் அத்தை மகள்.. புத்திசாலியாகவும் வேலையில் கெட்டிக்காரத்தனமாக வும் இருப்பதில் ஆச்சரியமென்ன இருக்கிறது பிரபாகரன். அப்படி இல்லாவிட்டால்தான் ஆச்சரியப்படனும்..'' தங்கப்பன் படு வினயமாகப் பதில் சொன்னார்.

'ம்ஹூம்... உலகத்தில் ஐஸ் வைப்பவர்களைப் பார்த்திருக்கிறேன். ஐஸ்கட்டியை வைக்கிறவர்களைப் பார்த்திருக்கிறேன். இப்படி ஐஸ் பாறையையே தூக்கி வைப்பவர்களை இப்போதுதான் பார்க்கிறேன்..' மாலினி நொந்தே போனாள்.



''அப்ப நான் கிளம்புகிறேன் தங்கப்பன்...''

''போய் வாங்க பிரபாகரன்..''

''மாலினி?''

''வேலையை ஆரம்பிக்கட்டும்...''

பிரபாகரன் ரகசியப் புன்னகையுடன் ஒரு சிறு தலை யசைவுடன் விடைபெற்றுக் கொண்டு அறை வாசல் வரை போனவன்.. நின்று மாலினியைத் திரும்பி பார்த்தான்.

''லன்ச் அவர்ஸ் என்ன தங்கப்பன்?''

''ஒன் டு டூ...''

''மாலினி லன்சுக்கு நான் வந்து உன்னை அழைத்துப் போகிறேன்..''

மாலினியின் பதிலை எதிர்பார்க்காமல் அவன் வெளி யேறிவிட்ட பின்னால்தான் அவள் சுதந்திரமாய் உணர்ந் தாள். கட்டுகளற்ற ஆசுவாசப் பெருமூச்சு விட்டபடி தங்கப்பனைப் பார்த்து வணக்கம் சொன்னாள்.

''ப்ளீஸ்.. டேக் யூவர் ஸீட்..''

அவர் மிகுந்த அக்கறையுடன் சொல்லவும்.. ஸீட்டில் அமர்ந்து அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரை அவரிடம் கொடுத் தாள். அவர் போனை எடுத்து... உதவியாளரை அழைத்தார்.

''ஜிஎம்மை என் ரூமிற்கு வரச்சொல்லுங்க..''

ஜெனரல் மேனேஜர்.. மாணிக்கவாசகம் உள்ளே வந்ததும்..

''இவங்க மாலினி.. நம்ம மில்லில் இன்றைக்கு ஜாயின் பண்ண வந்திருக்கும் மெக்கானிக்கல் இன்ஜினீயர்..'' என்று அறிமுகப்படுத்தினார்.

''தெரியுமே சார்.. சென்னையிலிருந்து வருகிறாங்க..''

''உங்களுக்கு அது மட்டும்தானே தெரியும். இவங்க கேபியுடைய அத்தை மகள்.. அது தெரியுமா?''

''ஈஸிட்... இவங்க இன்டர்வியூவில் அதைப் பற்றிச் சொல்லவேயில்லையே...''

மாணிக்கவாசகம் திரும்பி மாலினியை ஆச்சரியமாகப் பார்க்க.. அவள் சலிப்புடன் தன் தலையைப் பிடித்துக் கொண்டாள்.

'யோவ்.. எனக்கே.. இப்படியொரு மாமன் மகன் இருப்பது நேற்றுதான் தெரியும்யா!'

''கேபியே நேரில் வந்து சொல்லிவிட்டுப் போனார்..''

''அவரே வந்தாரா?''

'உங்களுக்கு மட்டும்தான் ஆச்சரியமா.. எனக்கும் அவன் மில்லுக்குள் வந்து கலக்கிவிட்டுப் போனதில் ஆச்சரியம்தான்.. நான் நினைத்தா பார்த்தேன்... இப்படியெல்லாம் நடக்குமென்று..'

''இவங்களுடைய வொர்க் என்னன்னு சொல்லிடுங்க மாணிக்கவாசகம். ஜாயினிங் ரிப்போர்ட் வாங்கிக்குங்க. கேபியுடைய அத்தை மகள்.. நம் மில்லில் வேலைக்குச் சேர்ந்திருப்பது நமக்கெல்லாம் பெருமையான விஷயம்..''

'சும்மாவா பழம்பெருமை பரந்தாமன் அப்படி அளந்துவிட்டார்...'

பிரபாகரனின் செல்வாக்கின் அளவை நேரிலேயே கண்கூடாக கண்டுவிட்ட மாலினி.. மனதிற்குள் சொல்லிக் கொண்டாள்.



சென்னையிலிருந்து மிகப் பெரிய மில்லில் ஜூனியர் இன்ஜினீயராக வேலை பார்க்கப் போகும் பெருமையுடன் அவள் மார்த்தாண்டத்தின் மண்ணை மிதித்திருக்கிறாள்.

அந்த மில்லின் முதலாளி எழுந்து நின்று கைகுலுக்கி பிரபாகரனை வரவேற்கிறார் என்றால்.. பிரபாகரன் எவ்வளவு பெரிய ஆளாக இருக்க வேண்டும்?

சற்று நேரத்திற்குள்ளாகவே பிரபாகரனின் அத்தை மகள் அந்த மில்லில் வேலைக்குச் சேர்ந்திருக்கும் செய்தி மில் முழுவதும் பரவியது.

எல்லோரும் ஏதாவது ஒரு வேலையை சாக்கிட்டுக் கொண்டு வந்து அவளைப் பார்த்துவிட்டுப் போனார்கள்.

''கேபி சாருக்கு அத்தை மகளாம்..''

முணுமுணுப்புகள் காதில் விழுந்தன. அதைக் கேட்காததைப் போன்ற பாவனையுடன் அவள் வேலையைப் பற்றி அறிய முயன்று கொண்டிருந்தாள். சற்று நேரத்தில் அவளுக்கு வேலை பிடிபட்டுவிட்டது.

''ஒரே நாளில் எல்லாத்தையும் கரைச்சுக் குடிச்சுகத்துக்க முடியாது மிஸ் மாலினி.. முதலில் நேச்சர் ஆஃப் வொர்க் என்னாங்கிறதைச் சொல்கிறேன். நாளாக ஆக நீங்களே பழகிக்குவீங்க..''

அவளுடைய சீனியர் இன்ஜினீயர் ரமேஷ் கூறினான். அவன்தான் காலையிலிருந்து அவளுக்கு பொறுமையாக வேலையின் தன்மையைப் பற்றி விளக்கிக் கொண்டிருந்தான்.

''நீங்க மட்டும் டீச்சராகப் போயிருந்தீங்கன்னா.. உங்க கிளாஸ் ஸ்டூடண்ட்ஸ் எல்லோருமே உங்க சப்ஜெக்டில் நூற்றுக்கு நூறு மார்க் வாங்கியிருப்பாங்க...'' மாலினி பாராட்டுதலாகக் கூறினாள்.

அவன் ஏதோ சொல்ல வாய் திறந்துவிட்டு சட்டென்று மௌனமாகி விட்டான்.

'இவனுக்கு என்ன ஆச்சு.. என்னிடம் சகஜமாகப் பேச ஏன் யோசிக்கிறான்?'

மாலினிக்குப் புரியவில்லை. அவள்தான் நினைப் பதையெல்லாம் வெளியில் கேட்டுவிடுவாளே.

அவளும் கேட்டாள்.. ரமேஷும் பதில் சொன்னான். அவன் சொன்ன பதிலைக் கேட்டு மாலினிக்கு சிரிப்பதா.. இல்லை அழுவதா என்று தெரியவில்லை.



*இரவினில் தூங்க... இமை மூட முயன்றால்...*
*உன் முகம் வந்து துயிலை.. துரத்துகின்ற நிலையை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

''நீங்க கே.பி. சார் வீட்டுப் பெண்.. உங்களிடம் சகஜமாகப் பேசிப் பழக யோசனையாக இருக்கு...''

மாலினிக்கு சட்டென்று பிரபாகரனின் மேல்தான் கோபம் வந்தது. இயல்பாக இருக்க முடியாமல் அவளுடைய சுதந்திரம் பாதிக்கப்படுவதைப் போல உணர்ந்தாள்.

'இவனை யார் என்னை உறவு கொண்டாடிக் கொண்டு என் மில் வரைக்கும் வரச் சொன்னது..'

அவளுக்குள் எரிச்சல் உற்பத்தியானது. அவன் யார்.. அவள் யார்.. ஒரு திரைப்படப் பாடலில் வருவதைப் போல.. நேற்று வரை அவள் யாரோ.. அவன் யாரோ.. இன்று மட்டும் வேறு வேறாக இல்லாமல் ஒன்றாகிவிட்டார்களா என்ன?



'இதெல்லாம் அவனுக்கே ஓவராகத் தெரியலையா..?'

''நான் இங்கே வேலை பார்க்க வந்திருக்கிறேன் சார்.. என்னை உங்களின் ஜூனியர் இன்ஜினீயராக மட்டும் பாருங்கள். நான் யார் வீட்டுப் பெண்ணாக இருந்தால் என்ன? இந்த மில்லில் அது என் அடையாளமில்லையே. என்னை.. என் அடையாளத்துடன் பாருங்கள்..''

''ஓகே...''

அவன் இயல்பாகிச் சிரித்தான். அதற்குப் பின்னால் தயக்கமில்லாமல் அவளிடம் பேசிப் பழகினான்.

மதிய உணவு நேரம் நெருங்கும்போது மாலினியின் செல்போன் ஒலித்தது. எடுத்துப் பார்த்தாள். அடையாளம் தெரியாத நம்பர் என்றது போன். எச்சரிக்கையுடன் மிக மெதுவான குரலில்..

''ஹலோ..'' என்றாள்..

''எதுக்கு இவ்வளவு பயம்.. என் அத்தை மகளிடம் போன் பேசக்கூட இந்த ஊரில் யாரும் துணிய மாட்டார் கள்'' என்றான் பிரபாகரன்.

என்ன சொல்வது என்று புரியாமல் எதிரில் அமர்ந் திருந்த ரமேஷைப் பார்த்தபடி..

''சொல்லுங்க..'' என்றாள் மாலினி.

''மில்லுக்கு வெளியில் காரில் வெயிட் பண்ணிக் கொண்டு இருக்கிறேன்.. வா..''

''எதுக்கு?''

''ம்ம்.. உச்சி வெயிலில் ஊர் சுற்றிப் பார்க்க? மணி என்னன்னு பார்த்தியா?''

மாலினி கைக்கடிகாரத்தைப் பார்த்தாள். ஒன்று என்றது. அதைச் சொன்னாள்.

''தெரியுதில்ல.. வா...''

''எதுக்கு?''

''மண்டு... இது கொட்டிக் கொள்கிற டயம்..''

'ஓ.. லன்ச் டயமா. ஆனால்.. அதுக்கு எதுக்கு இவன் என்னை வெளியில் கூப்பிடுகிறான்..'

ரமேஷை வைத்துக் கொண்டு இதற்கு மேல் பேசக் கூடாது என்ற நினைவுடன் மாலினி எழுந்து கொண்டாள்.

''என்ன?'' என்றான் ரமேஷ்.

''லன்ச் முடித்துட்டு வர்றேன்..'' மாலினி கைப்பையை எடுத்துக் கொண்டாள்.

''நீங்க கையில் எடுத்துக்கிட்டு வரலையா?''

''இல்லை..''

''நம்ம மில் கான்டீனில் சாப்பாடு வெரைட்டியாக வும் ருசியாகவும் இருக்கும்...''

மாலினி தயக்கத்துடன்..

''அத்தான் வந்திருக்கிறார்..'' என்றாள்.

''யார்.. கே.பி. சாரா?'' ரமேஷ் பரபரப்புடன் கேட்டான்.

''ஆமாம்..''

''எனக்கு உங்களைப் பார்த்தால் பொறாமையா இருக்கு மாலினி..''

''எதுக்கு?''



''கே.பி. சாரின் பக்கத்தில் நின்று ஒரு வார்த்தை யாவது பேசிவிடணும்கிறது என்னுடைய நீண்ட நாள் கனவு. இதுவரைக்கும் அது நிறைவேறவில்லை. நீங்க கொடுத்து வைத்தவங்க. அவளுடைய உறவுக்காரப் பெண்ணாக இருக்கிறீங்க. அவளுடன் பேசிப் பழக உங்களால் முடிகிறது..''

இந்த வார்த்தைகளை ஒரு பெண் சொல்லியிருந்தால் அதில் ஒரு அர்த்தம் இருக்கிறது. இதைச் சொன்னது ஆண்.

மாலினிக்கு ரமேஷின் ஏக்கத்தைப் பார்க்கும்போது ஒரு பக்கம் அதிசயமாகவும் மறுபக்கம் வேடிக்கையாகவும் இருந்தது.

''என்னுடன் வாங்களேன்.. உங்களுக்கு அவரை அறிமுகப்படுத்தி வைக்கிறேன்..'' என்று அழைத்தாள்.

''நிஜமாகவா?'' ஆர்வத்துடன் எழுந்து வந்தான் ரமேஷ்.

மில்லிற்கு வெளியே நின்றுகொண்டிருந்த பிரபாகரனின் காரருகே சென்றவுடன் மாலினி குனிந்து.. கார் ஜன்னலின் வழியாக பிரபாகரனைப் பார்த்தாள்.

''அத்தான்.. இவர் என் சீனியர் இன்ஜினீயர் ரமேஷ்..''

''அப்படியா..''

பிரபாகரன் காரை விட்டு இறங்காமல் லேசாக முறுவலித்தான். அதற்கே ரமேஷ் மகிழ்ந்து போய்விட்டான்.

''போகலாமா மாலினி...''

பேச்சு முடிந்துவிட்டது என்பதை உணர்த்தும் விதமாக அவன் கூற.. மாலினி கார் கதவைத் திறந்து அவனருகில் அமர்ந்து ரமேஷிற்கு கையசைத்தாள்.

கார் கிளம்பியதும் பிரபாகரன் இறுக்கமான குரலில் அவளிடம் வினவினான்.

"நீ வேலையில் ஜாயின் பண்ணி மூன்று மணி நேரம் தான் ஆகிறது. அதற்குள்.. 'டாட்டா' சொல்கிற அளவுக்கு அவனுடன் பழகிவிட்டாயா?"

மாலினிக்கு அவனது குரலின் தொனியும் அவன் முகத்தின் கோபமும் கேள்வி கேட்ட விதமும் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை.

"உங்களைக்கூட எனக்கு நேற்று ஈவினிங்கில் இருந்து தான் தெரியும். உங்கள் பக்கத்தில் காரில் உட்கார்ந்து வேலைக்கு வருகிற அளவுக்கு பழகவில்லையா.. அது போல்தான் இதுவும்.." என்று பட்டென்று சொல்லிவிட் டாள்.

பிரபாகரன் திரும்பி அவளை முறைத்த முறைப்பில் தெரிந்த பயங்கரம்.. அவளது முதுகுத் தண்டை சில்லிடச் செய்தது.

"அவனும் நானும் ஒன்றா?" வில்லில் இருந்து வெளிப் பட்ட கூரிய அம்பு போல் கேள்விக்கணை பாய்ந்து வந்தது.

'ஆமாம்..' என்று சொல்லத்தான் மாலினி ஆசைப் பட்டாள்.

ஆனால்.. பிரபாகரனுக்கு காட்டமாக பதில் சொல்ல வேண்டும் என்ற பிடிவாதத்திற்காக மனதை மறைத்து பொய் சொல்ல அவளால் முடியவில்லை.

பார்த்த முதல் பார்வையிலேயே அவளது கருத்தை கவர்ந்து நிறைந்த முதல் ஆண் மகன் பிரபாகரன்தான்.

ரமேஷ் அலுவலகத் தோழன். அவனும் பிரபாகரனும் எப்படி ஒன்றாக முடியும்.



மாலினி மௌனம் சாதித்தாள்.

"என்ன.. பதிலைக் காணோம்?" பிரபாகரன் காரை சாலையோரமாக நிறுத்திவிட்டான்.

"இப்ப எதுக்காக காரை நிறுத்தறீங்க.."

"உன் பதிலைக் கேட்க.."

"அதை காரை ஓட்டிக்கொண்டே கேட்கலாமே.."

"காரை ஓட்டினால் என் மில் வந்துவிடும்.."

"வந்தால் என்ன?"

"அங்கே ஆண்கள் வேலை செய்து கொண்டிருக் கிறாங்க.."

"வேலை செய்தால் என்ன?"

"நம்மைக் கவனிப்பார்கள்..."

"கவனித்தால் என்ன?"

"நீயென்ன கே.பி. சுந்தராம்பாளா.. எதுக்கெடுத் தாலும் 'என்ன.. என்ன.. என்ன'ன்னு கேள்வி கேட்டுக் கொண்டிருக்கிறாய்?"

பிரபாகரனின் குரலில் பழைய கேலி லேசாக திரும்பி யிருப்பதைக் கண்டதும்.. இன்னதென்று விவரிக்க முடியாத வகையில் மாலினியின் மனம் அமைதியானது. அவன் பாணியிலேயே பதிலைக் கொடுக்க அவளும் உற்சாகமாய் முனைந்தாள்.

"கே.பியின் பக்கத்தில் உட்கார்ந்திருக்கிறேன் இல்லையா.. அதனால்தான் கே.பி. சுந்தராம்பாள் ஆகி விட்டேன்.."

பிரபாகரனின் முகத்தின் இறுக்கம் இன்னும் கொஞ்சம் குறைந்தது.

''இதிலெல்லாம் குறைச்சல் இல்லை..''

''வேறு எதில் குறைச்சல்?''

''கே.பி-யின் அத்தை மகள்... கூட வேலை பார்க்கிற வனுக்கு டாட்டா சொல்லலாமா?''

பிரபாகரன் அதிலேயே நிற்க.. மாலினிக்கு கோபம் போய் சிரிப்புத்தான் வந்தது.

''அத்தான்..'' என்றாள் சிரித்துக் கொண்டே.

அந்த ஒரு வார்த்தைக்குத்தான் எத்தனை சக்தி?

பிரபாகரன் முக இறுக்கம் முற்றிலும் தளர்ந்தவனாய் அவளைப் பார்த்தான்.

''அவரும்.. நீங்களும் ஒன்றில்லைன்னு இப்போது புரிகிறதா.. அவர் என்னுடன் வேலை பார்ப்பவர். வெறும் நண்பர். நீங்கள் என் அத்தான்...''

பிரபாகரனின் விழிகளில் உல்லாசம் நிரம்பியது.

''ம்ம்.. அப்புறம்?'' என்று அவளை மேலும் பேசத் தூண்டினான்.

''அப்புறம்... நீங்கள் என் மாமா மகன்.. வெரி ஹேண்ட்சம் மேன்.. அதனால்...'' மாலினி முடிக்காமல் நிறுத்த...

''அதனால்?'' என்று ஆவலுடன் வினவினான் பிரபா கரன்.

''அதனால்.. சைட் அடிக்கணும்னு நினைத்தால் உங்களைத்தான் சைட் அடிப்பேன். இப்பவாவது காரைக் கிளப்புறீங்களா?''

பிரபாகரன் இப்போது முகமெல்லாம் சிரிப்பாக...

''ஹா.. ஹா..'' என்று சிரித்தான்.



காரைக் கிளப்பியபடி அவளை திரும்பிப் பார்த்து..

''அப்படின்னா.. நீ இன்னும் என்னை சைட் அடிக்க ஆரம்பிக்கவில்லையா?'' என்று விஷமமாக கேட்டான்.

மாலினியின் முகமும் சிவந்துவிட்டது. அவள் நகத் தைக் கடித்தபடி ஜன்னல் பக்கமாக முகம் திருப்பிக் கொண் டாள்.

''ஆனாலும் மாலினி.. கூட வேலை பார்க்கிறவங்க ளிடம்கூட அளவாகப் பழக நீ பழகிக் கொள்ள வேண் டும்..''

பிரபாகரன் அதிலேயே நிற்க.. இவன் இந்தப் பேச்சை விட மாட்டானா என்று எரிச்சல்பட்டாள் மாலினி.

''அத்தான்.. நான் சென்னையில் பிறந்து வளர்ந் தவள்...''

''ஆனால், இது மார்த்தாண்டம்..''

''இன்ஜினீயரிங் படிக்கும்போது.. ஆண்களுடன் சேர்ந்துதான் படித்தேன்...''

''அதை இப்போது எதற்காக சொல்கிறாய்?''

''ஆண்.. பெண் வித்தியாசமில்லாமல் எல்லோரிட மும் இயல்பாய்.. நட்பாய் பழகித்தான் எனக்குப் பழக்கம்..''

''ஸோ.. என் பேச்சை நீ கேட்க மாட்டாய்?''

பிரபாகரன் மறுபடி காரை நிறுத்திவிட... இவன் வீட்டிற்கு வந்தாலும் வந்தோம்.. பசித்த நேரத்தில் ஒரு வாய் சாப்பாட்டை ஒழுங்காக உள்ளே தள்ள முடியவில்லை என்று மானசீகமாய் தலையில் கைவைத்துக் கொண்டாள் மாலினி,

''உங்கள் பேச்சைக் கேட்காமல் யார் பேச்சை நான் கேட்கப் போகிறேன் அத்தான்.. தயவுசெய்து காரை எடுங்க..''

''மாலினி...''

''அந்த ரமேஷிற்கு உங்கள் மேல் அளவு கடந்த காதல்...''

''என்ன.. என்ன சொன்னாய்?''

தன் காதுகளில் விழுந்த வார்த்தைகளை நம்ப முடியாமல் மாலினியைப் பார்த்தான் பிரபாகரன்.

'நான்தான் சரியாகக் கேட்கவில்லையா?'

''அந்த ரமேஷிற்கு உங்கள் மேல் கரை கடந்த காதல்னு சொன்னேன்...''

''ஏய்ய்...''

பிரபாகரன் அவளை அடிக்க கையை ஓங்கினான். மாலினி கலகலவென்று தலையைச் சாய்த்து அவனைப் பார்த்து சிரித்தாள்.

அந்த நிமிடத்தில் அவர்கள் இருவரும் காலம் காலமாய் பழகியவர்கள் போல உணர்ந்தார்கள்.



*நீ உயிர் துறக்கச் சொன்னால்...*
*உடனே என் உயிர் பிரியும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

முதல் நாள் மாலையில்தான் அவர்கள் இருவரும் சந்தித்துக் கொண்டார்கள். ஆனால்.. பிறந்ததில் இருந்து அறிந்தவர்களைப் போல அவர்கள் பேசிப் பழகிக் கொண்டார்கள்.



''நிஜமாகத்தான் சொல்கிறேன் அத்தான்.. நான் உங்களுக்கு உறவுக்காரியென்பதில் ரமேஷிற்கு அவ்வளவு பொறாமை. உடனே இதற்கு குதர்க்கமாய் அர்த்தம் கண்டு பிடித்து விடாதீர்கள். அவர் பொறாமைப் பட்டது என்னைப் பார்த்து, உங்களைப் பார்த்து இல்லை..''

''அது ஏன்?''

''ஏன்னா.. என்னால் உங்களோடு பேச முடிகிறதாம்.. பழக முடிகிறதாம்.. அவரால் அது முடியலையாம்.. உங்களைப் பற்றிப் பேசும்போது அவருடைய முகம் ஜொலித்த ஜொலிப்பு இருக்கிறதே... அந்த ஜொலிப்பை ஸ்வேதாவிடம்கூட நான் பார்க்கவில்லை..''

''இப்போது எதுக்கு ஸ்வேதாவின் பேச்சை எடுக்கிறாய்?''

''அவள்தானே உங்களை.. என்னுடைய ஆள்னு சொன்னாள்..''

இதைக் கேட்டதும் பிரபாகரனின் கண்கள் மின்னின.

'இவன் எதற்கு ஒரு மார்க்கமாய் பார்க்கிறான்..' என்று யோசித்தாள் மாலினி.

புரியாமல் அவனைப் பார்த்து புருவம் உயர்த்தினாள் மாலினி.

''நான் உன்னுடைய ஆளா?''

'கடவுளே.. இவன் அதற்கு இப்படியொரு அர்த்தத்தை கண்டுபிடித்திருக்கிறானா..'

''அவசரப்படாதீங்க அத்தான்.. அவள் உங்களை அவளுடைய ஆளுன்னு சொன்னாள். அதைத்தான் நான் இந்த லட்சணமாய் சொல்லிவிட்டேன்...''

''நிஜமாகவா?''

அவன் நம்பாத பாவனையில் கூற.. இருவரும் இணைந்து சிரித்தார்கள்.

''அவள் சொன்னால்.. நீ கேட்டுக் கொள்வதா?''

''இதென்ன வம்பா போச்சு.. நான் முந்தா நாள் பெய்த உறவுமுறையில் நேற்று முளைத்த உறவுக்காரி.. அவள் பிறந்ததிலிருந்து உங்களுக்குச் சொந்தக்காரி. அவள் சொன்னால் நான் கேட்டுக் கொள்ளாமலிருக்க முடியுமா?''

''திரும்பவும் என்னிடம் அடி வாங்கப் போகிறாய்...''

''என்னை அடித்தால் நான் சொன்னது இல்லை யென்றாகி விடுமா?''

''அவள்.. எங்க உறவில் பாதிப் பேரை அவளுடைய ஆள்னுதான் சொல்வாள். எங்கள் வீட்டிலேயே முதலில் கருணாவை சைட் அடித்தாள். அவன் தப்பித்து சசிரேகா வின் கழுத்தில் தாலியைக் கட்டிவிட்டான்...''

''ஐஸீ...''

''அடுத்து.. தினகரனின் மேல் காதல் கணையை விட்டுப் பார்த்தாள். அவன் இவளிடமெல்லாம் கிளீன் போல்டு ஆகமாட்டான். இவள் விட்ட அம்பை திருப்பி இவள் பக்கமே வீசிவிட்டு.. கல்லையும் மண்ணையும் பார்ப்பதைப் போல இவளையும்... உனக்கெல்லாம் ஒரு கணக்கான்னு பார்த்துவிட்டுப் போய்விடுவான்..''

மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது. சிரித்தாள். அவள் சிரிக்கும் அழகை ரசித்தவாறு தொடர்ந்து பேசினான் பிரபா கரன்.

''இப்போது என் பெயரைச் சொல்லிக் கொண்டு அலைகிறாள்...''



''நீங்கள் தடா போட மாட்டீங்க என்ற தைரியமாக இருக்கலாம்..''

மாலினியின் பேச்சில்... 'நீ தடா போடவில்லை...' என்ற மறைமுக குற்றச்சாட்டு எதிரொலித்தது.

பிரபாகரனுக்கு அது புரிந்தது. அவன் பார்வை கூர்மை யாக அவள் மேல் படிந்தது. அந்தப் பார்வையைக் கண்டு அவள் திணறிப் போனாள்.

''நான் தடா போடவில்லைன்னு உனக்குத் தெரி யுமா?''

மாலினி இதற்கு மேல் அதைப் பற்றிப் பேசக்கூடா தென்ற உணர்வுடன் மௌனித்து விட்டாள்.

''என்ன பேச்சைக் காணோம்?''

''இவ்வளவு பேசியதே அதிகப்படி...''

''நீ அப்படிக்கூட நினைப்பாயா?''

பிரபாகரன் கிண்டலுடன் கேட்டுவிட்டுச் சிரித்தான். அவன் சிரிக்கும்போது தெரிந்த வரிசைப் பற்களின் வசீகரத் தில் மயங்கிப் போனாள் மாலினி.

'ச்சீ... என்ன நினைப்பு இது.. இவனே எட்டாக்கனி. இவனைப் பார்த்து மயங்கி என்ன லாபம்?' தன் மனதை அடக்க முயன்றாள்..

''ஸ்வேதா என் அம்மாவின் ஒன்றுவிட்ட அண்ண னின் மகள். அவளைக் கடிந்து பேசினால் அம்மாவிற்கு மனதிற்குள் வருத்தமாக இருக்கலாம். பெண்களுக்கே உரிய பிரத்தியேக உணர்வு அது. அவங்களுக்கு பிறந்தவீட்டுப் பாசம் அதிகமிருக்கும். அவங்க பெரியப்பாவின் பேத்தி யைச் சொன்னால் அவங்க வருத்தப்படுவாங்கன்னு பொறுமையாய் போகிறதுதான்..''

''எதுவரை பொறுமையாய் போவீங்க..''

''அவள் லிமிட்டைத் தாண்டாத வரை.. நேற்றே பார்த்தாய்தானே..''

நிஜம்தானே.. ஸ்வேதா அளவைக் கடந்து பேசியதும் பிரபாகரன் அவளை வன்மையாகக் கண்டிக்கத் தயங்க வில்லையே.

தக்கலையின் பிரதான சாலையிலிருந்த மிகப் பெரிய கட்டடத்தின் வளாகத்திற்குள் கார் சென்றது.

மாலினி வேலைக்குச் சேர்ந்திருந்த மில்லைவிட மிகப் பெரியதாக இருந்த அந்த மில்லின் சுற்றளவை அவள் வியப்புடன் பார்த்தாள்.

''என்ன பார்க்கிற?'' என்று கேட்டான் பிரபாகரன்.

''எங்க மில்லைவிட.. பத்து மடங்கு பெரியதாக இந்த மில் இருக்கும் போல இருக்கே..''

''உங்க மில்லா.. நீ அந்த மில்லை விலைக்கு வாங்கி யிருக்கிறாயா?''

''ம்ஹூம்.. வேலை செய்கிற விசுவாசத்துடன் ஒரு வார்த்தை பேசிவிடக் கூடாதே... உடனே குற்றம் கண்டு பிடித்து விடுவீங்களே...''

மாலினி அந்த மில் வளாகத்தை ஆர்வத்துடன் பார்க்க ஆரம்பித்தாள்.

மிகச் சிறிய கிராமத்தைப் போல ஆங்காங்கே கட்ட டங்கள் வரிசையாகத் தென்பட.. அவற்றைச் சுற்றி வளைத்து அகன்ற சாலைகள் ஓடின. சாலையின் இரு பக்கமும் வரிசையாக மரக்கன்றுகள் நடப்பட்டு இருந்தன. ஒவ்வொரு கட்டடத்தின் வாசலிலும் மலர்களின் பெயர் களைக் கொண்ட பலகைகள் தென்பட்டன.



மாலினி அவற்றை வாய்விட்டுப் படித்தாள்.

''முல்லை.. மல்லிகை.. ரோஜா.. சாமந்தி.. அல்லி.. சூரியகாந்தி.. தாமரை.. அந்தி மந்தாரை.. வாவ்.. மருக் கொழுந்தைக்கூட விடவில்லையே அத்தான்..''

''ம்ம்.. இங்கேயிருக்கும் ஒவ்வொரு செக்ஷனுக்கும் ஒரு பூவின் பெயரை வைத்தேன்..''

''பூன்னா அவ்வளவு இஷ்டமா..''

''ம்ம்.. பூவைப் போல சிரிக்கிறவங்கன்னாலும் எனக்கு ரொம்ப இஷ்டம்தான்..''

மாலினியின் மலர் சிரிப்பைக் கவனித்தபடி அவன் கூறவும், மாலினியின் முகம் சிவந்துவிட்டது.

''சென்னையில் பிறந்து வளர்ந்தேன்னு வெறும் வாய் சவடால் அடிக்கிற. ஒரு வார்த்தை சொல்லிவிட்டால் போதும்.. இப்படி வெட்கப்படறே..''

பிரபாகரன் அவளை ரசனையாய் பார்த்தபடி கூறவும்.. அவளது வெட்கம்.. இன்னும் அதிகமாகி விட்டது.

''அட..'' என்று சிரித்தவன்.. அவளைத் தனது அலுவலகம் இருந்த மெயின் பில்டிங்கிற்கு அழைத்துக் கொண்டு போனான். மூன்று தளங்களுடன் இருந்த அந்தக் கட்டடத்தில் லிஃப்ட் வசதி இருந்தது. மூன்றாவது மாடி யில் நீண்ட வராண்டாவில்.. நடு மையத்தில் மிகப் பெரிய தாக இருந்த அவனது அறையின் முன்பகுதி ஹால் போல இருந்தது. சோபாசெட்டுகள் போடப்பட்டிருக்க.. ஹாலின் நடுமையத்தில் டீப்பாய் இருந்தது. அதில்.. தினசரி.. வாராந்திர.. மாதாந்திர பத்திரிகைகள் வைக்கப்பட்டிருந்தன. ஹாலின் மூலையில் டி.வி. இருந்தது.

வெறுமையாக இருந்த சுவர்களைப் பார்த்த மாலினி..

''இதில்.. அழகான பெயிண்டிங்குகளை வாங்கி மாட்டி வைக்கலாமே..'' என்று கூறினாள்.

''அதை நீயே செய்யேன்?'' இலகுவாக பதில் சொன் னான் பிரபாகரன்.

''நானா?'' அவள் மலைத்தாள்.

''ஏன்.. உன்னால் முடியாதா? பணம் நான் கொடுக் கிறேன்ம்மா.. செலக்ஷனை மட்டும் நீ செய்தால் போதும்..''

''பின்னே.. மார்த்தாண்டபுரத்து மகாராஜாவின் மில்லுக்கு என் கைப்பணத்தை போட்டு பெயிண்டிங் வாங்கி மாட்டவா நான் நினைப்பேன்? அந்த அளவுக்கு எனக்கு வசதி பத்தாது அத்தான்..''

''அப்புறம் எதுக்கு அந்த 'நானா..' ..ம்ம்?''

''அந்த 'நானா...'.. வேறு ஒன்றுக்கு போட்ட 'நானா..'... புரிகிறதா?'''

''எந்த ஒன்றுக்கு போட்ட 'நானா..'ன்னு சொன் னால்தானே புரியும்?''

''இவ்வளவு பெரிய மில்லை.. ஏறக்குறைய ஒரு ஊர் போல இருக்கிறது.. இதை திட்டமிட்டுக் கட்டி.. ஒவ்வொரு பில்டிங்கிற்கும் மலர்களின் பெயரை வைத் துன்னு தூள் கிளப்புகிற... உங்கள் ரூமில் நான் இன்டீரியர் டெக்கரேட் பண்ணுவதா? எனக்கு உங்கள் அளவிற்கு எல்லாம் மண்டையில் மசாலா இல்லை அத்தான்...''

''யார்.. உனக்கு? மண்டையில் மசாலா இல்லை? இதை நான் நம்ப வேண்டுமாக்கும். நேற்றைக்கு நைட்.. ஸ்வேதாவை தாக்குதாக்கென்று தாக்கினாயே.. உனக்கா மண்டையில் மசாலா இல்லை?''

''ஆஹா.. என் அறிவைப் புகழ உங்களுக்கு வேறு



உதாரணமே கிடைக்கவில்லையா அத்தான். ஸ்வேதாதான் கிடைத்தாளா? இல்லை.. இதை சாக்கு வைத்து அவள் பெயரைச் சொல்லிக் கொள்ள ஆசையா?''

''உன்னை...''

அவன் மீண்டும் கையை ஓங்க.. அவள் கலகல வென்று சிரித்தாள். பிரபாகரனின் முகத்தில் இளநகை அரும்பியது.

''உள்ளே வா..''

முன்புற ஹாலைத் தாண்டியதும் இருந்த அறையில் பக்கவாட்டில் ஜன்னலோரமாக சோபாக்கள் போடப்பட்டு இருக்க.. சுழல்நாற்காலியுடன் இருந்த டேபிளின் முன் னால்... இரண்டு குஷன் வைத்த சேர்கள் போடப்பட் டிருந்தன. அறையுடன் ஒட்டிய அட்டாச்சுடு பாத்ரூம்..

இங்கும் சுவர்கள் வெறுமையாக இருந்தன. மாலினி அதைப் பார்க்க...

''ஹாலை அலங்கரித்தது போல இங்கேயும் அலங் கரித்து விடு...'' என்றான் பிரபாகரன்..

''ஹாலை அலங்கரித்தேனா?'' மாலினி திகைத்தாள்..

''மனதில் அலங்கரிக்கவில்லையா?''

''அத்தான்.. நீங்கள் பெரிய ஆள்தான்..''

''அப்படித்தான் இந்த மார்த்தாண்டத்தில் சொல்லிக் கொள்கிறார்கள்...''

பிரபாகரனின் எதிரே இருந்த சேரில் அமர்ந்து கொண்ட மாலினி.. டேபிளில் இருந்த சாப்பாட்டுக் கூடையை தன் பக்கம் இழுத்துக் கொண்டாள்.



*உன் கால் பதிந்த தடத்தில்...*
*என் கால் நடக்கும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

மாலினி.. பிரபாகரனுக்கும் தனக்கும் தட்டு வைத்து பரிமாற ஆரம்பித்தாள். அதை மனதிற்குள் வெகுவாய் விரும்பிய பிரபாகரன்.. வெளியே வாய் வார்த்தைக்காக..

''உனக்கு ஏன் சிரமம்?'' என்று சொல்லி வைத்தான்.

''ஹை.. ஹை.. பரிமாற ஆள் வேண்டும்னுதானே வேலை மெனக்கெட்டு எங்கள் மில்லுக்கு வந்து லன்ச் சாப்பிடுன்னு சொல்லி என்னைக் கூப்பிட்டுக் கொண்டு வந்தீங்க.. அப்புறம் எதுக்கு பாவலா பண்றீங்க...'' என்று தலைசாய்த்து சிரித்தாள் மாலினி.

''கண்டுபிடித்துவிட்டாயே...'' என்று விளையாட்டாய் பதிலுக்குப் பேசிய பிரபாகரன்... எதிரே அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்த மாலினியை ஊன்றிக் கவனித்தான்.

அவள் பேசும்போதும் சிரிக்கும்போதும் லேசாக தலைசாய்த்து கொள்வதை அவன் கவனித்திருந்தான். சசிரேகாவிடம் பேசும்போது அவள் கண்களைச் சிமிட்டி.. தலைசாய்த்து சிரித்ததை நினைவில் வைத்திருந்தான்.

அடர்ந்த.. கரிய கூந்தலை.. சென்னை நாகரிகத்தின் படி அவள் வெட்டி விட்டிருந்தாள். சிவந்தமேனி. ஒல்லியாக இல்லாமல் லேசாக பூசினாற்போல இருந்தது. வட்ட முகத்தில்.. அழகான.. பெரிய கருவிழிகள் அம்சமாக இருந்தன. குடைபோல் அடர்ந்த முடிகளுடன் கூடிய



கவிழ்ந்த இமை. அவளது விழிகளின் அழகுக்கு அழகைச் சேர்த்தது.

குனிந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தவள்.. நிமிராமலேயே.. ''பார்வையிட்டு முடித்தாச்சா?'' என்று விசாரித்தாள்.

அவனுக்கு தூக்கிவாரிப் போட்டதுடன் சிரிப்பும் சேர்ந்து வந்தது.

'ஹா.. ஹா..' என்று சிரித்து முடித்தவன்..

''எப்படிக் கண்டுபிடித்தாய்?'' என்று கேட்டான்.

''இதைக் கண்டுபிடிப்பது என்ன பெரிய கஷ்டமான விஷயமா?'' மாலினி கைகழுவ எழுந்தாள்.

அவன் அவளை பார்த்ததை இயல்பாக எடுத்துக் கொண்டு அவள் எதிர்கொண்ட விதம் அவனைக் கவர்ந்தது.

அன்று மாலையில் காரில் வீடு திரும்பும்போது ''தேங்க்ஸ்..'' என்றான் அவன்.

''எதுக்கு?'' அவள் புரியாமல் பார்த்தாள்.

''ரொம்ப நாளாச்சு மாலினி.. நான் இப்படி மனம் விட்டு சிரித்து. வேலை.. வேலை.. வேலைதான். வீட்டுக்கு வந்தால் இங்கேயும் என்கூட சிரித்துப் பேச ஆளிருக்காது..''

''ஏன்.. காயத்ரி இருப்பாளே..''

''அவளுக்கு பெரியண்ணா என்ற பாசமும் மரியாதையும் நிறைய உண்டு. ஆனால்.. என் முன்னால் நின்று பேச மாட்டாள்..''

''தினகரன்? அவர் விளையாட்டுத்தனமானவராச்சே..''

''அது எப்படி உனக்குத் தெரியும்?''

அவன் குரல் மாறி ஒலித்தது. அவள் வாயைக் குவித்து ''ஊப்ப்..'' என்றாள்.

''என்ன?''

''ஒரு வார்த்தை மத்தவங்களைப் பத்தி நான் பேசி விடக்கூடாதே. உடனே முறைக்கிறீங்களே. என்ன சார்.. என்ன விஷயம்?''

''சாரா?'' பிரபாகரனின் முகம் விளக்கெண்ணெயை குடித்தவனைப் போல ஆனது.

''இந்த அத்தான்.. பொத்தானையெல்லாம் அப்புறமாய் பேசிக்கலாம். முதலில் நான் கேட்பதற்கு பதிலைச் சொல் லுங்கள்..''

''என்ன கேட்கப் போகிறாய்?''

''என்னை காதல் கீதல் பண்ணுகிறீங்களா?''

பிரபாகரன் வியப்புடன் அவள் முகத்தைப் பார்த்தான். அவள் குறும்பாக புருவங்களை மேலே தூக்கினாள்.

''ஏய்ய்.. மாலினி..'' பிரபாகரன் மீண்டும் சிரித்தான்.

இதுவரை அவன் வாழ்வில் இப்படி ஒரு பெண்ணை அவன் சந்தித்ததே இல்லையென்று அவன் மனதிற்குத் தோன்றியது.

மாலினி அழகானவளாகத் தெரிந்தாள். அறிவான வளாக இருந்தாள். குறும்புத்தனத்துடன் சுட்டித்தனமும் அவளிடம் இருந்தது. சிரித்துப் பேசினாள். சிரிக்கப் பேசி னாள். ஒரு பார்வையில் முகம் சிவந்தாள். இன்னொரு பார்வையை இயல்பாக எதிர்கொண்டு பரிகசித்தாள்.

கடைசியாக.. அவனைப் பார்த்து 'என்னைக் காதலிக் கிறாயா...' என்று கேட்டுச் சிரித்து வைத்தாள்.

ஒவ்வொரு தருணங்களிலும்... ஒவ்வொரு கோணங் களிலும் அவள் வெளிப்படுத்திய பரிமாணம் அவனை எங்கோ அழைத்துச் சென்றது.



இத்தனை நாளும் அவன் காத்திருந்தது இப்படியொரு பெண்ணிற்காகத்தான் என்று அவன் மனம் சொன்னது.

''என் இனிஷியல் 'ஏய்ய்..' இல்லை.. 'ஜே..'.. அது தெரியுமா.. இல்லை தெரியாதா? அதனால் என்னை 'ஏய்ய்.. மாலினி..'ன்னு கூப்பிடாமல், 'ஜே. மாலினி..'ன்னு கூப்பிடுங்க..'' அவள் அதற்கும் சிரித்தாள்.

''ம்ம்.. உன்னிடம் பேசி ஜெயிக்காமல் விட்டால் என் பெருமை என்ன ஆவது?''

''ஸோ?''

''ஆமாம். நான் உன்னைக் காதல்தான் பண்ணு கிறேன்னு நான் சொல்கிறேன்னு வை.. என்ன பதில் சொல்வதாக உத்தேசம்?''

மாலினியின் மில் வந்து விட்டிருந்தது. கார் கதவைத் திறந்து கொண்டே மாலினியும் பதில் சொன்னாள்.

''அதை ஈவினிங் நீங்க கூப்பிட வரும்போது சொல் கிறேன்.. பை...''

அவள் கையாட்டிவிட்டு மில்லுக்குச் சென்றுவிட் டாள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த பிரபாகரனின் உதடுகளில் உற்சாகப் புன்னகை வந்தது. முதல் நாள் மாலையில் இருந்து இந்த உலகமே அழகாகத்தான் மாறிப் போய்விட்டதை எண்ணி வியந்தபடி காரைத் திருப்பினான்.

*''ஒருமாலை இளவெயில் நேரம்..*
*அழகான இளவேனில் காலம்..*
*சற்றுத் தொலைவிலே..*
*அவள் முகம் பார்த்தேன்...*
*அங்கே தொலைந்தவன் நானே...''*

வாய்விட்டுப் பாடியவாறு காரை ஓட்டிக் கொண் டிருந்த பிரபாகரனுக்கு.. இது அவனேதானா என்று சந்தேகம் ஏற்பட்டது.

'இத்தனை நாளும்... இந்த உற்சாகமும் புத்துணர்வும் எங்கே போனது. என்னால் இப்படிப் பேசிச் சிரிக்க முடியும் என்பது எனக்கே.. இப்போதுதானே தெரிகிறது? வேலை யின் பளுவைத் தாங்க முடியாமல் மூச்சுத் திணறித் திணறி கடுமையான முகமூடியின் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தேனே.. என்னை மீட்கவென்று வந்த தேவதை யா.. இவள்?'

அவன் மனக்கண்ணில்... பூவாய் மலர்ந்த சிரிப்பும் மாசு மருவற்ற பால் போன்ற முகத்துடன் மாலினி தெரிந் தாள்.

'பார்க்கலாம்.. ஈவினிங் என்ன பதிலைச் சொல்கிறாள் என்று..'

பம்பரமாய் சுழன்று வேலை பார்த்து.. வேலையும் வாங்கும் முதலாளி.. இன்றைக்கு நிதானமாக நடை பழகி வேலை சொல்லிக் கொண்டிருந்ததை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள் வேலையாட்கள்.

மாலையில்.. மாலினியின் மில்லின் முன்னால் மன மெல்லாம் ஓர் எதிர்பார்ப்புடன் காத்திருந்தான் பிரபாகரன்.

தூரத்தில் தெரிந்த மாலினியின் முகத்தையே பருகு வதைப் போல அவன் பார்த்துக் கொண்டிருக்க.. காரில் ஏறி அவனருகே அமர்ந்தவள்.. கைகளை அவன் முன்னால் ஆட்டிச் சிரித்தாள்.

''என்ன ஆச்சு.. மார்த்தாண்டபுரத்தின் மகாராஜா.. அந்திவேளையில் ஆனந்தமாய் கனவு கண்டுகொண் டிருக்கிறாரா?''

பிரபாகரன்.. லேசான புன்னகையுடன் காரைக் கிளப்பி மெதுவாக ஓட்டினான்.

''நீ செந்தமிழ்நாட்டின் தமிழச்சின்னு எனக்குத் தெரியும்.. அதுக்காக இப்படி எதுகை மோனையோடு தமிழ் பேசி என்னைக் கலங்கடிக்க வேண்டாம்..''

''தமிழைப் பற்றியெல்லாம் நீங்கள் பேசவே கூடாது..''

''ஏன்.. ஏன்.. ஏன்?''

''*எதற்கு இத்தனை.. 'ஏன்..'?*''

''உன் சென்னைத் தமிழைப் பற்றி எனக்குத் தெரி யாதா? இன்னாம்மே.. கயிதே.. கசுமாலம்.. லொட்டு.. லொசுக்குன்னு.. அங்கே பிறந்து.. வளர்ந்தவள்னு பெருமை யடிச்சுக்கிட்டு.. நீ என்னைத் தமிழ்ப் பேசக்கூடாதுன்னு சொல்றயா?''

''தோடா... இவர் பெரிதாக சென்னைத் தமிழைப் பற்றிச் சொல்ல வந்துட்டார்.. அது சிங்காரத் தமிழாக்கும்..''

''சிங்கார சென்னைன்னு நான் கேள்விப்பட்டிருக் கிறேன். இப்போது உன் புண்ணியத்தால்தான் சிங்காரத் தமிழைப் பற்றிக் கேள்விப்படுகிறேன். அதுசரி.. உன் சிங்காரத் தமிழைவிட எங்கள் தமிழ் எந்த வகையில் குறைந்து போய்விட்டது?''

''நீங்கள் பேசுவது தமிழா? அதை மலையாளம்னு தான் சொல்லணும்..''

''கேரளா பார்டரில் இருக்கிறோம்.. எங்கள் பேச்சு கொஞ்சம் மலையாள வாடை கலந்துதான் இருக்கும். பட்.. எங்க வீட்டில் யாரும் அப்படிப் பேச மாட்டோமே.. சுத்தத் தமிழில்தானே பேசுவோம்..''

''இது ஒரு பெருமையாக்கும்..''

''இல்லையாக்கும்..''

அந்தி நேரத்துக் காற்றில்.. அலை பாயும் முடியை லேசாக ஒதுக்கிவிட்ட வண்ணம் அவளுடன் சரிக்குச்

சரியாய் வம்பிழுத்து விளையாட்டாய் பேசிக் கொண்டு காரை ஓட்டிக் கொண்டிருந்தவனைப் பார்த்தபோது.. அவளுள் ஏதோ ஒரு மாற்றம் நிகழ்ந்தது.

அந்தச் சுற்று வட்டாரமே முழுப் பெயரையும் சொல்லாமல் மரியாதையுடன் 'கே.பி..' என்று சொல்லும் ஒருவன்... அவனருகே நின்று பேச.. ஒரு சிறிய வாய்ப்புக் கிடைக்காதா என்று பல உயர்மட்ட ஆண்களை ஏங்க வைக்கும் ஒருவன்.. பெற்ற தாய்கூட எதிரே நின்று பேச யோசிக்கும் தன்மை கொண்ட ஒருவன்... கண்டிப்புக்கும் கறார் தன்மைக்கும் பெயர் பெற்ற ஒருவன்... தந்தையை மிஞ்சிய பெருமை கொண்ட ஒருவன்.. தன் குடும்பத்திற்கு ஆணிவேரைப் போன்ற ஒருவன்.. எங்கும் எதிலும் முதன்மையான அந்தஸ்தைப் பெற்ற ஒருவன்.. அவளுக்காக காரை ஓட்டியபடி அவளுடன் சரிசமமாக சிரித்துப் பேசிக் கொண்டிருந்ததை உணர்ந்தவளுக்கு பிரமிப்பாக இருந்தது.

அவன் யார்.. இவள் யார்? இருவருக்கும் இடையே உள்ள பந்தம்தான் என்ன? அப்படியொன்றும் நெருங்கிய சொந்தமில்லையே.

அவளுடைய தூரத்துச் சொந்தக்கார பெரியப்பாவின் மகளை அவனுடைய தம்பி காதல் திருமணம் பண்ணிக் கொண்டிருக்கிறான்.

சுற்றி வளைத்து மூக்கைத் தொடும் இந்த சொந்தத்தில் அவன் எப்படி அவளுக்கு அத்தானாக மாறினான் என்பது அவளுக்கு இப்போதும் ஆச்சரியத்தைத் தந்தது.

சசிரேகா உருவகித்த விதத்தில் அவனை ஹிட்லராக நினைத்துக் கொண்டிருந்தவளுக்கு அவனது இந்த இன்னொரு கலகலப்பான முகம் எதிர்பாராத ஒன்றாக இருந்தது.



அவன்.. அவள் விரும்பிய வகையில் மிக கம்பீரமான முழுமையான ஆண்மகனாக இருந்தான். அதுவரை ஆண்களின் முகம் பார்த்து விழி பார்த்துப் பேசும்.. நேர்கொண்ட பார்வையுடன் கூடிய நிமிர்வான மாலினி.. முதன்முறையாக ஒரு ஆண்மகனைப் பார்த்து வெட்கி முகம் சிவந்து விழி தாழ்த்தினாள் என்றால்.. அது பிரபாகரனைப் பார்த்துதான்.



*நீ பார்க்கும் பார்வை...*
*என் நிழலாகும் விதத்தை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

"இப்போது பதில் சொல்?" என்றான் பிரபாகரன்.

இவன் எதைப் பற்றிச் சொல்லச் சொல்கிறான் என்ற நினைவுடன் புரியாமல் அவனைப் பார்த்தாள் மாலினி.

"என்ன பதிலைச் சொல்லச் சொல்கிறீங்க.. எதற்கு பதிலைச் சொல்ல சொல்கிறீங்க?"

"என்னவோ ஆண்கள்தான் மறதியில் எக்ஸ்பெர்ட்.. பெண்களை மறந்துவிடுவாங்கன்னு சொல்லுவாங்க. நீ பிளேட்டையே மாத்திப் போடுகிறாயே.."

"என்னத்தை மாத்தி யோசிச்சேன்?"

அவள் குழம்பிப் போனவளாக விழிக்க.. அவன் விஷமச் சிரிப்புடன் எடுத்துக் கொடுத்தான்.

"மதியம்.. யாரோ என்னைக் காதல் பண்றீங்களான்னு கேட்ட நினைவு அதுக்கு நானும் காதல் பண்ணுவதாக வைத்துக் கொண்டால் அதுக்கு அவங்க என்ன பதில் சொல்வாங்கன்னு கேட்டதாக நினைவு.."

இப்போது நினைவுக்கு வந்துவிட.. அவள் முகம் சிவந்தாள். அவன் மேலும் சீண்டினான்.

''என்ன மேடம்.. பதிலைக் காணோம்..''

''மேடமா.. நானா.. உங்களுக்கா?''

''ஹ... பேச்சை மாற்றாதே.. பதிலை சொல்லு?''

'விட மாட்டேன்கிறானே..' மாலினி நகம் கடித்தாள்.

''நகம் கடிக்காதே.. அது மோசமான பழக்கம்..''

''என் நகம்.. நான் கடிக்கிறேன்..''

''ஊஹூம்.. அந்தப் பேச்செல்லாம் என்னிடம் செல்லாது. முதலில் கையை ஒழுங்காக வைத்துக் கொண்டு உட்காரு. இன்னொரு தடவை என் முன்னால் நகம் கடித்தேன்னு வை.. அடி விழும்..''

மாலினி.. அவசரமாக கைகளைக் கோத்துக் கொண்டு நேராக உட்கார்ந்து அவனை முறைத்தாள்.

''இது என்ன பெரிய அராஜகமாக இருக்கிறது. மிலிடிரி கண்டிஷனையெல்லாம் என்கிட்ட போட்டால் எப்படி?''

''நான்தான் ஹிட்லராச்சே.. இப்படித்தான் இருப்பேன். இந்தப் பெயரை எனக்கு வைத்தவள் நீதானே. ஹிட்லரின் கண்டிஷன் எப்படியிருக்கும்னு உனக்குத் தெரியாதா?''

''அடேங்கப்பா.. பெரிய பெருமைதான்..''

''அந்தப் பெருமையை விடு. முதலில் என் கேள்விக்குப் பதிலைச் சொல்லு?''

திரும்பவும் நகம் கடிக்க வேண்டிய நிலைமைக்கு ஆளான மாலினி.. கையை வாயருகே கொண்டு போன போது அவன் பார்வை அதட்டியதைக் கண்டு அவசரமாய் கையை மீண்டும் கோத்துக் கொண்டாள்.



''நீ சொல் பேச்சே கேட்கமாட்டியா?''

''இப்படி என்னை டென்ஷனாக்கினால் நான் என்ன செய்வதாம்?''

''எதுக்கு டென்ஷன்.. கேள்வி கேட்க தைரியமிருந்தவளுக்கு பதில் சொல்லத் தைரியமில்லையா?''

பிரபாகரன் காரின் வேகத்தை இன்னும் குறைக்கவும்... மாலினி அவன் பக்கம் திரும்பினாள்.

''ரோட்டில் நடந்து போகிறவனெல்லாம் நம்மை ஓவர்டேக் பண்ணிவிட்டுப் போகிறான். இப்படியா காரை ஓட்டுவீங்க. உங்கள் பில்ட் அப்பைப் பார்த்தால் சோழாவரம் கார் ரேஸில் ஃபர்ஸ்ட் பிரைஸ் வாங்குகிறவர்ன்னு இல்ல நான் நினைச்சேன்...''

பிரபாகரன் இப்போது காரை நிறுத்தியே விட்டான்.

''ஏன்.. உங்க வீட்டுக்கு என்னைக் கூப்பிட்டுக் கொண்டு போகும் எண்ணமே இல்லையா?''

''சோழவரம் ரேஸில் கலந்துக்கிறதைப் போல நான் காரை ஓட்டினேன்னு வை.. ஒரே நிமிஷத்தில் நாம் வீட்டிலிருப்போம்...''

''செய்ய வேண்டியதுதானே.. யார் உங்க கையைப் பிடித்தது?''

அவளுடைய பேச்சினால் பிரபாகரன் கவரப்பட.. கீழ் உதட்டை மேல் பல்லால் கடித்தபடி ஒரு மார்க்கமாக அவளைப் பார்த்தான். அவனது பார்வை அவளை என்னவோ செய்தது.

'இவன் ஒருத்தன்.. வாயைத் திறந்து இவனிடம் ஒரு வார்த்தை அதிகமாக பேசித் தொலைத்துவிடக்கூடாது. உடனே 'சைட்' அடிக்க ஆரம்பித்து விடுவான். எனக்கு

''தெரியாத்தனமாய் வாய் விட்டுவிட்டால் அதைப் போய் நீங்க பெரிது பண்ணலாமா?''

''நீயா தெரியாமல் பேசுகிறவள்?''

''உங்களைப் பற்றித் தெரியாமல் பேசிவிட்டேன்.. போதுமா.. இப்பவாவது காரை எடுக்கறீங்களா?''

''அப்ப.. நீ பதில் சொல்ல மாட்டாய்...''

''அதுதான் சமாதானத்திற்கு வந்துவிட்டேனே... அப்புறமும் எதுக்கு வம்பு?''

''நல்லாயிருக்கே கதை.. நீதானே.. காதல் பண்றீங் களான்னு கேட்டாய். நான் அதுக்கு பதிலைச் சொன் னேனா... இல்லையா? நீ மட்டும் ஜகா வாங்கினால் என்ன அர்த்தம்? எனக்கு அதெல்லாம் தெரியாது.. நீ பதிலைச் சொல்லு..''

இவன் ஓட ஓட விரட்டினான்.. அவள் ஓடிக் கொண் டேயிருக்க வேண்டுமா?

சட்டென்று அவன் பக்கம் பார்த்த மாலினி புருவத்தை கித்தாய்ப்பாக உயர்த்தினாள். அவன் கண்கள் மின்னின.

''இதுக்கெல்லாம் பதில் சொல்ல முடியாது ஹிட்லர் சார்.. நீங்க என்ன சொன்னீங்க... 'நான் காதலிக்கிறேன்னு வை..'ன்னு சொன்னீங்க.. அப்படி உத்தேசமாய் சொல்லுவ தற்கெல்லாம் நான் என் உத்தேசத்தை சொல்லிவிட முடியாது...''

''ஊஹூம்.. ஓகே.. நான் உன் வழிக்கே வருகிறேன்..''

''வந்துதானே ஆகணும்..''

''நான் உன்னைக் காதலிக்கிறேன்.. இப்ப இதுக்கு என்ன பதிலைச் சொல்லுவாய்?''



''ஊம்.. கண்டதும் காதல் வந்துவிடுமா?''

''வந்துவிட்டதுன்னு வைத்துக் கொள்ளேன்..''

''நீங்கள் ராஜ பரம்பரையில் பிறந்தவர்ங்கிறதை அப்பப்போ நினைவுபடுத்திக் கொண்டால் தேவலை...''

''எதுக்காக?''

''சும்மா.. சும்மா.. வைத்துக் கொள்வதைப் பற்றியே பேசுகிறீங்களே..''

''ஏய்ய்...''

பிரபாகரன் வாய்விட்டுக் கடகடவென்று சிரித்தான்.

''எப்படித்தான் இப்படிப் பேசுகிறாயோ மாலினி...''

''அதுசரி ஹிட்லர் சார்.. உங்கள் கேள்விக்குப் பதிலைச் சொல்லவா.. வேண்டாமா?''

''சொல்லு.. சொல்லு.. அதைப் போய் வேண்டா முன்னு நான் சொல்லுவேனா?''

''இந்தக் கண்டதும் காதல் வருவதில் எல்லாம் எனக்கு நம்பிக்கையில்லை ஹிட்லர் சார்.. அப்படி நம்பிக்கை வரும்போது.. இதுக்கு பதிலைச் சொல்கிறேன்.. போதுமா?''

''போதாதுன்னு நான் சொன்னால் ஆஹான்னு கேட்டுக்கவா போகிறாய்..''

பிரபாகரன் கேலியாகக் கூறிய வண்ணம் காரைக் கிளப்பினான்.

''ஆக மொத்தம் இது ஒண்ணைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறீங்க..''

''எதை?''

''ஏதாச்சும்.. நீங்க கார்னர் பண்ணணும்னு நினைச்சா காரை நிறுத்திவிட்டு என்னை அலற வைக்கறீங்களே..

அதைத்தான் சொல்கிறேன். உங்களை நம்பி.. உங்கள் பின்னால் வந்திருக்கிறேன் என்ற எண்ணம் கொஞ்சமாவது உங்களுக்கு இருந்தால் இப்படி பிளாக்மெயில் பண்ணு வீங்களா..''

'இவள் சொல்வதைப் புரிந்துதான் சொல்கிறாளா?' பிரபாகரனின் இதழ்களில் புன்னகை தெரிந்தது.

''ஏன்.. எதுக்குச் சிரிக்கறீங்க?'' அவள் பாய்ந்தாள்.

''எப்படியோ.. நீ என்னை நம்பி.. என் பின்னால் வந்திருக்கிறாய் என்பதை உன் வாயாலேயே ஒப்புக்கொண் டாயே.. அதுவே பெரிய விஷயம்..''

அப்போதுதான் தான் சொன்னதன் பொருளைப் புரிந்துகொண்ட மாலினி.. வாய் பொத்திச் சிரித்தாள்.

''நீங்க இன்னிக்கு காலையில் மில் வாசலில் வைத்து என்னிடம் இதே வார்த்தையைச் சொன்னீங்க இல்லையா?''

''இந்த 'வைத்து' என்கிறதை கொஞ்சம் அவாய்ட் பண்ணேன்..''

''அதில் உங்களுக்கென்ன அலர்ஜி?''

''ஏன் சொல்ல மாட்டாய்.. இப்போது நீ யாரோ.. நான் யாரோன்னு இருக்கோம். ஈஸியாக எதுக்கெடுத்தாலும் 'வைத்து..'ன்னு பேசி வைப்பாய். இதுவே நாம் நீ வேறோ நான் வேறோன்னு ஒண்ணுமண்ணாய் ஆகிவிட்டோமுன்னு வை. அப்போ பேசி வைப்பாயா?''

அவளைச் சொல்லிவிட்டு அவன்.. 'வை..' என்று சொல்லிவைக்க... அதை உணர்த்தும் விதத்தில் அவள் கலகலவென்று சிரித்தாள். அதை உணர்ந்தவனாய் அவனும் கூடச் சேர்ந்து சிரித்தான்.





*சாரலென உன் நினைவு வந்து..*
*தூறலாக என் மனதை நினைத்ததை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

**ஸ்**வேதா... கடுப்புடன் மாடி பால்கனியில் நின்று பார்த்துக் கொண்டிருந்தாள். பிரபாகரனின் கார் வீட்டுக் காம்பவுண்டிற்குள் நுழைந்து கொண்டிருந்தது.

'அந்த மாய்மாலக் கள்ளியும் கூட வருகிறாளா..' ஸ்வேதா கொதிப்புடன் வந்து எட்டிப் பார்த்தாள்.

ஸ்வேதாவினால் 'மாய்மாலக் கள்ளி..' என்று அழைக்கப் பட்ட மாலினி.. பிரபாகரனுடன் சிரித்துப் பேசியவாறு இறங்கினாள்.

''வந்து ஒரு நாள்தான் ஆகுது.. அதுக்குள்ள இந்த பிரபாகரனை கைக்குள் போட்டுக் கொண்டாளே.. நானும் இத்தனை வருஷமா என்னென்னவோ செய்து பார்க்கிறேன்.. இவன் அசைய மாட்டேன்னு முறைத்தானே. இப்போது இவள்கூட பல்லைக் காட்டிக் கொண்டு வருகிறானே. அப்படி.. எந்த வகையில் இவள் என்னைவிட உயர்த்தி?''

அவளுக்கு உடம்பெல்லாம் எரிந்தது. கீழே பிரபாகரனுடன் இணைந்து கதை பேசியபடி நடந்து வந்த மாலினி.. தற்செயலாக மேலே பார்வையை உயர்த்தி ஸ்வேதா நின்றுகொண்டிருப்பதை பார்த்துவிட்டாள்.

சரேலென்று பால்கனியிலிருந்து மாடி ஹாலுக்குள் சென்றுவிட்ட ஸ்வேதாவின் நெஞ்சம் படபடத்தது.

'கண்டு கொண்டாளே..'

மாலினியின் பார்வையில் தென்பட்டுவிட்டோமே என்று ஸ்வேதாவிற்கு அவமானமாக இருந்தது.

'அவள் என்னைப் பற்றி என்ன நினைத்துக் கொள் வாள்? என் வசதிக்கும்.. தகுதிக்கும் அவள் இணையா வாளா? அவள் பிரபாகரனுடன் பழகுவதைப் பார்த்து நான் பொறாமைப்படுகிறேன் என்று நினைத்துக் கொள்ள மாட் டாளா?'

தான் பொறாமைதான் பட்டோம் என்று ஸ்வேதாவின் உள்மனதிற்கு நன்றாகவே தெரியும். இருந்தும்.. அவள் அலட்டிக் கொண்டாள்.

பிரபாகரன்.. நர்மதாவுடன் பேசியபடி நின்றுவிட.. மாலினி ஓர் விடுதலை உணர்வுடன் மாடிப்படிகளில் ஏறினாள்.

''காற்று பலமாக அடித்தால் காகிதம்கூடப் பறந்து கோபுரத்தில் ஒட்டிக் கொள்ளும்..'' என்ற குரல் கேட்டது.

என்னடா இது.. அசரீரீ போல இருக்கிறது என்று மாலினி சுற்றுமுற்றும் பார்த்தாள்.

ஸ்வேதா.. மாடிப்படிகளின் உச்சியில் நின்றுகொண் டிருந்தாள்.

'இவள்தானா..' மாலினி அவளைக் கண்டுகொள் ளாமல் படியேறுவதைத் தொடர்ந்தாள்.

''ஏய்.. நில்லு..'' என்றாள் ஸ்வேதா.

''ஏய்ன்னு கூப்பிடாதே...'' சீறினாள் மாலினி.

''கூப்பிட்டால் என்ன செய்வாய்?''

''பல்லை உடைப்பேன்..''

''என்ன சொன்னாய்?''



ஸ்வேதாவிற்கு ஆத்திரத்தில் பேச்சு மறந்துபோக... மாலினி வெறுப்புடன் அவளை முறைத்தபடி நகரப் போனாள்.

''யார் பல்லை யார் உடைப்பது?'' ஸ்வேதாவிற்கு பேச்சு வந்துவிட்டது.

''உன் பல்லை நான் உடைப்பேன்..'' தைரியமாக பதில் சொன்னாள் மாலினி.

''அத்தையிடம் சொல்லவா?''

''வா.. சொல்லலாம்.. நேற்று ராத்திரி என்னை நீ மிரட்டியதிலிருந்து இப்போது கோபுரத்தில் காகிதம் போய் ஒட்டிக்கொண்ட கதை வரை சொல்லலாம். அவங்க இதற்கு ஒரு முடிவைக் கட்டட்டும்..''

மாலினி திரும்பவும் படிகளில் இறங்க முயல.. ஸ்வேதா அவசரமாகப் பின்வாங்கினாள்.

''என்ன.. கீழே வருகிறாயா?''

மாலினி களைத்திருந்தாள். உடை மாற்றிவிட்டு சற்று நேரம் ஓய்வெடுக்க நினைத்து மாடிக்கு வந்தவளை அதற்கு விடாமல் வழிமறித்து வம்பிழுத்துக் கொண்டிருந்தாள் ஸ்வேதா.. அவளுடன் வார்த்தையாடும் மனநிலையில் மாலினி இல்லை. எதைச் சொன்னால் ஸ்வேதா ஓடுவாளோ அதைச் சொன்னாள் மாலினி. ஸ்வேதா ஓடிவிட்டாள்.

'இவளோடு பெரிய ரோதனையாப் போச்சு..'

அறைக்குச் சென்று குளித்து உடை மாற்றி சற்று நேரம் படுத்திருந்த பின் களைப்பு நீங்கியவளாக எழுந்து தலை வார ஆரம்பித்தாள். அறைக்கதவு தட்டப்பட்டது.

'செந்தாமரையாக இருக்கும்..' என்ற நினைவுடன் கதவைத் திறந்தாள்.

''என்னங்கம்மா.. வேலைக்குப் போயிட்டு வந்துட்டீங் களா..'' வாயெல்லாம் பல்லாக செந்தாமரைதான் நின்று கொண்டிருந்தாள்..

''அம்மான்னு சொன்னால்.. உன் கூட டூ விட்டு விடுவேன் செந்தாமரை...''

''ஐயையோ.. அப்படியெல்லாம் செய்துராதீங்கம்மா.. நீங்க பேச மாட்டேன்னு சொன்னா.. என் கதி என்னாகும்?''

''அப்போ.. என்னை எப்படிக் கூப்பிடுவ?''

''மாலினியம்மா..''

''குட்.. கையிலிருக்கிற காபி.. டிபனை கொடுக்கும் உத்தேசம் இருக்கா.. இல்லையா?''

''ஐயையோ.. இது உங்களுக்குத்தான் மாலினியம்மா..''

*''எனக்கே..*
*எனக்கா..*
*இந்த காபி.. டிபன்..*
*எனக்கே... எனக்கா...?''*

மாலினி பாடியவாறு வாங்கிக் கொள்ள.. செந்தாமரை சிரித்துக்கொண்டே மாலினியின் அறையை விட்டு வெளி யேறினாள். கோபாவேசத்துடன் மாடி ஹாலில் நின்று கொண்டிருந்த ஸ்வேதாவைக் கவனிக்காமல் மாடிப்படி களில் இறங்க முற்பட்டாள்..

'அந்த மாலினி வந்த பின்னால்.. வேலைக்காரிக் குக்கூட என் மேல் அலட்சியம்..' ஸ்வேதா மனதிற்குள் பொங்கினாள்.

''செந்தாமரை..''

அதட்டலாக ஸ்வேதா அழைக்கவும்...



''அம்மா?'' என்று பதறித் திரும்பிப் பார்த்தாள் செந்தாமரை.

''எங்கே போய்விட்டு வருகிற?''

''நம்ம மாலினியம்மாவிற்கு காபி.. டிபன் கொடுத்து விட்டு வருகிறேன்ம்மா..''

''ஏன்? மகாராணிக்கு ரூமில் போய்த்தான் காபி டிபனை கொடுக்கணுமா.. அவள் கீழே வந்து கொட்டிக் கொள்ள மாட்டாளா?''

''மாட்டாங்களாம்..''

''அவள் அப்படிச் சொன்னாளா?''

''ஊஹூம்.. நம்ம பெரியம்மா அப்படிச் சொல்லி யிருக்கிறாங்க..''

நர்மதாவைப் பற்றிக் கேட்டதும் ஸ்வேதா சட்டென்று அந்தப் பேச்சை விட்டுவிட்டு வேறு பேச்சிற்குத் தாவி னாள்.

''எதுக்கு சிரிச்சுக்கிட்டு வருகிற?''

''இது ஒரு குத்தமா?'' செந்தாமரை எரிச்சல் பட்டாள்.

''மாலினியம்மாகூட ஒரு வார்த்தை பேசினாலும் அவங்க சிரிக்க வைச்சிருவாங்கம்மா...''

''எனக்கு அவளைப் பார்த்தால் அப்படித் தோன்ற வில்லையே.. அவகூட ஒரு வார்த்தை பேசினாலும்.. அவள் கழுத்தைப் பிடித்து நெரிக்கத்தானே தோன்றுகிறது...''

'நீ மனிதப் பிறவியாக இருந்தால்தானே..' செந்தாமரை நினைத்ததை சொல்லாமல் நின்றாள்.

''சரி.. போ..''

ஸ்வேதா உத்தரவிடுவதைப் போலச் சொன்னாள். மாலினியின் இயல்பாகப் பேசிப் பழகும் குணத்தையும் ஸ்வேதாவின் அதிகாரத் தோரணையையும் ஒப்பிட்டபடி செந்தாமரை கீழே இறங்கிப் போய்விட்டாள்..

ஸ்வேதாவிற்கு அந்த வீட்டில் வேலை செய்கிறவர்களை அதட்ட மிகவும் பிடிக்கும். அதன் மூலம் தானும் அந்த வீட்டில் ஒருத்தி. அந்த வீட்டின் வருங்கால மருமகள் என்று நிலைநாட்டிக் கொள்ள முனைவாள். ஆனால், வேலையாள்கள் அதை விரும்ப மாட்டார்கள். மனதிற்குள் எரிச்சல்பட்டபடி வெளியே காட்டிக்கொள்ளாமல் அவள் சொன்னதைச் செய்வார்கள். தங்களுக்குள் பேசிக்கொள்ளும்போது தாழ்ந்த குரலில் ஸ்வேதாவின் அராஜகத்தைப் பற்றிப் பேசுவார்கள்.

''இந்தம்மா இப்பவே இந்தப் பாடுபடுத்துதே. நிஜமாவே இந்த வீட்டுக்கு மருமகளா வந்துட்டா.. நம்ம பாடு என்னாகுமோ..''

''என்னாகுமோ.. அதோகதிதான். பொழுது விடிஞ்சு பொழுது சாயறவரைக்கும் எண்ணெய்ச் சட்டியில் அப்பளமாய் பொரிய வேண்டியதுதான்..''

வேலையாள்களை... அவள் அந்த வீட்டின் மருமகளாக வந்துவிடுவாளோ என்ற கவலையில் ஆழ்த்தும் ஸ்வேதாவை கவலையில் ஆழ்த்தவென்று மாலினி வந்துவிட்டாள்.

மாலினியின் இயற்கையான அழகையும் இயல்பான பேச்சையும் அவளின் வசீகரம் கலந்த பெண்மையின் நளினத்தையும் பார்க்கும்போது ஸ்வேதா மிகுந்த கவலைக்கு உள்ளானாள்.

அதுவும்.. அவள் வளைக்கப் பார்த்து.. வளைக்க முடியாத தினகரனும் பிரபாகரனும் போட்டி போட்டுக் கொண்டு மாலினியுடன் பழக விருப்பம் காண்பித்ததும் அவள் இடிந்தே போனாள்.



'எப்படி இவளை இந்த வீட்டை விட்டு விரட்டுவது?'

இரண்டு நாள்களாக இந்த கவலை ஒன்றே ஸ்வேதாவின் மனதை அரித்துக் கொண்டிருந்தது.

எரிகிற தீயில் எண்ணெயை ஊற்றுவதைப் போல அன்று இரவு உணவு வேளையின்போது மாலினியின் பேச்சை ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்த காயத்ரி.

''மாலினி.. யூ ஆர் ஸோ ஸ்மார்ட்..'' என்று சொல்லி வைத்ததும்.. பிரபாகரனின் பார்வையும் தினகரனின் பார்வையும் ஒரே நேரத்தில் மாலினியின் மேல் படிந்தது.

அதைக் கவனிப்பதைவிட ஸ்வேதாவிற்கு வேறு என்ன வேலை இருக்கப் போகிறது?

எப்போதுமே நர்மதாவின் வீட்டுச் சாப்பாடு அவளுக்கு மிகவும் பிடிக்கும். அவள் வீட்டில்.. எல்லோரும் பண்ணும் அழிச்சாட்டியத்தில் மாதத்திற்கு ஒரு சமையல் ஆள் வருவார்கள். அவர்கள் செய்து வைக்கும் சமையலை வாயில் வைக்க முடியாது.

நர்மதாவின் வீட்டில் நீண்ட வருடங்களாக ஒரே சமையல் ஆள்தான். அவள் பெயரே அன்னபூரணி. பெயருக்கேற்றாற் போல் அவள் சமையலில் ருசி மணக்கும். வாயில் போடும் கவளம் கரைந்து உள்ளே போகும்.

அப்படிப்பட்ட சாப்பாட்டின் மீதுகூட அவளுக்கு ஆர்வம் குறைந்திருந்தது. எந்த நேரத்தில்.. யார் பார்வை மாலினியின் மீது விழுமோ என்று அடிவயிறு கலங்க அவள் பதற்றத்துடன் அமர்ந்திருந்தாள்.

தினகரன்.. மாலினியின் முகத்தைப் பார்த்தபடி காயத்ரியிடம்..

''நீ ரொம்ப லேட் காயூ..'' என்றான்.

''எதில் லேட்.. சின்ன அண்ணா?'' காயத்ரி புரியாமல் வினவினாள்.

''மாலினி ஸ்மார்ட்னு புரிந்துகொள்வதில்.. நான் அவங்களைப் பார்த்த முதல் செகண்டிலேயே புரிந்து கொண்டு விட்டேனாக்கும்..''

தினகரன்.. மாலினியின் முகம் நிமிராதா.. அவளுடைய பார்வையைச் சந்திக்க முடியாதா என்ற தாபத்துடன் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டிருக்க.. அவள் நிமிர்ந்து பிரபாகரனின் முகத்தைப் பார்த்தாள்..

அவள் பயந்தபடியே அவன் முகச் சுளிப்புடன் அவள் முகம் பார்க்காமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். மாலினி என்னவோ தான் குற்றம் செய்துவிட்டதைப் போல தவித்துப் போனாள்.

அந்த மூவரின் பார்வைகள் போகும் திசைகளையும் அவர்களின் முகபாவங்களையும் கவனித்துக் கொண்டிருந்த ஸ்வேதாவிற்கு அவர்களுடன் விளையாடிப் பார்க்க ஒரு வழி தென்பட்டு விட்டது.



*உனை மட்டும் என்மனது...*
*தினம் நினைக்கும் நினைவை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

தினகரன் ஆசையுடன் மாலினியைப் பார்த்தான். மாலினியோ அவனைப் பார்க்காமல் ஒருவித பயத்துடன் பிரபாகரனைப் பார்த்தாள். பிரபாகரனோ அவளை நிமிர்ந்து



பார்க்காமல் கோப முகத்துடன் வேறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தான்.

'வாரேஹ் வா! முக்கோணக் காதல் கதை உருவாகுதா.. எனக்கு இது போதுமே. ஒன்று... இந்த இரண்டு தடியன்களில் ஒரு தடியனுக்கு நான் கழுத்தை நீட்ட வேண்டும். இல்லாவிட்டால்.. இந்த இரண்டு தடியன்களுக்குமே இந்த மாலினி பிசாசு இணங்கக் கூடாது...' ஸ்வேதா மனதிற்குள் கறுவிக் கொண்டாள்.

பிரபாகரனின் கடுமை மனதைப் பாதித்ததால்.. மாலினி சஞ்சலத்துடன் தோட்டத்துப் பக்கமாய் போனாள். சசிரேகா, மாலினியைத் தேடி அங்கே வந்தாள்.

''என்னடி.. இங்கே என்ன பண்ணிக்கிட்டு இருக்கே..''

''ஜஸ்ட் ரிலாக்ஸ். வேறு ஒன்றுமில்லை. சசி.. உன் வீட்டில் இருக்கும் மனிதர்களைவிட.. இந்தத் தோட்டம் ரொம்பக் குளுமையாக இருக்கிறது...''

சசிரேகா பயந்துபோனவளாய் அவசரமாய் சுற்று முற்றும் பார்த்தாள்.

''என்னடி.. இப்படிப் பார்க்கிற.. இருட்டைப் பார்த்து பயமா?''

''இல்லைடி இவளே.. உன்னைப் பார்த்துதான் பயம்..''

''என்னைப் பார்த்து அந்த ஸ்வேதா பயப்பட்டால் அதில் ஒரு நியாயம் இருக்கிறது. நீ பயந்தால் நான் என்னத்தைச் சொல்ல?''

''ஒன்றையும் சொல்ல வேண்டாம். நீ சென்னையிலிருந்து வரும்போது ஒரு முடிவோடதான் கிளம்பி வந்தாயா?''

''என்ன முடிவு?''

''என்னை இந்த வீட்டை விட்டுக் கிளப்பும் முடிவு தான்..''

''அடிப்பாவி.. எனக்கு இருக்க இடம் கொடுத்து சொல்லிக் கொள்ள சொந்தங்களையும் கொடுத்த புண்ணியவதி நீ.. உனக்குப் போய் நான் கெடுதல் நினைப் பேனா.. அந்த ஸ்வேதாவிற்கே கெடுதல் நினைக்காத மனுஷிடி நான். என்னைப் பார்த்து இப்படி ஒரு வார்த்தை யைச் சொல்லிவிட்டாயே.. என் மனசு இதைத் தாங்குமா?''

''எல்லாம் தாங்கும். உனக்கு வைரம் பாய்ந்த மனசு..''

''ம்ஹூம்.. என் அம்மா.. பூப்போல மனசுன்னு அடிக்கடி என்னைப் பார்த்துச் சொல்வாங்க..''

''காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு...''

''அப்படின்னா.. என் அம்மாவை நீ காக்கைன்னு சொல்கிற. இரு.. இன்றைக்கு நைட் அம்மாவிடம் பேசும் போது மறக்காமல் இதைப் போட்டுக் கொடுக்கிறேன்..''

''நீ கொளுத்திப் போடுவதிலேயே குறியாக இரு..''

''இதுக்கு முன்னால எதைக் கொளுத்திப் போட் டேன்?''

''ஏண்டி.. பகலில் பக்கம் பார்த்துப் பேசு.. ராத்திரி யில் அதையும் பேசாதேன்னு ஒரு பழமொழி இருக்கா இல்லையா?''

''அதையேன் இப்போ சொல்கிற..''

''நீபாட்டுக்கு என் வீட்டு மனிதர்களைப் பத்தி இப்படி வியாக்கியானம் பேசுகிறாயே.. யார் காதிலாவது விழுந்து வைத்துவிட்டால் என்ன ஆகும்?''

''பெரிதாய் ஒன்றும் ஆகாது. நான் லேடீஸ் ஹாஸ்ட லில் இடம் தேடிக் கொள்ள வேண்டியிருக்கும். நானும்



சந்தோஷமாய் ஸ்வேதாவிடமிருந்து தப்பித்து அங்கே ஓடிவிடுவேன்..''

''நீ உன்னைப் பற்றியே நினை. என்னைப் பற்றிக் கொஞ்சம்கூடக் கவலைப்படாதே..''

''உனக்கென்னடி.. நீ இந்த வீட்டின் சின்ன ராணி...''

''உனக்கு பெரியப்பா மகளாக பிறந்த பின்னால்.. இந்த சின்ன ராணிப் பட்டம் நிலைக்குமாடி மாலினி...''

சசிரேகா பரிதாபமாக இதைக் கேட்ட விதத்தில் மாலினி மனக்கவலையை மறந்து சிரித்து விட்டாள்.

''ஏண்டி... இவ்வளவு கவலைப்படுகிற?''

''நீ கொஞ்சம் அடக்கி வாசித்தால் நான் ஏன் கவலைப் படப் போகிறேன்?''

மாலினியுடன் பேசிக்கொண்டே வீட்டைத் திரும்பிப் பார்த்த சசிரேகா.. அவசரமாய் அங்கிருந்து நகரப் போனாள்.

''எங்கேடி போற?''

''என் ஹஸ்பெண்ட் என்னைத் தேடுகிறார்டி...''

அப்போதுதான்... வீட்டு வாசலில் வந்து நின்று சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டிருந்த கருணாகரனைக் கவனித்தாள் மாலினி.

''ஓகே.. குட்நைட்.. நீ போ..''

''நீ?''

''என்னை எந்த ஹஸ்பெண்ட் தேடப் போகிறார்.. உன்னைத் தேடத்தான் உன் ஹஸ்பெண்ட் இருக்கிறாரே.. நீ போ.. என்னைத் தேட ஹஸ்பெண்ட் இல்லாததால் நான் கொஞ்சம் உலாவி விட்டு தூங்கப் போறேன்..''

''போடி அரட்டை...''

மாலினியின் முதுகில் செல்லமாய் தட்டிவிட்டு சசிரேகா கணவனை நோக்கி விரைந்தாள்.

அவர்கள் இருவரும் தாழ்ந்த குரலில் பேசியபடி வீட்டுக்குள் செல்வதைப் பார்த்தபடி மாலினி நகர்ந்து அங்கிருந்த சிமெண்ட் பெஞ்சினில் அமர்ந்தாள்.

பூச்செடிகளில் இருந்து வந்த நறுமணம் அவளைச் சுற்றிக் கமழ்ந்து கொண்டிருந்தது. தோட்டத்திற்கே உரிய சில்வண்டுகளின் ரீங்காரம் மெல்லிசை போல் அவள் காதில் நுழைந்தது. இரவின் நிசப்தம் அவளைச் சூழ்ந்திருந்தது. மாலினி.. அந்த இரவு நேரத்தின் தோட்டத்துச் சூழலை ரசித்தாள். அந்த தனிமையை மனமார அனுபவித்தாள்.

*''தனிமையிலே.. தனிமையிலே..''*

மெல்லிய குரலில் பாட ஆரம்பித்தவள்.. தன் பாடலை யாராவது கேட்கிறார்களா என்று சுற்றிலும் பார்த்தாள்.. யாரும் இல்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்டு... பாடலைத் தொடர்ந்து பாட ஆரம்பித்தாள்.

*''தனிமையிலே...*
*இனிமை காண முடியுமா...?*
*நள்ளிரவினிலே...*
*சூரியனும் தெரியுமா...?''*

மாலினியின் மனதிலிருந்த இனம்புரியாத வேதனை அவளை வருத்திக் கொண்டிருந்தது. பாடலின் மூலம் அதை மறக்க முயல்பவள் போல் அவள் பாடினாள்...

*''மனிருந்தால் மணமிருக்கும்*
*தனிமையில்லை...*
*செங்கனியிருந்தால் சுவையிருக்கும்*
*தனிமையில்லை...*





*நாம் காணும் உலகில் எங்கும்...*
*தனிமையில்லை...''*

தன்னை மறந்து அவள் பாடிக் கொண்டிருக்கும் போது... ''யாரும்தான் தனியாக இல்லையே.. நீ மட்டும் ஏன் தனியாக உட்கார்ந்திருக்கிறாய்?'' என்ற குரல் கேட்டது.

சட்டென்று மாலினியின் பாட்டு நின்றது. அவள் அந்தக் குரலை இனம் கண்டுகொண்டாள். சற்று முன்னால் முகம் சுளித்தவன்.. தானே வந்து பேசவும், அவளது மன வேதனை சடுதியில் மறைந்து போனது.

''நான் தனியாக உட்கார்ந்திருக்கிறேன்னு யார் சொன்னது?'' என்று திரும்பாமல் அவள் கேட்டாள்.

''ஏன்.. நான்தான் சொல்கிறேன்...''

''நீங்க இருக்கும்போது நான் எப்படித் தனியாவேன்?''

மாலினிக்குத் தெரியும்.. இந்தப் பதில் அவன் மனதை குளிர்விக்கும் என்பது.

அவள் எதிர்பார்ப்பு பொய்க்கவில்லை. பிரபாகரன் அவளருகில் வந்து அமர்ந்தான்.

''உனக்கு ரொம்பத்தான் தைரியம்..'' என்றான்.

''எதை வைத்து அப்படிச் சொல்கிறீங்க? இந்த இருட்டு வேளையில் தோட்டத்தில் தனியாக உட்கார்ந்து பாடிக் கொண்டிருக்கிறேனே.. அதை வைத்தா?''

''பாடிக் கொண்டிருந்தாயா?''

''ஓகே... கத்திக் கொண்டிருந்தேன்.. போதுமா...''

''அதை வைத்துச் சொல்லவில்லை...''

''சென்னையிலிருந்து வேலை பார்க்க மார்த்தாண்டத்திற்கு தனியாக வந்திருக்கிறேனே... அதைச் சொல்கிறீங்களா?''

''ஊஹூம்...''

''உங்கள் ஆசை மாமன் மகள் ஸ்வேதாவை தினசரி பார்த்தும் பயந்து ஓடாமல் இன்னும் இந்த வீட்டிலேயே இருக்கிறேனே.. அதைச் சொல்கிறீங்களா?''

''மாமன் மகள்னு மட்டும் சொல்லு. இந்த ஆசை தோசையையெல்லாம் சேர்த்துச் சொல்லாதே...''

''பார்க்கலாம்.. என் கேள்விக்கு என்ன பதில்?''

''அதுவும் இல்லை...''

''வேறு எதைத்தான் சொல்கிறீங்க அத்தான்...''

அடுத்த மலர்க் கணையை அவனை நோக்கி ஏவி விட்டாள் மாலினி. அவளுக்குத் தெரியும்... அவள் வீசும் இந்த பந்து அவனைக் க்ளீன் போல்டாக்கிவிடும் தன்மை கொண்டது என்பது.

அவளது 'அத்தான்..' என்ற அழைப்பை ரசிப்பது போல அவன் அமைதியாக அவளைப் பார்த்தபடி அமர்ந் திருந்தான்.

இருளில் தெரிந்த அவருடைய உருவம் ஒரு தேவதை யின் அழகைப் போல இருந்தது. பூவாசத்தையும் தாண்டிய மெல்லிய வாசம் அவளின் இருப்பை அவனுக்கு உணர்த் தியது.

அந்தக் கருமைநிற இருள் போர்வையிலும் அவனது கூர்மையான பார்வையை அவள் உணர்ந்தாள். பகலில் அவன் அருகிலிருந்தபோது வராத மயக்கம்... இந்த இரவு வேளையில் அவளுக்கு வந்து தொலைத்தது.

''இந்த வீட்டிலிருக்கும் மனிதர்களைவிட தோட்டம் உனக்கு குளுமையானதாக இருக்கிறதா.. ம்ம்ம்?''



சசிரேகா 'பகலில் பக்கம் பார்த்துப் பேசு.. இரவில் அதையும் பேசாதே..' என்று ஏன் கூறினாள் என்பது அப்போது மாலினிக்குப் புரிந்தது.

'நான் சசியிடம் சொன்னதை இவன் கேட்டுவிட் டான்...' மாலினி உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

''என்ன.. பதிலைக் காணோம்..''

''இந்த ராத்திரி நேரத்துக் காற்று, எப்படி கிறுகிறுன்னு வருகிறது.. பார்த்தீங்களா அத்தான்..''

'நானென்ன கேட்கிறேன்.. இவளென்ன பதில் சொல் கிறாள். பேச்சை மாற்றப் பார்க்கிறாளா..?'' அவன் இதழ் களில் குறுநகை தவழ்ந்தது.

''காற்றை பார்க்க முடியுமா?'' அவள் போக்கிலேயே பதிலைச் சொன்னான் அவன்.

''அடேங்கப்பா.. பெரிய நக்கீரர் பரம்பரைதான்...''

''என் பரம்பரைப் பெருமையைப் பற்றி உனக்கென்ன தெரியும்?''

''அது நிறையத் தெரியும்..''

''எப்படி?''

''ப.ப. சொன்னாள்..''

''ப.ப. வா.. யார் அது?''

''பழம்பெருமை பரந்தாமன்..''

''ஹா.. ஹா... அவரையும் நீ விட்டு வைக்கலையா.. ஹா.. ஹா... பழம்பெருமை பரந்தாமன்? ஹா.. ஹா..''

''மெல்ல.. பல் சுளுக்கிக் கொள்ளப் போகிறது...''

''பல் சுளுக்குமா.. ஹா.. ஹா...''

'இவன் சிரிக்கும் சிரிப்பில்... வீடே.. தூக்கத்திலிருந்து எழுந்துவிடும் போல இருக்கே...'

மாலினி கவலையுடன் வீட்டைப் பார்த்தாள். பின்பு அவனைப் பார்த்தாள். வாயில் சுட்டுவிரலை வைத்து... ''உஸ்ஸ்...'' என்றாள்.



## 26

*அறிமுகமில்லாத என் மனதில்...*
*உன் திருமுகம் பதிந்த ஒருபொழுதை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

அவர்கள் அமர்ந்திருந்த பூமரத்திலிருந்து மலர்கள் உதிர்ந்து அவர்களைச் சுற்றி விழுந்திருந்தன. அத்தனை நாளும் இல்லாத ஓர் அழகை அன்று தோட்டத்தில் கண்டான் பிரபாகரன்.

இன்று போல் முன்பு எந்த நாளும் இந்தத் தோட்டம் இத்தனை அழகுடன் இருந்ததில்லை என்ற எண்ணம் அவன் மனதில் வந்தது.

எவரும் வாய் திறந்து பேசப் பயப்படும் அவனிடம் வாயின் மேல் விரலை வைத்து ''உஷ்..'' என்று அடக்கினாள், அந்த அழகிய இளம்பெண்.

அவளை அவன் சந்தித்து இரண்டு நாட்கள்தான் ஆகின்றன என்பதை அவன் உள்ளம் ஏற்க மறுத்தது.

அவளுடைய எல்லா இயல்புகளும் இன்னது என்று தனிப்பட வரையறுத்துக் கூற முடியாமல் ஒன்றுசேர அவனைக் கவர்ந்தன.



''ஏன்.. 'உஷ்ஷ்' என்கிறாய்..'' என்று வினவினான் பிரபாகரன்.

''இது ராத்திரி நேரம்..'' அவள் குரல் அமானுஷ்யமாக ஒலிப்பது போல் அவனுக்குத் தோன்ற.. அவன் அதற்கும் சிரித்தான்.

''இப்போதுதானே கீப் கொயட்டுன்னு சொன்னேன்..''

''நீ அப்படியா சொன்னாய்.. 'உஷ்'ன்னு சொன்னாய்..''

''ஆமாம் சொன்னேன்.. சுரைக்காய்க்கு உப்பில்லைன்னு சொன்னேன்.. நீங்க கண்டீங்க..''

''என்ன காய்..''

''சுரைக்காய்..''

''சுரைக்காய்.. உப்பு.. ஹா.. ஹா...''

பொறுக்க முடியாமல் மாலினி.. தன் தளிர் கரத்தால் அவன் வாயைப் பொத்திவிட்டாள். நடந்ததை அவள் உணர்ந்து கையை விலக்கிக் கொள்ள சற்று முன்.. அவன் வாய் தொட்டு விலகிய தளிர் கரத்தின் மென்மையை நினைவுகூர்ந்தபடி அவன் அசையாமல் அமர்ந்துவிட்டான்.

இப்போது அவனுடைய சிரிப்பு சுத்தமாக நின்றுவிட்டது. மாலினி எழுந்து கொள்ள முனைய.. அவன் அவள் கரம் பற்றித் தடுத்தான்.

''அத்தான்...'' அவளது குரலும் கையும் சேர்ந்து நடுங்க, அவசரமாய் அவள் கையை விட்டு விட்டான்.

''உட்கார் மாலினி...''

''இல்லை.. நான் போக வேண்டும்..''

''போகலாம் உட்கார்..''

''எதற்காக?''

''எனக்கு உன்னிடம் பேச வேண்டும்..''

''இன்றைக்கு பகல் பூராவும் பேசினோமே.. நாளைக்குப் பகலிலும் பேசப் போகிறோமே..''

''இதை.. இந்தப் பேச்சை... இப்போதே பேசிவிட வேண்டும். நாளைக்கு இதன் பவர் குறைந்துவிடும்..''

மாலினி தயக்கத்துடன் அமர்ந்தாள். பிரபாகரன் மெதுவான குரலில் அவளிடம் வினவினான்.

''ஏன் அப்படிச் சொன்னாய் மாலினி?''

''எப்படி?''

''வீட்டில் இருக்கும் மனிதர்களைவிட தோட்டம்தான் குளுமையாக இருக்கிறதுன்னு...''

மாலினி சற்று நேரம் மௌனமாக இருந்தாள். பின்னர் மெல்லிய குரலில் சொன்னாள். அவள் குரலில் தழதழப்புத் தெரிந்தது.

''உங்களுக்கு ஏனென்று தெரியாதா?''

தெரியும். பிரபாகரனுக்கு அது மிக நன்றாகவே தெரியும். சாப்பாட்டு மேஜையில் பிரபாகரனின் முகம் இறுகிப்போனதைத்தான் மாலினி குறிப்பிடுகிறாள் என்பதை அவன் நன்கு அறிவான். ஆனால்... அவன் அதை அவள் வாய்மொழியில் கேட்க விரும்பினான். கேட்டும் விட்டான்..

''எனக்குத் தெரிவது இருக்கட்டும். உனக்கும் அது தெரியும்தானே..''

''எது?''

''ஏன்.. நான் குளுமையில்லாமல் இருந்தேன் என்று...''



மாலினி திரும்பவும் எழுந்துகொள்ள முயன்றாள். இப்போது அவள் கைபிடித்து தடுத்த பிரபாகரனின் பிடி.. இரும்புப் பிடியாக இருந்தது.

''கையை விடுங்க.. அத்தான்..''

''விட முடியாது...''

''யாராவது பார்த்துவிடப் போகிறார்கள்..''

''இந்த இருட்டில் யாரும் பார்க்க மாட்டாங்க..''

என்ன மாதிரியான உரையாடல் இது என்ற நாணம் மாலினிக்குள் எழுந்தது. இவனுக்கென்ன.. இவன்பாட்டுக்கு அவள் கையைப் பிடித்து நிறுத்துவான். இப்படிப் பேசி வைப்பான். அவளுக்குத்தானே எல்லாப் பாடும்?

''சேலையில முள்ளு பட்டாலும்.. முள்ளு மேல சேலை பட்டாலும்.. சேதம் சேலைக்குத்தான்..''

சில நாள்களுக்கு முன்னால்.. டி.வி-யில் அவள் பார்த்த பழைய திரைப்படத்தில் இருந்து அபத்தமான வசனம் நேரம் காலம் தெரியாமல் அந்த நேரத்தில் அவளுக்கு நினைவுக்கு வந்து தொலைத்தது..

இவன் உட்காராமல் விட மாட்டான் என்ற உணர்வுடன் அவள் அவன் பக்கத்தில் அமர்ந்தாள். தன் கையை விடுவித்துக் கொள்ள முயன்றாள். தன் உள்ளங்கையில் அடங்கியிருந்த அவளது உள்ளங்கையை பற்றி அழுத்திய பின் மெதுவாக விடுவித்தது அவனுடைய கரம்.

அவள் தடுமாறிப் பின் தன் கரத்தை விலக்கிக் கொண்டாள். அவளது இதயம் படபடவென்று.. வேகமாக அடித்துக் கொள்ளும் சத்தம் அவளுக்கு கேட்டது. நடுங்கும் கரங்களை கோத்து தன்னிலைக்கு கொண்டு வரப் போராடிக் கொண்டிருந்தாள்.

''நீ தினாவுடன் பேசிப் பழக நினைக்கிறாயா?'' பிரபாகரனின் குரல் ஆழ்ந்து ஒலித்தது.

மாலினி திடுக்கிடலோடு நிமிர்ந்தாள்.. ஓர் இனிய கனவு கலைந்துவிட்ட துக்கம் அவள் மனதில் தோன்றியது. சற்றுமுன் அவள் கரம் பிடித்து உள்ளங்கையைத் தொட்ட அவனது ஸ்பரிசம் உணர்த்திய உணர்வின் அலை.. அவனுடைய கேள்வியைக் கேட்டதும் அடங்கிவிட்டது.

''எனக்கு இந்தக் கேள்வி பிடிக்கவில்லை...''

''இதைக் கேட்க எனக்கும் பிடிக்கவில்லைதான்.. ஆனால், எனக்கு வேறுவழியில்லை. தினாவுக்கு உன் மேல் ஆர்வம் இருக்கிறது. அது அவன் பேச்சில் தெரிகிறது..'

''எனக்கு இல்லை...''

''இனி வரலாமில்லையா?''

''ஸ்டாப் திங் நான்ஸென்ஸ். ப்ளீஸ்.. நீங்க என்னை என்னவென்று நினைத்துக் கொண்டீங்க.. உங்க வீட்டில் நான் தங்கியிருந்தால்.. என்னை என்ன வேண்டுமானாலும் கேட்டு விடுவீங்களா?''

''ஸாரி.. ஐ ஆம் ஸோ ஸாரி. பட்.. எனக்கு தெளிவாக தெரிய வேண்டியிருக்கிறது...''

''எதற்காக?''

''உனக்குத் தெரியாதா?''

மீண்டும் பிரபாகரனின் குரல் ஆழ்ந்து ஒலிக்க.. மாலினிக்கு துக்கமாக வந்தது.

''நான் இந்த மார்த்தாண்டத்திற்கு வந்திருக்கவே கூடாது..'' என்று அந்தத் துக்கத்துடனே கூறினாள்.

''ஏன் இப்படிச் சொல்கிறாய் மாலினி.. இங்கே வந்ததனால்தான் என் முகத்தில் விழித்தாயென்ற வருத்தம் உனக்கு வந்துவிட்டதா?''



''அத்தான்..''

மாலினி அதிர்ச்சியுடன் அவனைப் பார்த்தாள். அவன் மெதுவான குரலில் அழுத்தமாகப் பேசினான்.

''நான் ஒன்றை நினைத்துவிட்டால் அதிலிருந்து மாறாத ரகம்..''

''இதை ஏன் இப்போது என்னிடம் சொல்கிறீங்க?''

''ஒன்றை நினைத்துவிட்டால் கடைசிவரை அதிலேயே நிற்பேன். ஒருபோதும் அதை விட மாட்டேன்...''

''இருக்கட்டும் அத்தான்.. இதையேன் சொல்கிறீங்க...''

''நான் இந்த வீட்டிற்கு மூத்தவன். குடும்பத் தலைவன்..''

''ஸோ.. வாட்?''

''ஒரு செயலைச் செய்யும் முன் அது என் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவங்களைப் பாதிக்கிறதா என்று பார்த்துச் செயல்பட வேண்டியது என் கடமை...''

''தாராளமாய் செயல்படுங்க. உங்கள் குடும்பம்.. உங்கள் வாழ்க்கை.. இதையேன் என்னிடம் ஒப்பிக்கிறீங்க?''

''தினாவிற்கு நான் அண்ணன் மட்டுமில்லை.. ஒரு தகப்பனின் ஸ்தானத்தில் இருப்பவன்..''

''இருந்துவிட்டுப் போங்க..''

''அவன் ஆர்வம் காட்டும் எதன் மீதும் நான் ஆர்வம் காட்ட முடியாது..''

பிரபாகரன் எங்கே வருகிறான் என்று மாலினிக்குப் புரிந்துவிட்டது. அவள் கோபத்துடன் அவனை முறைத்தாள்.

''உங்கள் வீட்டுப் பெருமையைக் கேட்க எனக்கு இஷ்டமில்லை. உங்கள் தம்பிக்கு நீங்கள் தகப்பனாக

இருந்தால் எனக்கென்ன.. இல்லை தாத்தாவாகவே இருந்தால் தான் எனக்கென்ன.. எப்படியோ செல்லம் கொஞ்சிவிட்டுப் போங்க. ஆனால்.. தேவையில்லாமல் என்னை டிஸ்டர்ப் பண்ணினால் நான் சும்மா இருக்க மாட்டேன்..''

''யார் உன்னை டிஸ்டர்ப் செய்தது?''

''நீங்களும் உங்க தம்பியும்தான்...''

''புரியவில்லை...''

''புரியாது.. நீங்கள் பப்பா பாருங்க..''

''ப்ளீஸ், மாலினி...''

பிரபாகரனின் குரல் இறைஞ்சலாக ஒலிக்கவும்.. மாலினி ஆயாசமாக உணர்ந்தாள்.

'இது எனக்குத் தேவையில்லாதது. நான் வேலை பார்க்கத்தானே ஊர் விட்டு ஊர் வந்தேன்.. இவனும் இவன் தம்பியும் எக்கேடு கெட்டால் எனக்கென்ன?'

அவள் சொல்லத் தெரியாதவளாய்... சொல்ல முடியாத கோபத்துடன் பக்கத்திலிருந்த பூச்செடியின் இலைகளைக் கிள்ளி கோபத்துடன் விட்டெறிந்தாள்.

''அப்படிச் செய்யாதே..'' பிரபாகரன் அதட்டினான்.

''ஏன்?'' அவள் செடியைக் கிள்ளுவதை நிறுத்த வில்லை.

''உன்னைக் கிள்ளினால் உனக்கு வலிக்காதா? அதைப் போலத்தான் செடிக்கும் வலிக்கும். விட்டு விடு...''

மாலினி இலைகளை கிள்ளுவதை விட்டுவிட்டு அவன் பக்கம் திரும்பினாள்.

''செடிக்கு வலிக்கும்னு இவ்வளவு வருத்தப்படறீங் களே.. என் மனம் வலிக்கும்னு கொஞ்சமாவது நினைத்துப் பார்க்கறீங்களா?''



''மாலினி...''

''உங்களுக்குத்தான் வாய் இருக்கிறதா.. உங்களால் தான் பேச முடியுமா?''

''உனக்கு வாய் இல்லைன்னு இந்த செடிகூட சொல் லாது..''

''நான் வாயாடிதான். ஆனால்.. என் பேச்சு எவரையும் காயப்படுத்தியதில்லை..''

''நான் யாரைக் காயப்படுத்தினேன்?''

''என்னை.. என் மனதை காயப்படுத்தினீர்கள்..''

''நான் தினாவுக்கு போட்டியாக முடியாது மாலினி..''

''எனக்கு தினகரனின் மேல் இன்ட்ரஸ்ட் இல்லை மிஸ்டர் பிரபாகரன்.. மைண்ட் இட்..''

அவனைப் பெயர் சொல்லி அழைத்தவாறு மாலினி எழுந்து கொண்டாள். இந்த முறை அவன் கைக்கு எட்டாமல் தள்ளியே நின்று கொண்டவள்..

''உங்களுடைய தம்பிக்காக நீங்கள் எதை வேண்டு மானாலும் விட்டுக் கொடுங்க பிரபாகரன். ஆனால்.. அது உயிரில்லாத பொருளாக இருக்க வேண்டும். உயிருள்ள ஜீவனாக இருக்கக்கூடாது. குட் நைட்..'' என்று கூறிவிட்டு வீட்டை நோக்கிச் சென்றுவிட்டாள்.




*உன்னைச் சந்தித்த பொழுதையே...*
*சிந்திக்கும் என் மனதையே...*
*என்னவென்று நான் சொல்ல...?*

காரில் ஏறியதிலிருந்து மௌனமாக இருந்த மாலினியைப் பேச வைக்க என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தான் பிரபாகரன்.

இப்போதுதான் அவள் மௌனமாகி விட்டாள் என்றில்லை. காலை உணவு நேரத்தின்போதும் அவள் அமைதியாகத்தான் இருந்தாள்.

''இன்றைக்கு நீங்க மௌன விரதம் இருக்கீங்களா மாலினி?'' என்று கேட்ட காயத்ரிக்கு பதில் சொல்லாமல் லேசாக சிரித்தாள்.

''நீங்க பேசினாலும் அழகு... மௌனமாக இருந்தாலும் அதுகூட ஒரு தனி அழகுதான்..''

வாய்ப்பை நழுவவிடாமல் ஊடே புகுந்து தினகரன் பேசியபோது சாப்பிட்டுவிட்டதைப் போல எழுந்து கைகழுவச் சென்றுவிட்டாள்.

மற்றவர்கள்.. ஏன்.. தினகரனே அதை இயல்பான ஒன்றாக நினைத்துக் கொண்டான்.

ஆனால், பிரபாகரனுக்கு மட்டும்தான் தெரியும்.. அவள் வேண்டுமென்றே பாதி சாப்பாட்டில் எழுந்து போய்விட்டாள் என்பது.

அதற்கு மேல் சாப்பிட முடியாதவனாய் அவனும் எழுந்து கொண்டான். வேலைக்குச் செல்லத் தயாராய் மாலினி வாசலில் காத்திருப்பதை உணர்ந்தவன்.. புருவங்கள் முடிச்சிட... நர்மதாவிடம் சொல்லிவிட்டு வாசலுக்கு சென்றான்.

'என்னைக் கூப்பிடவும் இல்லை... அம்மாவிடம் சொல்லிக் கொள்ளவும் இல்லை.. கோபம் வந்துவிட்டால் இப்படித்தான் தூக்கி எறிவாளா?'



கார் கதவைத் திறந்துவிட அவன் முயன்றபோது... அவளே கார் கதவைத் திறந்து கொண்டு.. ஏறி அமர்ந்து விட்டாள்.

காரை அவன் கிளப்பி.. சாலையின் போக்குவரத்தில் கலந்த பின்னாலும் அவள் வாயைத் திறக்கவே இல்லை. பிரபாகரன் காரின் வேகத்தை குறைத்தான்.

''பேச மாட்டாயா?'' என்றான்.

''எனக்கு நேரமாகிவிட்டது..'' என்றாள் அவள்.

''அதெல்லாம் நேரமாகவில்லை. இன்றைக்கு சீக்கிரமாகவே நீ கிளம்பிவிட்டதை நான் பார்த்துக் கொண்டுதானே இருந்தேன்..''

மாலினி பதில் பேசவில்லை.

''என் மேல் கோபமிருந்தால் அதை என்னிடம் காட்டு.. அம்மாவிடம் ஏன் காட்டுகிறாய்?''

மாலினிக்கு கோபம் வந்துவிட்டது.

''உங்கள் மேல் எனக்கெதற்கு கோபம் வரப் போகிறது.. உங்க அம்மாவின் மேல் நான் அதைக் காட்டினேன்னு சொல்வது நன்றாக இல்லை...''

''காலையில் வேலைக்குக் கிளம்பும்போது அம்மாவிடம் சொல்லிக்கொண்டாயா?''

''சொல்லிக் கொள்ளவில்லைன்னு உங்களுக்குத் தெரியுமா?''

''நீதான் காலையிலிருந்து பேசவே இல்லையே... இப்போதுதானே உன் திருவாயை திறந்திருக்கிறாய்...''

''வாயால் பேசித்தான் சொல்லிக் கொள்ளணும்னு அவசியம் இல்லை. தலையை அசைத்தும் சொல்லிக் கொள்ளலாம்..''

''அப்படி ஒன்று இருக்கிறதா?''

பிரபாகரன் ஆச்சரியத்துடன் மாலினியைப் பார்த்தான். அவள் அவனுடைய தாயிடம் விடைபெற்றுக் கொண்டு தான் வந்திருக்கிறாள் என்பதை அறிந்துகொண்டதும் அவன் மனதில் சாரல் அடித்தது.

''ஏன் சரியாகச் சாப்பிடவில்லை?''

அவள் மீண்டும் மௌனம் சாதிக்கவும்.. காரை அவன் சாலையோரமாக நிறுத்திவிட்டான்.

''இதுதான் நீங்க என்னை வேலைக்கு கூப்பிட்டுக் கொண்டு போகும் லட்சணமா?'' அவள் கோபத்துடன் கேட்டாள்.

''நீ இப்படிப் பதில் பேசாமல் என் உயிரை எடுத்தால்... நானும் இப்படித்தான் செய்வேன்...'' அவன் பல்லைக் கடித்துக்கொண்டே பதில் சொன்னான்.

''ஏன் சார் இப்படி அழிச்சாட்டியம் செய்யறீங்க...'' மாலினி அலுத்துக் கொண்டாள்.

''சாரா?'' பிரபாகரனின் முகம் விளக்கெண்ணெயை குடித்தது போல ஆகிவிட்டது.

''ஆமாம்... என் லிமிட்டை நான் தாண்டாமலிருப்பது தான் நல்லது..''

''யாருக்கு நல்லது?''

''எனக்கு நல்லது. அப்புறம் இன்னொரு விஷயம்.. நான் கூடிய சீக்கிரத்தில் லேடீஸ் ஹாஸ்டலில் இடம் பார்த்துக் கொண்டு உங்கள் வீட்டை விட்டுப் போய்விடு வேன்...''

''நான் உன்னைப் போக விட மாட்டேன்..''

''என்னைத் தடுக்க நீங்கள் யார்?''



பிரபாகரன் அவளை உறுத்துப் பார்த்தான். அவன் விழிகளில் சினம் துளிர்த்தது.

''கோபம் வந்தால் இப்படித்தான் பேசுவாயா.. நான் யாருன்னு உன் மனச்சாட்சியைக் கேட்டுப் பார்..''

''மனச்சாட்சியை ஏன் கேட்க வேண்டும்.. அதுதான் இந்த ஊருக்கே தெரியுமே. இந்த ஊரில் இருக்கிற கைக்குழந்தையைக் கேட்டால்கூட உங்கள் பெயரைச் சொல்லுமாமே...''

''அப்படி யார் அள்ளிவிட்டது...''

''எல்லாம் உங்க குடும்பத்தின் பக்தகோடி பரந்தாமன் தான்..''

''பழம்பெருமை பரந்தாமன்... இப்போது பக்தகோடி பரந்தாமனாய் ஆகிவிட்டாரா...''

அவனுக்குச் சிரிப்பு வந்தது. சிரிப்பை அடக்கிக் கொண்டான். அவள் முன்னால் சிரித்து வைத்தால்.. அவளிடம் கோபம் காட்டிப் பேச முடியாதே.

''கைக்குழந்தையை ஏன் கேட்க வேண்டும்... அதைத் தூக்கி வைத்துக் கொண்டு கொஞ்சும் பொறுமையெல்லாம் எனக்கு இல்லை..''

இப்போது மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது. அவளும் சிரிப்பை அடக்கிக் கொண்டாள்.

'இவன் பண்ணும் லொள்ளுக்கு நான் சிரித்து வைத்து விட்டால்.. என்னை லேசாக நினைத்துவிடுவான். சிரித்து விடக் கூடாது...'

அவள் தன் சிரிப்பைக் கட்டுப்படுத்திக் கொண்டு சிரிக்காமல் சொன்னாள்.

''ஆமாமாம்... நீங்கள் கைக்குழந்தையைக் கொஞ்சும் ரகமா?''

''தடிமாட்டுத் தாண்டவராயன்களைக் கொஞ்சும் ரகம்...''

'இவள் தினகரனைச் சொல்கிறாள்..'

ஏனோ... அவள் தினகரனை அப்படிச் சொன்னது பிரபாகரனுக்குப் பிடித்தமான ஒன்றாக இருந்தது.

ஆனால்.. அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல்..

''யாரை தடிமாட்டுத் தாண்டவராயன்னு சொல்கிறாய்.. என் தம்பியையா?'' என்று அறியாதவனைப் போல வினவினான்.

''இதற்கெல்லாம் நான் பதில் சொல்லிக் கொண்டிருக்க முடியாது. நீங்க காரை இப்போது கிளப்புகிறீங்களா.. இல்லையா?''

''முடியாதுன்னு நான் சொன்னால் என்ன செய்வாய்.. அதட்டலெல்லாம் பலமாய் இருக்கு..''

''காரை விட்டு இறங்கி நடந்தே போய் விடுவேன்..''

மாலினி கார் கதவில் கைவைக்க... அவளது கைமேல் தன் கையை வைத்தான் பிரபாகரன்.

மாலினி பேச்சிழந்தாள். நடுங்கும் விரல்களை தன் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வர முயன்றபடி...

''கையை எடுங்க..'' என்றாள்.

''முடியாது...'' அவன் உல்லாசமாகச் சிரித்தான்.

''என் மேல் ஆணை.. கையை எடுங்க...'' மாலினியின் இதழ்கள் துடித்தன.

''மாலினி..'' அவன் திகைப்புடன் அவளைப் பார்த்தான்.



''நீங்கள் கோட்டையூர் ஜமீன் வம்சத்தில் வந்தவர். பெரிய ஜமீன்தார் கார்த்திகேயனின் மகன். இந்த ஏரியாவே மரியாதை கொடுக்கும் மிகப் பெரிய வி.ஐ.பி. இவையெல்லாம் உண்மையென்றால்.. என் அனுமதியில்லாமல் இனி என் கையைத் தொடாதீங்க...''

அவன் சட்டென்று கையை எடுத்துவிட்டான். கலங்கி சிவந்திருந்த தன் விழிகளைத் துடைத்துக் கொண்டாள் மாலினி.

''உங்களைப் போல் வம்சாவளிப் பெருமை வேண்டுமானால் எங்களுக்கு இல்லாமல் இருக்கலாம். ஆனால்.. எங்கள் பரம்பரைக்கும் ஒரு பெருமை உண்டு...''

''அதை நான் குறைத்துப் பேசினேனா?''

''பேசினால்தானா.. செய்கையில் காண்பிக்கறீங்களே.. இது போதாதா?''

''அப்படி நான் என்ன செய்துவிட்டேன்?''

''என் கையைத் தொடலாமா?''

''சென்னையில் பிறந்து வளர்ந்தவள் இப்படிக் கேட்பது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது...''

''ஹலோ.. மைண்ட் யூவர் வேர்ட்ஸ்.. சென்னையில் பிறந்து வளர்ந்த நாங்கள் ஆண்களிடம் இயல்பான நட்புடன் பேசுவோம்.. தொட்டுப் பேசி பழகுவோம்.. ஆனால், எங்கள் தொடுகையில் ஆண்... பெண் வித்தியாசம் இருக்காது. உங்கள் மனச்சாட்சியைத் தொட்டுச் சொல்லுங்கள்.. உங்கள் மனதில் விகல்பமில்லாமல்தான் என் கையைத் தொட்டீங்களா?''

முதல் நாள் இரவு.. தோட்டத்தில் அவளது உள்ளங்கையைப் பிடித்து அழுத்தியதை அவள் நினைவுபடுத்துவது அவனுக்கும் புரிந்தது.

அவள் கேள்வி அவனைச் சுட.. அவன் மௌன மானான். "நான் உங்கள் வீட்டுக்கு விருந்தாளி. நான் வந்து மூன்று நாள்கள்கூட ஆகவில்லை. நீங்க என் விஷயத்தில் என் அனுமதி இல்லாமலே அதிக உரிமை எடுத்துக் கொண் டீங்க..."

"உன் மனம் அனுமதிக்கவில்லையா.. உன் மனச்சாட் சியைக் கேட்டுப் பார்?"

"மனச்சாட்சியைப் பற்றிப் பேச உங்களுக்கு தகுதி கிடையாது.."

"மாலினி.."

"உங்கள் மேல் எனக்கு ஈடுபாடு இருப்பதாக உங்க மனச்சாட்சிக்குத் தெரியுமா.. தெரியாதா?"

"தெரியாமலா உன் கை தொட்டேன்?"

"அதற்குப் பின்னால் உங்க தம்பியைப் பற்றிய கேள்வி எதற்கு சார்.. ஒருவேளை உங்களை சைட் அடித்துக்கொண்டே உங்களின் தம்பிக்கும் நான் ரூட் விடுகிறேன்னு நினைத்துவிட்டீங்களா?"

அவளின் நேரடியான கேள்வி அவனைத் தாக்கியது. அந்தக் கேள்வியில் இருந்த தார்மீகக் கோபம் அவனை சுட்டது.

"சேச்சே.. என்ன பேச்சு இது மாலினி?"

"என்னை இப்படிப் பேச வைப்பது நீங்கள்தானே?"

"உன் வாயிலிருந்து இப்படிப்பட்ட பேச்சுகள் வரலாமா?"

"உங்கள் திருவாய் மட்டும் அருமையாக பேசியதாக உங்களுக்கு நினைப்பா?"



பிரபாகரன் சங்கடப்பட்டான். மாலினியின் இந்தக் கோபம் அவன் எதிர்பார்க்காத ஒன்றாக இருந்தது. அதே நேரம் தினகரனைப் பற்றிய நினைவும் அவனை அரித்துக் கொண்டிருந்தது.

"நான் ஒன்றை தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பி னேன்.."

"அதை என் கை தொடாமலேயே நீங்கள் சொல்லி யிருக்க வேண்டும்.."

மாலினி அவன் முகத்தைப் பார்க்கக்கூட விரும் பாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டு இதைப் பேசிய விதம் கண்டு பிரபாகரன் தன்னைத்தானே நொந்து கொண் டான்.

'அவசரப்பட்டு வாய்விட்டு விட்டேனே..'

"ஐ ஆம் ஸாரி மாலினி..."

"சில செயல்களுக்கும் வார்த்தைகளுக்கும் மன்னிப்பே கிடையாது.."

"என் நிலையை நீ புரிந்துகொள்ள மாட்டாயா?"

"அதற்கான அவசியம் எனக்கில்லை.."

"ஒரே நாளில் நான் உனக்கு வேண்டாதவனாக ஆகி விட்டேனா?"

"நீங்கள் எனக்கு வேண்டியவரும் இல்லை.. வேண்டா தவரும் இல்லை. நான் உங்கள் தம்பி மனைவியின் ஒன்று விட்ட சித்தப்பாவின் மகள். ஜஸ்ட் எ ரிலேடிவ்! அவ்வளவு தான்.."

"அவ்வளவேதானா?"

"அவ்வளவேதான்.."

மாலினிக்கு வெறுப்பாக இருந்தது. முதல் நாள் முழுவதும் தூங்காமல் விழித்திருந்ததால்.. அவளது இமைகள் மூடச் சொல்லி கெஞ்சிக் கொண்டிருந்தன.

'என்ன ஒரு மனிதன் இவன்.. முன்னால் போனால் கடிப்பதும் பின்னால் போனால் உதைப்பதுமாக இருந்தால் இவனுடன் எப்படிப் பேசிப் பழக முடியும்..'

அவள் முகம் போலவே மனமும் இறுகிப் போய் இருந்தது. அதை பிரபாகரனால் உணரவும் முடிந்தது.



*மயிலிறகைப் போல...*
*மனம் வருடும் உன் நினைவை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

**மா**லினி பல்லைக் கடித்து தன் கோபத்தை அடக்கிக் கொண்டிருந்தாள். அவள் மனம் அலைகடலாய் கொந்தளித்துக் கொண்டிருந்தது.

அவள்பாட்டுக்கு வேலை பார்க்கவென்று மார்த்தாண்டத்திற்கு வந்தாள். 'இருக்காதே.. இருக்காதே.. லேடீஸ் ஹாஸ்டலில் இருக்காதே..' என்று அவளுடைய அப்பா மாட்சிமைமிகு ஜானகிராமன் அவளைப் பார்சல் பண்ணி சசிரேகாவின் புகுந்த வீட்டிற்கு அனுப்பி வைத்துவிட்டார். இங்கே என்னடாவென்றால் வந்து இறங்கிய மூன்று நாள்களிலேயே அண்ணனும் தம்பியும் ஒருசேர அவளை ஆர்வமாக பார்த்து தொலைக்கிறார்கள்.

'பேசாமல் லேடீஸ் ஹாஸ்டலுக்குப் போயிருந்திருக்கலாம். இந்தத் தொல்லையே வந்திருக்காது..' என்று நினைக்கும்போதே அவள் மனம்..



'பிரபாகரனை... தொல்லையென்று நினைக்கிறாயா?' என்று எதிர்கேள்வி கேட்டது.

'இவன்.. எனக்குத் தொல்லையா?'

பிரபாகரனை அவன் பார்க்காத போது பாராததைப் போலப் பார்த்தவளின் மனம் வலித்தது.

'இவனை நான் சந்தித்திருக்கவே கூடாது..' என்று மனம் நொந்து கொண்டாள்.

அவள் எல்லோரிடமும் பழகுவதை போல்தான் அவனிடமும் இயல்பாகப் பழகினாள். அவன் கண்ணுக்கு அவள் வித்தியாசமானவளாக தெரிந்து தொலைவாள் என்று அவள் கனவா கண்டாள்?

பிரபாகரன்தான் வலிய வந்து அவளைக் காரில் அழைத்துச் செல்லும் பொறுப்பை ஏற்றுக்கொண்டான். அவளை மதிய உணவுக்குக்கூட தனித்துவிடாமல் கூடச் சாப்பிட வைத்தான். தன் பார்வையிலும் பேச்சிலும் காதலை உணர்த்தினான். தினகரனைப் பற்றிய சிறு பேச்சைக்கூட மாலினியைப் பேசவிடாமல் முகம் சுளித்தான். தோட்டத்தின் தனிமையில் இரவின் இனிமையில் அமர்ந்திருந்தவளிடம் தானாக வந்துதான் பேசினான். அருகே உட்கார்ந்தான். அவள் கைபிடித்து இழுத்து உட்கார வைத்தான்.

இத்தனையையும் செய்துவிட்டு கடைசியில் கேட்டானே ஒரு கேள்வி.. அதைத்தான் மாலினியால் ஜீரணிக்க முடியவில்லை. அவளால் பிரபாகரனை மன்னிக்க முடியவில்லை.

''கடைசியாக என்னதான் சொல்ல வருகிறாய்?''

''நான் உங்கள் வீட்டில் தங்கியிருக்கும் விருந்தாளி. அதற்கு மேல் நமக்கு இடையே எதுவும் இல்லை. இதற்கு

சம்மதமென்றால் நான் உங்கள் வீட்டில் தொடர்ந்து தங்கு வேன்..''

''இல்லையென்றால்?''

''வேலையே வேண்டாம்னு சொல்லிவிட்டு சென்னைக்கு திரும்பிவிடுவேன்..''

மாலினியின் வார்த்தைகளில் தெரிந்த தீர்மானத்தைக் கண்டு பிரபாகரன் அமைதியாகிப் போனான். கார் கிளம் பியது. மில் வாசலில் இறங்கிய மாலினி.. அவனைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் மில்லுக்குள் சென்று மறைந்து விட்டாள்.

அரும்பும்போதே மறைந்துபோன தன் காதல் உணர்வு களை நினைத்து மனம் வெந்த பிரபாகரன், பேசாமல் போய் விட்டான்.

மதிய உணவுக்கு அவன் அழைத்துக் கொண்டு போக வந்தபோதும் காலையில் நடந்த கதைதான் தொடர்ந்தது.

மாலினி தன்னைச் சுற்றி ஒரு வட்டம் போட்டுக் கொண்டாள். பிரபாகரனுடன் காரில் ஒன்றாகப் போவாள்.. வருவாள். மதிய உணவை அவனுடன் சேர்ந்து சாப்பிடு வாள். ஆனால்.. ஒரு வார்த்தைகூட அவன் முகம் பார்த்துப் பேச மாட்டாள். அவன் வலிய பேசினாலும் ஆமாம்.. இல்லை என்ற ஒரு சொல்லில் பேச்சை முடித்துக் கொள் வாள்.

நத்தை தன் கூட்டிற்குள் ஒடுங்கிக்கொள்வதைப் போல ஒடுங்கிக் கொண்டிருந்தவளை எந்த வழியில் அணுகுவது என்று பிரபாகரனுக்கு பிடிபடவில்லை. அவள் கூட்டை விட்டு தானாக வெளிவர மாட்டாள் என்பது மட்டும் அவனுக்குத் தெளிவாக புரிந்திருந்தது. அவளுடைய



கூட்டை உடைத்து அவளை அவன்தான் வெளிக்கொணர வேண்டும். அதற்கான நேரம் வாய்க்குமா என்று ஓடுமீன் ஓட காத்திருக்கும் உறுமீனைப் போல அவனும் காத்திருந் தான்.

அப்படி ஒரு நாளும் வந்தது. ஆறு மாத காலமாக அவனருகில் இருந்தும் மனதால் தொலைதூரத்தில் விலகி யிருந்த மாலினி.. தன் மனக்கதவைத் திறக்கும் நேரமும் வந்தது.

காயத்ரியைப் பெண்பார்க்க வந்திருந்தார்கள். அவர்களது வீட்டில் எந்த விசேஷம் நடந்தாலும் குழுமிக் கொள்ளும் உறவினர்களின் வட்டாரம் அன்றும் குழுமி யிருந்தது. காலையில் இருந்தே விருந்தினரின் வருகை ஆரம்பித்துவிட்டது. காயத்ரியைப் பெண்பார்க்க வரும் மாப்பிள்ளையின் குடும்பமும் அவர்களுக்கு நெருங்கிய சொந்தம் என்பதால் இரு வீட்டினரின் சார்பாகவும் வரும் உறவினர்களின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது.

மாலினி அன்று மில்லுக்குப் போகவில்லை. முதல் நாளே நர்மதா காலை உணவு நேரத்தில் கட்டளை போல அவளுக்கு மறைமுக கோரிக்கையை வைத்திருந்தாள்.

''உனக்கு லீவு கிடைக்குமில்லையா மாலினி?''

''கிடைக்கும் அத்தை.. நான்தான் எடுத்துக் கொள் வதில்லை?''

''ஏன்?''

''மொத்தமாக சேர்ந்தால் சென்னைக்குப் போய் வரலாமேன்னு ஒரு எண்ணம்..''

''நல்ல பொண்ணு நீ.. எல்லோரும் காசு பணம் நகை யைச் சேர்ப்பாங்கன்னு பார்த்தால் நீ லீவைச் சேர்க்கிறாய்..''

''நான் மட்டுமில்லை அத்தை.. வேலைக்குப் போகிற வர்கள் எல்லோருமே இதைத்தான் செய்கிறோம்..''

''அப்படியா.. எனக்காக உன் சேமிப்பிலிருந்து ஒரு நாளை நீ செலவழிக்கணுமே..''

''எதற்காக அத்தை...''

''நாளைக்கு நம் காயத்ரியைப் பெண்பார்க்க வருகி றாங்கம்மா.. சசி சொல்லியிருப்பாளே..''

சசிரேகா அதைச் சொல்லவில்லை. ஸ்வேதா பண்ணிய ஒரு அழும்பை நினைத்து அழுது புலம்பியவள்.. அதைச் சொல்ல மறந்துவிட்டிருந்தாள். திருதிருவென்று விழிக்கும் தன் பெரியப்பா மகளைக் காட்டிக் கொடுக்க மனமின்றி..

''ஆமாம் அத்தை.. சொன்னாள்..'' என்று பொய் சொல்லி வைத்தாள் மாலினி.

''அதுதானே.. அவளாவது சொல்லாமல் இருப்ப தாவது. பொறுப்பான பெண்ணாச்சே..''

நர்மதா பெருமையுடன் மருமகளைப் பார்க்க.. அவள் மாலினியின் முறைப்பான பார்வையைச் சந்திக்காமல் ஜாக்கிரதையாய் திரும்பி அமர்ந்து கொண்டு ஈயென்று ஒரு அசட்டுச் சிரிப்பை சிரித்து வைத்தாள்.

''ஆமாமாம்.. ரொம்ம்ம்..ப.. பொறுப்பானவள்..'' மாலினி, சசிரேகாவைப் பார்த்தபடி பல்லைக் கடித்தாள்.

''காயத்ரியைப் பெண்பார்க்க வருகின்ற மாப்பிள்ளை வீட்டார் வேறு யாருமில்லை. காயத்ரியின் அப்பாவுடைய சித்தப்பாவின் மகள்வழிப் பேரன்தான்..''

இந்த உறவுமுறை.. அறிமுகப் படலமெல்லாம். என்றுமே மாலினிக்குப் பிடிபடுவதில்லை. பேசாமல்



இன்ன உறவுமுறை என்று நேரடியாகச் சொல்லிவிட லாமே என்று இருந்தது அவளுக்கு.

'காயத்ரிக்கு ஒன்றுவிட்ட அத்தையின் மகன்... என்றால் போதுமே. அதற்கு ஏன் சுற்றி வளைத்து மூக்கைத் தொட வேண்டும்' என்று யோசித்தாள்.

அதை அப்படியே நர்மதாவிடம் அவளால் சொல்லி விட முடியுமா.. சொன்னால்தான் நன்றாக இருக்குமா? அதனால் வேறுவழியின்றி..

''அப்படியா.. அத்தை..'' என்று ஆவலுடன் கேட்டுக் கொண்டாள்.

''ஆமாம்மா.. இரண்டு வீட்டுக்கும் பொதுவான சொந்தக்காரங்க நாளைக்கு காலையிலிருந்தே வந்து இறங்க ஆரம்பித்து விடுவாங்க. இன்றைக்கு ராத்திரியில் இருந்தே வேலைகள் ஆரம்பித்துவிடும். ஆயிரம்தான் வேலையாள்கள் வேலை செய்தாலும் நாம் செய்வதைப் போல ஆகுமா?'' நர்மதா நைச்சியமாகக் கேட்டாள்.

'ஆஹா.. இந்தம்மா.. என்னை வேலை வாங்க பார்க் குதே...' என்று நினைத்துக் கொண்டாலும்.. மறுத்துப் பேச மாலினிக்கு மனமில்லை.

ஆறு மாத காலமாக அந்த வீட்டில் ஒருத்தியைப் போல் உரிமையுடன் தங்கிக் கொண்டு காரில் வேலைக்குப் போய் திரும்புவது இந்தக் குடும்பத்தின் தயவில்தானே. பதிலுக்கு நன்றிக்கடனில்.. கொஞ்சத்தையாவது திருப்பிச் செலுத்த இது ஒரு வாய்ப்பு என்ற எண்ணத்துடன் உடனே சரியென்று சொல்லிவிட்டாள்.

''ரொம்ப நல்லதாப் போச்சு.. வீட்டை அலங்காரம் செய்வது உன் பொறுப்பு. உன் ரூமை அழகாய் வைத்திருக் கிறாயே.. அதிலிருந்தே உன் திறமை தெரிகிறதே. வீட்டை யும் அதைப் போல் அழகுபடுத்த உனக்குச் சொல்லியா

தர வேண்டும்..'' என்று நர்மதா.. மாலினிக்கு ஒரு பொறுப்பைக் கொடுத்துவிட்டாள்.

மாலினியும் அதை மறுத்துப் பேசவில்லை. மறு நாளுக்கு லீவைச் சொல்லிவிட்டு வந்து காத்திருந்த பிரபா கரன் காரில் ஏறிக் கொண்டவள்.. ஜன்னல் வழி வெளியே பார்த்தபடி..

''நாளைக்கு நான் லீவ்..'' என்றாள்.

''தெரியும்..'' என்றான் அவன்.

அவள் அப்படித் தெரியுமென்று கேட்கவில்லை. அவன் அதை எதிர்பார்க்காமல்..

''காலையில்.. டைனிங் டேபிளில் அம்மாவிடம் சொல்லிக் கொண்டிருந்தாயே...'' என்றான்.

மாலினி மௌனப் போர்வையின் பின்னால் மறைந்து கொண்டவளாக வெளியே வேடிக்கை பார்த்துக் கொண்டே வந்தாள். அது பழகிப் போனவளாக பிரபாகரன்.. ஒரு சிறு பெருமூச்சுடன் காரைச் செலுத்தினான்.

அன்று இரவு.. சாப்பாட்டிற்குப் பின்னர்.. அவன் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தான். தோட்டத்தின் இருளின் மறைவில்.. செடிகளுக்கு இடையே நின்று கொண்டிருந்தவனை யாரும் கவனித்தாலும் கண்டுகொள்ள முடியாது..

வீட்டு வாசலில் சலசலப்புக் கேட்டதும் அவன் திரும்பிப் பார்த்தான். செந்தாமரையும் பொன்னியும் முன்னால் வர.. சசிரேகாவும் மாலினியும் சன்னக்குரலில் எதையோ பேசிச் சிரித்தவாறு பின்னால் வந்தார்கள்.

மாலினி வந்த பின்னால்.. சசிரேகாவின் முகத்தில் தோன்றியிருந்த மலர்வை பிரபாகரன் கவனிக்கவே செய் தான்.



'ம்ஹூம்.. அவள் வந்தால் நீ மட்டுமா சந்தோஷமாக இருக்கிறாய்? நானும்தான் சந்தோஷமாக இருக்கிறேன். ஆனால்.. அவள் உன்னைக் கண்டுகொள்கிறாள். என்னைக் கண்டுகொள்ளவே மாட்டேன் என்கிறாளே..'

அவர்கள் நால்வரும் வாசலுக்குப் போய் நின்றார்கள். என்ன செய்யப் போகிறார்கள்? அதை அறிந்து கொள்ள பிரபாகரனுக்கு ஆவலாக இருந்தது.

மெதுவாக நடந்து காம்பவுண்டுச் சுற்றுச் சுவருக்கு அருகே சென்று நின்றான். அவன் நின்றுகொண்டிருந்த இடத்திலிருந்து வாசல் நன்றாகத் தெரிந்தது.

பொன்னி வாசலைப் பெருக்கி முடிக்க.. செந்தாமரைத் தண்ணீர் தெளித்தாள்.

மாலினி சேலை முந்தானையை இழுத்துச் செருகி முன்கொசுவத்தை தூக்கிச் செருகிக் கொண்டு குனிந்து அமரவும் பிரபாகரனுக்கு கண்கள் விரிந்தன.

அவள் குனிந்து அமர்ந்தபோது.. அவள் தோளின் இரு பக்கமும் சரிந்த மல்லிகைச் சரம் அவளது கன்னம் தொட்டு விளையாடியது. மார்த்தாண்டத்திற்கு வந்த பின்னால் முடியை வெட்டிவிடாததால் வளர்ந்திருந்த முடி பின்னலாக மாறி அவளது இடையைத் தொட்டது.

அந்தக் குடும்பப்பாங்கான தோற்றத்தில் அவளைப் பார்க்கும்போது அவனுள் ஏதோ செய்தது. சசிரேகாவை அண்ணாந்து பார்த்து பல்வரிசை தெரிய அவள் சிரித்த போது தாங்க முடியாமல் கையிலிருந்த செல்போனில் அவளைப் படம்பிடித்து விட்டான்.

சசிரேகாவின் கையிலிருந்து கோலப்பொடி கிண்ணம் மாலினியின் கைக்கு மாற.. அவள் தெருவை அடைத்துக் கோலம் போட ஆரம்பித்தாள்.



*காற்றோடு கலந்து..*
*உன் காதல் சொன்ன தூதை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

**மா**லினி போட்ட ரங்கோலி கோலத்தில்.. மாலினியின் சொல்படி மற்ற மூவரும் கலர் பொடியைத் தூவ ஆரம்பித்தார்கள். ஒரு பக்கம் மாலினி கோலம் போட்டுக் கொண்டே வர.. அவர்கள் அந்தக் கோலத்தில் கலர் பொடியை பரப்பிக் கொண்டே வந்தார்கள்.

''என்ன பொன்னி.. வேகம் குறையுது..'' என்றாள் சசிரேகா.

''குறுக்கு வலிக்குதும்மா..'' என்றாள் பொன்னி.

''என்னவோ.. உன் ஊரில் நாற்று நடவிட்டால்.. ஒரு மணி நேரத்திற்குள் ஒரு ஏக்கரில் நட்டுவிடுவேன்னு பெருமை பீத்திக்கிட்ட... இப்ப இந்தக் கோலத்தில் கலர் பொடியைத் தூவுவதற்குள் குறுக்கு வலிக்குதுங்கறயே.. நீ வெறும் பெருமை பீத்தல் களஞ்சியம்தானா?'' மாலினி.. கோலம் போட்டுக் கொண்டே பொன்னியிடம் வம்பிழுத்தாள்.

பிரபாகரன்.. அவளை ரசனையோடு பார்த்தான். எந்த இடத்தில் இருந்தாலும் அந்த இடத்தில் தன்னைச் சுற்றி உற்சாக அலைகளை நொடிப்பொழுதில் பரவவிடும் மாலினியின் இயல்பு அவனை என்றும் போல இன்றும் வசீகரித்தது.

''இது என்னம்மா இப்படிச் சொல்லிட்டீங்க.. அந்த



வேலையும் இந்த வேலையும் ஒண்ணா?'' பொன்னி சலித்துக் கொண்டாள்.

''அடேங்கப்பா.. என்னமா அலுத்துக்கறே பொன்னி. நாற்று நடுகிற வேலை ஈஸியானதாக்கும். கோலத்தில் கலர் பொடியைத் தூவுகிற வேலை கஷ்டமானதாக்கும்..'' மாலினியின் வாய் பேசிக் கொண்டிருக்க.. கை சரசரவென கோடுகளை இழுத்து இணைத்துக் கொண்டிருந்தது.

''நாற்று நடவு நடக்கிறப்போ நாங்க பாட்டு பாடிக்கிட்டே நாற்று நடுவோம். அலுப்புத் தெரியாது. இங்கே அப்படியா?'' பொன்னி பெருமூச்சு விட்டாள்.

''எதுக்கு இப்படிப் பெருமூச்சு விடறே பொன்னி.. நீ பாடணும்னா பாடேன். கேட்கிறதுக்கு நான் ரெடி..'' என்றாள் மாலினி.

''ஏண்டி.. கோலம் போடலாம் வான்னு வாசலுக்கு கூப்பிட்டுக் கொண்டு வந்துவிட்டு பொன்னியைப் பாட வைத்து என்னை ஓட ஓட விரட்டலாமுன்னு பார்க்கறியே.. இது உனக்கே நல்லாயிருக்கா? பொன்னி.. இவள் பேச்சை நம்பி நீ வாயைத் திறந்தேன்னு வை.. உள்ளே போய் அத்தையிடம் சொல்லிவிடுவேன்..'' சசிரேகா.. பொன்னியை மிரட்டினாள்.

''ஏம்மா.. இப்ப நான் என்ன சொல்லிப்புட்டேன்னு சின்னம்மா இப்படிக் கோவிச்சுக்கறாங்க. ஆடிப்பாடி வேலை செய்தா அலுப்பிருக்காதுன்னு சொல்லுவாங்க. அதைத் தானே நானும் சொன்னேன்..'' பொன்னி அங்கலாய்த்தாள்.

''இவ கிடக்கிறா பொன்னி. இவ காலேஜ் படித்த போது காலேஜ் ஃபங்ஷனில் ஆடிய ஆட்டத்தைப் பார்த்துத் தான் உன் சின்னய்யா இந்த மேடத்தின் மேல் காதலாகி கசிந்துருகிப் போனாராம்..'' மாலனி... சசிரேகாவின் குட்டை

உடைக்க.. பொன்னியும் செந்தாமரையும் 'ஆ..'வென்று வாய் பிளந்தார்கள்.

''அப்புறம்?'' கதை கேட்கும் ஆவலில் செந்தாமரை கேட்க.. சசிரேகா அவளை முறைத்தாள்.

''செந்தாமரையை ஏண்டி முறைக்கிற.. நீ கேளு செந்தாமரை.. அப்புறம் என்ன ஆச்சுன்னா.. கட்டினால் இவளைத்தான் கட்டுவேன்னு கருணா அத்தான் ஒற்றைக் காலில் நின்னாராம்..'' மாலினி, சசிரேகாவைப் பார்த்துக் கண் சிமிட்ட... அதை மறைந்திருந்து பார்த்த பிரபாகரன் மயங்கினான்.

''அப்புறம்?'' பொன்னி கேட்டாள்.

''அப்புறம் என்ன.. ஒற்றைக் காலில் நின்றால் அவளுக்கு கால் வலிக்குமேங்கிற அக்கறையில் இவளின் பெரியத்தான் தம்பிக்கு இவளைக் கட்டி வைத்துவிட்டாராம்.. போதுமா?''

கதை சொல்லி முடித்து மாலினி நிமிரவும்.. கோலம் கலர் பொடி தூவப்பட்டு முற்றுப் பெறவும் சரியாக இருந்தது.

''எப்படிம்மா?'' பொன்னி ஆச்சரியத்துடன் வினவினாள்.

''அது அப்படித்தான் பொன்னி... ஆடிப்பாடி வேலை செய்தால்தான் அலுப்பில்லாமல் இருக்குமா.. கதை பேசிக்கிட்டே வேலை செய்தாலும் அலுப்பிருக்காது...'' மாலினி.. இலகுவாகப் பேசிக்கொண்டே செருகியிருந்த சேலையை சரிசெய்து கொண்டாள்.

அவர்கள் நால்வரும் தள்ளி நின்று கோலத்தின் அழகை ரசிக்க.. பிரபாகரன் செடி மறைவில் நின்றுகொண்டு மாலினியின் அழகை ரசித்துக் கொண்டிருந்தான்.



வாசலில் அமர்ந்திருந்த காவலாளி.. காம்பவுண்டு கேட்டை மூடிவிட்டு கோலத்தின் முன்னால் இருந்த ஸ்டூலில் அமர்ந்து கொள்ள... அவர்கள் நால்வரும் வீட்டுப் போர்டிகோவின் முன்னால் வந்து நின்றுகொண்டார்கள். பொன்னி தண்ணீர் தெளிக்க.. மாலினி பழையபடி சேலையைத் தூக்கிச் செருகினாள்.

இப்போது பிரபாகரன்.. அங்கிருந்த சிமெண்ட் பெஞ்சில் கால் நீட்டி சாவதானமாக அமர்ந்து அவர்களை நன்றாகப் பார்க்க முடிந்தது.

மாலினி கோலத்தின் கோடுகளை இழுக்க ஆரம்பிக்க.. மற்ற மூவரும் கலர் பொடியைத் தூவ ஆரம்பித்தார்கள்.

''ஏன் பொன்னி.. நீ பாடுவாய் ஓகே.. ஆடுவதற்கு ஆளை எங்கே பிடிப்பது?'' திரும்பவும் மாலினி பேச்சை ஆரம்பித்து வைத்தாள்.

''ஏம்மா ஆளில்லே? இதோ.. இந்த செந்தாமரையை ஆடச் சொன்னா போச்சு..'' பொன்னி, செந்தாமரையைக் கை காட்ட... அவள் அலறினாள்.

''வாயை வச்சுக்கிட்டு சும்மாயிருந்து தொலை.. நம்ம பெரியம்மா காதில் விழுந்து வைச்சிரப் போகுது. நான் ஆடினா இந்த உலகம் தாங்குமா?''

''பொன்னி பாடினால்கூடத்தான் உலகம் தாங்காது. அவள் பாட ஆசைப்படவில்லையா..'' சசிரேகா, செந்தாமரையைப் பார்த்துக் கேட்டாள்.

''ஏம்மா.. என் பாட்டுக்கென்ன குறை?'' பொன்னிக்கு கோபம் வந்துவிட்டது.

''இப்ப நீயேன் முகத்தை தூக்கி வைத்துக்கறே பொன்னி. நீ பாடணும்னா பாடு.. நான் இருக்கிறேன் அதைக் கேட்க..'' மாலினி.. பொன்னியை உற்சாகப்படுத்தினாள்.

''ஏண்டி.. உன் ஒருத்தியைப் பற்றி மட்டும்தான் நீ யோசிப்பியா? எங்க இரண்டு பேரின் நிலைமையைப் பத்திக் கொஞ்சமாவது நீ நினைத்துப் பார்த்தாயா?'' சசிரேகா சண்டைக்கு வந்தாள்.

''நினைத்துப் பார்க்காமலா இதை உங்க இரண்டு பேருக்காகவும் எடுத்துக் கொண்டு வந்தேன்?'' மாலினி தன் கையிலிருந்த பஞ்சை சசிரேகாவிடம் நீட்டினாள்.

''இது எதுக்குடி?'' சசிரேகா திகைத்தாள்.

''நீயும் செந்தாமரையும் காதில் வைத்துக்கங்க..''

மாலினி கூறியதைக் கேட்டு பிரபாகரன் சத்தமில்லாமல் சிரித்தான்.

'இவளுக்கு வால் மட்டும்தான் இல்லை. மத்தபடி இவ அடிக்கிற லூட்டி இருக்கே.. அப்பப்பா.. எப்படித்தான் இவளுடைய அம்மாவின் வயிற்றில் அடங்கி... பத்து மாசம் இருந்தாளோ..' என்று பிரபாகரன் எண்ணிக் கொண்டிருக்கும்போதே...

''குறை மாதத்தில் பிறந்தவள்ங்கிறதை ப்ரூஃப் பண்ணுகிறாயேடி...'' என்று மாலினியிடம் சண்டைக்குப் போனாள் சசிரேகா.

''அடிச்சக்கை.. அதுதானே பார்த்தேன்.. இந்த அவசரக் குடுக்கை.. இவளின் அம்மாவின் வயிற்றில் பத்து மாசம் அடங்கியிருந்திருக்க மாட்டாளே.. குறைப் பிரசவத்தில் குதித்துக் கொண்டு வந்துவிட்டாளா?''

பிரபாகரனுக்கு தன் மதிப்பீடு சரியாக இருந்ததைக் கண்டு சிரிப்பு வந்தது.

''ஏம்மா.. நீங்க குறைப்பிரசவமா?'' செந்தாமரை கன்னத்தில் கை வைத்து அதிசயப்பட்டாள்.



''அதெல்லாமில்லை செந்தாமரை. இவ.. இவளுடைய அம்மாவின் வயிற்றில் இருநூற்றி தொண்ணூறு நாள்கள் இருந்தாளாம். நான்.. இருநூற்றி எண்பத்தி ஐந்து நாள்களில் பிறந்துவிட்டேனாம். மேடம்.. ஐந்து நாள்கள் அதிகமாக அம்மா வயிற்றுக்குள் இருந்ததால் இவங்க நிறைப் பிரசவமாம்.. ஐந்து நாள் குறைவாக இருந்த நான் குறைப் பிரசவமாம்..'' மாலினி விளக்கினாள்..

அந்த ஒன்றுவிட்ட சகோதரிகளின் கலகலப்பைக் கண்டு பிரபாகரனுக்கு அவர்கள் மேல் பொறாமை வந்தது.

''என்னவோம்மா.. இந்தக் கோலத்தை போடறப்பவாவது ஒரு பாட்டுச் சத்தத்தைக் கேட்டுவிட்டால் எனக்கு நிம்மதியாயிருக்கும்..'' பொன்னி ஏக்கமாய் சொன்னாள்.

''பாட்டைக் கேட்கணுமா? நீ பாடப் போறதில்லையா?'' மாலினி.. போலியாய் வியந்தாள்.

''ஏண்டி.. அவளே பாட்டுப் பாடணும்கிற ஆசையை வாபஸ் வாங்கிவிட்டாள். நீயேண்டி அவளைத் தூண்டி விடற..'' சசிரேகா.. மாலினியை முறைத்தாள்.

''இவ கிடக்கிறா பொன்னி.. நீ பாடு..'' மாலினி விடாமல் பொன்னியைத் தூண்டிவிட...

''வேண்டாம்மா.. சின்னம்மா கோவிச்சுக்கிடுவாங்க..'' என்று பொன்னி ஜகா வாங்கினாள்.

''நான் இருக்கிறேன் பொன்னி.. உனக்கு..'' மாலினி தைரியம் கொடுத்தாள்.

''நீங்க இருப்பீங்க.. நான் இந்த வீட்டில் வேலைக்கு இருப்பேனா... அதையும் பார்க்கணுமில்ல?'' பொன்னி தான் புத்திசாலி என்பதை நிரூபித்தாள்.

''இதைப் பாருடா.. நீ இத்தனை விவரமான ஆளா

பொன்னி? நான் உன்னை என்னமோன்னு நினைச்சேன்..", மாலினி பாராட்டு போல் கூறவும்..

"எப்படிம்மா நினைச்சீங்க.. கேணைன்னு நினைச்சீங்களா?" என்று பொன்னி பதிலுக்கு கேட்டாள்.

'மாலினி பொங்கிச் சிரித்தாள். அவள் சிரிப்பைக் கேட்கவும் பார்க்கவும் மிகவும் நன்றாக இருக்கிறது' என்று நினைத்துக் கொண்டான் பிரபாகரன்.

"உனக்கு என்ன வேணும் பொன்னி.. பாட்டுத்தானே வேணும்? நான் பாடுகிறேன் கேளு..."

மாலினி கோலம் போட்டுக் கொண்டே சன்னமான இனிமையான குரலில் பாடினாள்..

*"வெள்ளிக் கிழமை..*
*விடியும் நேரம்..*
*வாசலில்.. கோலமிட்டேன்..."*

"அட.. விடிஞ்சா வெள்ளிக்கிழமை.. எப்படிம்மா.. இப்படியொரு பாட்டைக் கரெக்டாப் பாடினீங்க.." மீண்டும் கன்னத்தில் கைவைத்து அதிசயித்தாள் செந்தாமரை.

"இதுகூடத் தெரியாதா... இதுக்குப் பேர்தான் சிச்சுவேஷன் சாங்... இல்லையா மாலினி.." சசிரேகா குறும்பாக சிரித்தாள்.

அவர்கள் அங்கே இல்லாதது போன்ற பாவனையுடன் மாலினி பாடலையும் கோலத்தையும் தொடர்ந்தாள்..

*"வள்ளி கணவன்...*
*பெயரைச் சொல்லி..*
*கூந்தலில் பூ முடித்தேன்.."*

மாலினியின் பாடலைக் கேட்ட பொன்னிக்கு வேறொரு சந்தேகம் வந்துவிட்டது.



"ஏய்.. இவ கேட்கிறது காதில் விழுந்ததா.. பதிலைச் சொல்லுடி.."

மாலினி... பொறுமையாக நிமிர்ந்து பொன்னியைப் பார்த்தாள்..

"அதுவா பொன்னி.. நம்ம தெய்வானைக்கு யார் புருஷனோ.. அவர்தான் வள்ளிக்கும் புருஷன்.."

இப்போது சசிரேகா.. சிரிப்பை அடக்க முடியாமல் மடங்கி உட்கார்ந்து விட்டாள்.



*நீ மலர் சிரிப்பு சிரித்து...*
*என் மனதை திருடிய விதத்தை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

வண்ணக்கோலம்.. வாசலிலும் காம்பவுண்டு வளாகத்திலும் பரந்து படர்ந்திருந்தது. அவற்றைப் பார்த்த பிரபாகரனின் மனதில் அதை உருவாக்கியவள்.. அவற்றை உருவாக்கும்போது அந்த இடத்தைச் சுற்றி பரவ விட்ட உற்சாகத்தின் அலைகள் தோன்றின. இப்போது நிறைந்திருக்கும் அமைதி சற்று முன் இந்த இடத்தில் இருந்ததா?

பொன்னியும் செந்தாமரையும் சசிரேகாவும் ஒரு வினாடிக்கு ஒரு தடவை குமுங்கிச் சிரித்துக் கொண்டிருந்தார்களே.. ஏன்?

அந்தச் சிரிப்பலைகளை அவர்களிடம் உருவாக்கியவள் சிரிக்காமல்.. ஆனால் பேச்சை நிறுத்தாமல் பேசிக் கொண்டிருந்தாளே... அவளது ஒவ்வொரு வார்த்தைக்கும்

அவளருகில் இருந்த மற்ற மூவரும்தான் வெடித்துச் சிரித்தனர்.

அப்பேர்ப்பட்டவள் அவனருகில் மௌனமாக அமர்ந்து மௌனமாக பார்த்துவிட்டுப் போய் விடுகிறாள். மற்றவர்களின் மேல் அவள் காட்டும் கருணையில் ஒரு துளியளவாவது பிரபாகரனின் மேல் அவள் காட்டினால் ஆகாதா?

கோலத்தைப் போட்டுவிட்டு அறைக்குச் சென்ற மாலினி.. குளித்து நைட்டிக்கு மாறினாள். தூங்குவதற்கு முன்னால் தாங்கள் போட்டிருந்த கோலத்தைப் பார்க்கும் ஆவல் மனதில் தோன்ற.. பால்கனிக்கு வந்தாள். குனிந்து கோலத்தைப் பார்த்தவள் அவசரமாய் பின்னுக்கு நகர்ந்தாள்.

'இவன் கோலத்துக்குப் பக்கத்தில் நின்றுகொண்டு என்ன செய்கிறான்?'

மீண்டும் பால்கனியின் கம்பி வளைவின் அருகே வந்து மெதுவாக குனிந்து பார்த்தாள்.

பிரபாகரன் கோலத்தையே பார்த்துக் கொண்டு நின்றிருந்தான்.

'தோடா.. கோலத்துக்கும் ஹிட்லருக்கும் யாதொரு சம்பந்தமும் இருக்க முடியாதே.. அப்புறம் இவனுக்கு இங்கென்ன வேலை..''

இத்தனை நாள்களாக சரியாகப் பார்க்காமல் விலகிச் சென்று கொண்டிருந்த மாலினிக்கு.. அவனறியாமல் அவன் தோற்றத்தை ரசிக்க அது ஒரு நல்ல வாய்ப்பாக தோன்றி விட்டது. கிடைத்த வாய்ப்பை நழுவவிடாமல் அவள் இறுகப் பற்றிக் கொண்டாள்.

போர்டிகோவின் முன் பக்க நியான் விளக்கின் வெளிச்சத்தில் அவன் தெளிவாகத் தெரிந்தான்.. அவனுடைய உயரத்தையும் கம்பீரத்தையும் ஆண்மை கலந்த நிமிர்வான



தோற்றத்தையும் பார்த்துக் கொண்டிருந்தவள்.. அவனால் வசீகரிக்கப்பட்டாள்.

அவன் முகத்தின் சுளிப்பை அவளால் மாடி பால்கனியிலிருந்து பார்க்க முடிந்தது. அவளுக்குத் தெரியும்.. அவளுடைய ஒரு ரகசியமான பார்வை அந்த முகச்சுளிப்பை அழித்துவிடும் என்பது.

'எப்படி.. அப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்ட இவனை எப்படி நான் மன்னிக்க?'

அவள் பெருமூச்சுடன் அங்கிருந்து நகரப் போன போது யதேச்சையாக பிரபாகரன் அண்ணாந்து பால்கனியைப் பார்த்தவன்.. அவளுடைய பார்வையைச் சந்தித்து விட்டான்.

அவன் கண்கள் மின்னுவதை அவளால் தெளிவாக கண்டுகொள்ள முடிந்தது. அங்கிருந்து நகரச் சொல்லி.. அவள் மனம் கடிந்து கொண்டது. ஆனால்.. அவள் கால்கள் நகர மறுத்து ஆணியடித்தாற் போல் அங்கேயே நிலை பெற்றுவிட.. மாலினி அசையாமல் நின்றாள்.

அவர்களின் பார்வைகள் பின்னிப் பிணைந்தன. பிரபாகரனின் மேல் விழுந்த வெளிச்சத்தில் பாதியளவுதான் மாலினியின் மேல் விழுந்தது. அந்தக் குறைந்த வெளிச்சத்திலும் அவளை பிரபாகரனால் நன்றாகப் பார்க்க முடிந்தது.

அவளது பார்வையில் தெரிந்த ஏதோ ஒன்றை பிரபாகரன் கண்டுகொண்டு விட்டான். அவள் எதிர்பார்த்த படியே அவன் முகச்சுளிப்பு இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டது. அதை ஒருவித மனத்திருப்தியுடன் அவள் பார்த்தாள். அவள் அவனைப் பார்க்க வேண்டும் என்று நினைக்கவில்லை. ஆனால்.. அவனது மன வேதனை

யிலிருந்து அவனை மீட்க நினைத்தாள். அது தானாக நடந்துவிட்ட மகிழ்வை அவள் முகம் பிரதிபலித்ததை கீழே நின்றுகொண்டிருந்த பிரபாகரன் கவனித்தான். சற்று முன்.. அவன் மனதிலிருந்த பாரம் அகன்று மயிலிறகாய் மனம் லேசானதைப் போல அவன் உணர்ந்தான்.

அதற்கு மேல் அங்கே நிற்க முடியாதவளாய் மாலினி உள்ளே ஓடிவிட்டாள். பிரபாகரன் ஒரே தாவில் வீட்டுப் படிகளைத் தாவி ஏறிக் கடந்து மாடிப்படிகளில் விரைவாக ஏறினான். பால்கனியிலிருந்து முகச் சிவப்புடன் மாலினி மாடி ஹாலுக்குள் வருவதற்கும் அவன் அவள் முன்னால் வழிமறித்ததைப் போல போய் நிற்பதற்கும் மிகச் சரியாக இருந்தது.

தன் எதிரில் நிற்பவனைப் பார்த்ததும் ஆச்சரியத்தில் மாலினி இமை கொட்டி விழித்தாள்.

'இப்போதுதானே.. இவன் கீழே நின்றுகொண்டிருந் தான். அதற்குள் எப்படி இங்கே வந்தான்?'

அவளது திகைப்பை ரசிக்கும் முறுவல் ஒன்று அவன் முகத்தில் உதித்தது.

அவன் அவளைப் பார்த்து புருவங்களை கேலியாக உயர்த்தினான்.

அவள் பிடிபட்டுவிட்ட உணர்வுடன் பார்வையை தழைத்துக் கொண்டாள். அங்கிருந்து அவசரமாக நகரப் போனவளை நர்மதாவின் குரல் தடுத்து நிறுத்தியது.

''கோலம் அழகாயிருக்கு மாலினி...''

இவள் எப்போது வந்தாள் என்ற உணர்வுடன்,

''தேங்க்ஸ் அத்தை..'' என்றாள் மாலினி.

''ஆச்சரியம்தான்.. இல்லையாடா பிரபா...'' நர்மதா மகனின் பக்கம் திரும்பிக் கேட்டாள்.



'எதற்கும்மா?' என்று பதிலுக்கு கேட்காமல்..

''ஆமாம்.. அம்மா..'' என்றான் அவன்.

'இவன் ஆமாம் சாமி போடும் ஆளில்லையே.. அப்புறம் எதற்கு இப்போது ஆமாம் சாமி போடுகிறான். அப்படி எந்த ஆச்சரியத்தை என்னிடம் கண்டுவிட்டான்?'

மாலினியின் விழி வினவிய வினா பிரபாகரனுக்குப் புரிந்தது.

'உன்னிடம் ஒரு ஆச்சரியம்தான் இருக்கிறதா.. ஓராயிரம் ஆச்சரியங்கள் உண்டே...'

அவன் மனதிற்குள் சொல்லியபடி அவளைப் பார்த் தான். அவள் மனம் சொல்லியதை அவனுடைய விழியும் சொல்லியதோ என்னவோ.. அவள் உதட்டைக் கடித்துக் கொண்டாள். உடனே அவளது உதடுகளின் மீது அவனது பார்வை படிந்தது. அவள் முகம் சிவந்து போனாள்.

ஒரு நாள்.. இரண்டு நாள்கள் அல்ல.. ஆறு மாதங் களாக அவள் விலகிப் போனதில் ஏற்பட்டிருந்த மனத் துயரம் மாயமாய் மறைய.. அவன் உல்லாசம் நிரம்பிய விழிகளோடு அவளைப் பார்த்தான்.

''சென்னையில் பிறந்து.. கான்வென்டில் படித்த இன்ஜினீயர் பெண்ணுக்கு.. இவ்வளவு அழகான கோலம் போடத் தெரிகிறதே..''

தான் ஆச்சரியப்பட்டதற்கான காரணத்தை நர்மதா கூறினாள்.

''இதை அம்மா சொல்லிக் கொடுத்தாங்க அத்தை..'' மாலினி வெட்கத்துடன் சொன்னாள்.

''அம்மா கற்றுக் கொடுப்பதை அக்கறையாய் கற்றுக் கொள்ளும் பெண்கள் குறைவுதான். அந்த வகையில் நீயும்

சரி.. சசியும் சரி.. படித்திருந்தாலும் குடும்பத்திற்கு ஏற்ற பெண்களாக இருக்கறீங்க..''

சசிரேகாவுடன் இணைத்து தன்னையும் நர்மதா கூறியதில் லேசாக சங்கடமடைந்தாள் மாலினி.

சசிரேகா அந்த வீட்டின் மருமகள்.. மாலினி வெறும் விருந்தாளி.. இருவரும் எப்படி இணையாக முடியும்?

நர்மதா அதை உணர்ந்து கொண்டாளோ இல்லையோ.. கழுகுக்கு மூக்கு வியர்த்ததைப் போல அங்கே வந்துவிட்ட ஸ்வேதா உணர்ந்து கொண்டாள். அவள் முகம் கடுத்தது.

''அது என்னவோ அத்தை... என் வீட்டில் என் அம்மா இதையெல்லாம் எனக்குச் சொல்லித் தரவில்லை..'' விழிகள் பளபளக்க ஸ்வேதா கூறினாள்.

நிச்சயம் அவள் நல்லவிதமாய் பேசப் போவதில்லை என்று மாலினிக்கு புரிந்துவிட்டது.

அது புரியாத நர்மதா.. இயல்பாகச் சிரித்தாள்.

''அண்ணிக்கே.. அது தெரியாதே.. அவங்களுக்குத் தெரிந்திருந்தால்தானே உனக்குச் சொல்லிக் கொடுத்திருப்பாங்க...''

கோலம் போடுவதைப் பற்றித்தான் ஸ்வேதா சொல்கிறாள் என்ற நினைவுடன் நர்மதா பேசுவது மாலினிக்கு தெரிந்தது. அவள் முகம் இறுக.. ஸ்வேதாவை சட்டை பண்ணாமல் நர்மதாவைப் பார்த்துக் கொண்டே நின்றாள்.

''அம்மாவுக்கு என்ன அத்தை.. என் பாட்டி.. கொள்ளுப் பாட்டி.. ஏன்.. எங்க பரம்பரையில் இருக்கும் பெண்களுக்கே இது தெரியாது..''

ஸ்வேதா பல்லைக் கடித்தபடி தன்னையுமறியாமல்



பிரபாகரனைப் பார்த்தாள். அவன் விழிகளால் அவளை அமைதியாக இருக்கும்படி சமிக்ஞை செய்தான்.

''இல்லையே... பாட்டிக்கு கோலம் போடத் தெரியுமே..'' நர்மதா கோலத்தைப் பற்றிய பேச்சிலேயே நின்றாள்.

''அம்மா.. காயத்ரியின் நகைகளை பேங்க் லாக்கரிலிருந்து எடுத்து வந்து கொடுத்தேனே.. அதைப் பத்திரப் படுத்தி விட்டீங்களா...''

பிரபாகரன் நினைவுக்கு வந்ததைப் போல திடீரென்று கேட்கவும்.. நர்மதாவின் கவனம் திசை திரும்பியது.

''பத்திரமாய் வைத்துவிட்டேன்ப்பா..'' அவள் அவசரமாகப் பதில் சொன்னாள்.

பிரபாகரன் பேச்சை மாற்றிவிட்டதை மாலினி.. ஸ்வேதா இருவருமே புரிந்து கொண்டார்கள்.

'அவ்வளவு அக்கறையா இவள் மீது..' ஸ்வேதா ஆத்திரப்பட்டாள்.

''எதற்கும் அந்த அறைச்சாவியை உங்க பொறுப்பிலேயே வைத்துக்கங்கம்மா.. வீடு பூராவும் விருந்தாளிகள் கூட்டம் வரப்போகுது..'' பிரபாகரன் மேலும் நர்மதாவை கலவரப்படுத்தினான்.

''என்ன பிரபா இது.. நம் சொந்தக்காரங்க மீது நாமே சந்தேகப்படலாமா?'' நர்மதா ஆட்சேபித்தாள்.

''அதுதானே.. நம் வீட்டுக்கு வருகிற நம் பக்கத்து சொந்தக்காரங்க யாரும் அன்னக்காவடி இல்லையே அத்தான். அவங்களுக்கு வைர நகைகள் புதிதில்லையே... ஒருவேளை இதைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்காத விருந்தாளியை நினைத்து நீங்க பயப்படறீங்களோ..'' ஸ்வேதா சரியானபடி தாக்கிவிட்டாள்.

மாலினியின் முகம் கோபத்தில் சிவந்தது. நர்மதா மட்டும் பக்கத்தில் நிற்காமல் இருந்திருந்தால் அவள் ஸ்வேதாவை ஒரு கை பார்த்திருப்பாள். ஆனால்.. வீட்டிற்கு எஜமானி அருகில் நிற்கும் உணர்வோடு பல்லைக் கடித்துக் கொண்டு பொறுமையாக நின்றாள்.

''ஊஹூம்.. நீ புரியாமல் பேசுகிறாய் ஸ்வேதா.. வைர நகைகளைப் பற்றித் தெரிந்தவங்களால்தான் ஆபத்தே வரும். எங்கள் காயத்ரியின் வைர நகைகள்.. பரம்பரையாய் இந்த வீட்டில் பிறக்கும் பெண்களுக்கு கொடுக்கப்படுபவை. அதன் மதிப்பை வார்த்தையால் சொல்ல முடியாது. விலை கொடுத்தாலும் அப்படிப்பட்ட வைர நகைகளை இப்போது வாங்க முடியாது. இதையெல்லாம் நகைமேல் பித்தாக இருக்கிறவங்கதான் தெரிஞ்சு வைத்துக்குவாங்க. கோலத்தையும் வானத்தையும் தென்றலையும் இசையையும் ரசிக்கும் ரசிக மனதைக் கொண்டவங்க கண்டுக்கவே மாட்டாங்க. அவங்களுக்கு வைரத்தை விட வானவில் உயர்த்தியாய் தெரியும். ஸோ.. நகைகளைப் பற்றித் தெரிந்த உன் போன்ற ஆளுககிட்ட இருந்துதான் நகைகளைப் பாதுகாக்க வேண்டும்...''

பிரபாகரன் இப்படி நேரடியாய் பேசிவிடுவான் என்று எதிர்பார்த்திராத ஸ்வேதாவின் முகம் கன்றிப் போய்விட்டது.

''என்னைப் பார்த்தால்.. திருடியைப் போல் உங்களுக்குத் தெரிகிறதா அத்தான்...'' அவள் கண் கலங்கக் கேட்டாள்.

நர்மதாவும் பிரபாகரனை ஆச்சரியத்துடன் பார்த்தாள். அவளுடைய மூத்த மகன்.. எல்லோரிடமும் கண்டிப்பாக இருப்பான். ஆனால், தேவையில்லாமல் யாரையும் புண்படுத்த மாட்டான். அவனா இப்படிப் பேசுவது?






*உன் சின்னஞ்சிறு சொல்லால்...*
*என் மனதை சிதற வைத்த விதத்தை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

பிரபாகரன் மிகவும் கண்டிப்பான நிர்வாகி. நர்மதாவிடம்கூட முகத்தில் ஒரு கண்டிப்போடுதான் பேசுவான். வீட்டு வேலையாள்களுக்கு அவன் சிம்ம சொப்பனம். உடன் பிறந்தவர்களோ அவன் முகத்தைப் பார்த்து பேசக் கூட பயப்படுவார்கள். அப்படிப்பட்ட இயல்புடையவன் இதுவரை கோபச் சொல்கள் பலவற்றை உதிர்த்திருக்கிறான். ஆனால், சுடுசொல்லை உதிர்த்ததில்லை.

இன்று ஸ்வேதாவிடம் அவன் பேசிய ஒவ்வொரு சொல்லும் அமிலச் சொல். இதையேன் பிரபாகரன் பேசினான் என்ற ஆராய்ச்சியில் அவள் மனம் இறங்கியது.

பிரபாகரனுக்கு ஸ்வேதாவைப் பிடிக்காது. கொஞ்சம் கூப் பிடிக்காது. இதை நர்மதா நன்கு அறிவாள். பிடிக்காததனால் அவன் இதுவரை விலகிப் போயிருக்கிறானே யொழிய... ஸ்வேதாவின் மனம் வலிக்கப் பேசியதில்லை. இப்போது மட்டும் அவனுக்கு என்னவாயிற்று?

அதை அறிய வேண்டிய அவசியம் தனக்கு இருப்பதாக அவள் உணர்ந்தாள்.

''என்ன விஷயம் பிரபா?'' நர்மதா மகனின் முகம் பார்த்துக் கேட்டாள்.

''அம்மா.. உங்களிடம் நிறைய தடவை நான் சொல்லியிருக்கிறேன். என்னதான் உறவுக்காரப் பெண்ணாக

இருந்தாலும் நம் வீட்டு விவகாரங்களில் தேவையில்லாமல் ஸ்வேதா மூக்கை நுழைக்கக் கூடாதுன்னு..'' பிரபாகரன் கோபமாகக் கூறினான்.

''ஆமாம்..'' நர்மதா சங்கடத்துடன் பதில் சொன்னாள்..

''அவள் அதைக் கேட்பதாக இல்லை. தேவையில் லாமல் மூக்கை நுழைத்தால் இப்படி மூக்கு உடைபடத் தான் செய்யும்.. நீங்க இதைக் கண்டு கொள்ளாதீங்க..'' பிரபாகரனின் குரலில் கண்டிப்புத் தெரிந்தது.

''இருந்தாலும் பிரபா.. அவள் நம் வீட்டு விருந்தாளி..''

''அந்த நினைவு அவளுக்கும் இருக்க வேண்டு மில்லையா? இதோ மாலினியும்தானே நம் வீட்டில் இருக் கிறாள்.. ஒரு நாள் ஒரு பொழுதாவது அதிகப்படியாய் ஒரு வார்த்தை பேசியிருப்பாளா.. தேவையில்லாத விஷயங் களில் மூக்கை நுழைத்திருப்பாளா?''

''மாலினி.. கெட்டிக்காரப் பெண் பிரபா...''

நர்மதா வாஞ்சையுடன் மாலினியைப் பார்த்து புன்னகைத்து வைக்க... ஸ்வேதாவிற்கு தாங்க முடிய வில்லை.''

''அத்தான்.. இது கொஞ்சம்கூட நன்றாக இல்லை...''

''எது?''

''என்னை இந்தப் பெண்ணுடன் இணை சேர்ப்பது..''

''அதுதானே பார்த்தேன். நீ இங்கேதான் வருவாய்ன்னு எனக்கு நல்லாத் தெரியும். கேட்டுக்கங்க அம்மா.. இவள் மனம் புண்பட நான் பேசியதைவிட இவளை மாலினிக்கு இணையாக நான் பேசியதுதான் இவளைப் பாதித்திருக் கிறது..''



நர்மதா சட்டென்று மகனின் கோபத்திற்கான ஆணிவேரைக் கண்டுபிடித்து விட்டாள். அவள் முகத்தில் இப்போது கடுமை வந்திருந்தது.

''ஸ்வேதா... இதைப் போல் பேசுவது இதுவே கடைசி யாக இருக்கட்டும்..'' என்று ஸ்வேதாவிடம் சொன்னாள்.

''அத்தை...'' ஸ்வேதாவின் வாய் அடைத்துக் கொண் டது.

''பேசாதே.. நீ இந்த வீட்டில் எப்படியோ அதுபோல் தான் மாலினியும். இதில் சமமாக பேசக்கூடாதுன்னு எந்த அர்த்தத்தில் சொல்கிறாய்?''

''நான் உங்கள் அண்ணன் மகள் அத்தை...''

''ஒன்றுவிட்ட அண்ணனின் மகள். மாலினியும் சசிரேகாவின் ஒன்றுவிட்ட சித்தப்பாவின் மகள். உனக்கு இருக்கும் அதே உரிமை மாலினிக்கும் இருக்கிறது. நான் இந்த வீட்டின் எஜமானியென்றால்.. சசிரேகா இந்த வீட்டின் சின்ன எஜமானி. என் சொந்தமென்று இந்த வீட்டில் தங்க உனக்கு உரிமையிருக்கும்போது அவளுடைய சொந்த மென்று தங்க மாலினிக்கும் உரிமையிருக்கிறது..''

''அது எப்படி அத்தை.. இவளும் நானும் எப்படிச் சமமாவோம்..''

''இல்லைதான். மாலினிக்கு நீ சமமில்லைதான். மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் படித்துவிட்டு சென்னை யிலிருந்து மார்த்தாண்டத்திற்கு வேலை பார்க்கவென்ற காரணத்துடன் வந்தவள் மாலினி.. உன்னைப் போல் எந்தக் காரணமும் இல்லாமல் இந்த வீட்டைச் சுற்றவில்லை..''

''அத்தை..''

நர்மதா இதைப் போல் பலமுறை ஸ்வேதாவை கண்டித்திருக்கிறாள். ஆனால்.. அப்போதெல்லாம் ஸ்வேதா

தனியாக அவளிடம் மாட்டியிருந்தாள். ஆனால்.. இப்போது மாலினியின் முன்னால் நர்மதா திட்டியதை அவளால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

நர்மதாவிற்கோ கோபம் கரைபுரண்டு கொண்டிருந்தது. இந்த ஆறு மாத கால அளவில் அவள் மாலினியைக் கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். அந்த வீட்டில் இருக்கும் இடம் தெரியாமல் வளைய வந்து கொண்டிருந்தாள் மாலினி. ஒரு வார்த்தை அதிகமாய் பேசியதில்லை. முதல் நாளுக்கு பின்னால் தினகரன் வலிய வந்து பேசும் போதெல்லாம் நிமிர்ந்து அவன் முகத்தைப் பார்த்து பதில் சொன்னதில்லை. பிரபாகரனுடன் காரில் போய் வந்தாலும் தேவையில்லாமல் அவனிடம் நின்று பேசியதில்லை.

இத்தனைக்கும் தன் கலகலப்பான சுபாவத்தால் வீட்டில் இருந்த வேலையாள்களைக்கூட கவர்ந்திருந்தாள் மாலினி. ஆயினும்.. நர்மதாவின் முன்னால் அமைதியாகத் தான் இருப்பாள்.

'குடும்பத்திற்கு ஏற்ற பெண்...'

மாலினியைப் பற்றிய நர்மதாவின் மதிப்பீடு இது. காயத்ரி, மாலினியைப் பற்றி வியந்து பேசுவாள்.

''சின்ன அண்ணியின் தங்கை வெரி ஸ்மார்ட்ம்மா. அவங்ககூடப் பேசினால் எத்தனை விஷயம் தெரியுது தெரியுமா.. உலக அரசியல் முதல் பேட்டை அரசியல் வரை விரல் நுனியில் தெரிந்து வைத்திருக்கிறாங்க. விளையாட்டா.. கிரிக்கெட் முதற்கொண்டு நம்ம ஊரு கபடி வரை அவங்களுக்கு அத்துப்படி. சினிமாவா.. 'டைட்டானிக்'கில் ஆரம்பித்து நம்ம ஊர்.. 'அழகர்சாமியின் குதிரை...' வரைக்கும் அக்குவேறு ஆணிவேராய் கமெண்ட் பண்ணுகிறாங்க. மார்வலெஸ் கேர்ள்..''



காயத்ரி யாரையும் இப்படிப் புகழ்ந்து பேசமாட்டாள். அத்தனை வருடங்களாய் அறிந்த ஸ்வேதாவைப் பற்றிப் பேச்சு வந்தால் பேசுவதற்கு ஒன்றுமேயில்லை என்பதைப் போலத் தோளைக் குலுக்கிக் கொண்டு போய்விடுவாள்.

அத்தகைய குண இயல்புடைய மாலினியை ஸ்வேதா குறைவாக பேசுகிறாள். அதுவும்.. நர்மதாவின் முன்னாலேயே பேசுகிறாள் என்றால் அதைக் கேட்டுக் கொண்டு எப்படி பொறுமையாய் இருப்பது. நர்மதா கோபம் கொண்டாள்.

''நானும் பேசக்கூடாதுன்னு பார்த்தேன். நீ என்னைப் பேச வைக்கிறாய். உன் சிறுபிள்ளைத்தனத்திற்கு அளவேயில்லாமல் போய்விட்டது. உன்னைப் பொறுத்துக் கொள்ள வேண்டிய அவசியம் எனக்கில்லை. உன் அப்பாவின் முகத்திற்காக பார்க்கிறேன்..''

''அப்பாவின் நினைவுகூட இல்லாமல் என்னை இப்படி மூன்றாம் மனுஷியின் முன்னால் நிற்க வைத்துப் பேசலாமா அத்தை...'' சட்டென்று ஸ்வேதா.. நர்மதா விட்ட நூல் முனையைப் பிடித்துக் கொண்டாள்.

''சட்... உன் புத்தி உன்னை விட்டுப் போகவே போகாதா.. உன்னைப் பெத்தவங்களை எனக்கு நான் பிறந்ததிலிருந்து தெரியும். மாலினியைப் பெத்தவங்களை நான் பார்த்ததுகூட இல்லை. பெத்தவங்களின் முகத்தாட்சண்யத்திற்காக மாலினியைப் பார்க்க வேண்டிய அவசியமில்லாமல் நடந்து கொள்கிறாளே.. அவள் பெண்ணா.. இல்லை நீ பெண்ணா..''

ஸ்வேதா வாயை வைத்துக் கொண்டு சும்மாயிருந்தாலாவது நர்மதா அத்துடன் விட்டுவிட்டுப் போயிருப்பாள். அவள் மேலும் வாயைக் கொடுக்கவும்.. நர்மதாவின்

கோபம் அதிகமாகிவிட்டது. அவள் தன் கோபத்தை கொட்ட ஆரம்பித்து விட்டாள்.

''இந்தக் குடும்பம் பணத்தை மட்டும் பார்க்கும் குடும்பமில்லை. குணத்தையும் பார்க்கும் குடும்பம். சசிரேகாவிடம் அது நிறைய இருக்கிறது. எங்கள் வீட்டின் பரம்பரைப் பெருமையைக் காப்பாற்றும் விதமாகத்தான் அவள் நடந்து கொள்கிறாள். அவளின் தங்கையென்ற மரியாதையை மாலினியும் காப்பாற்றிக் கொண்டிருக்கிறாள். கொஞ்ச நேரத்திற்கு முன்னால் எதையோ ஜாடையாக சொல்ல வந்தாயே.. என்ன சொல்ல வந்தாய்?''

நர்மதா, ஸ்வேதாவின் பேச்சைக் கவனித்துக் கொண்டு தான் இருந்திருக்கிறாள் என்பதை உணர்ந்து கொண்ட மாலினியின் மனதில் நர்மதாவைப் பற்றிய மதிப்பீடு உயர்ந்தது.

'இந்த அம்மாதான் எவ்வளவு நுணுக்கமா எல்லாவற்றையும் கவனிக்கிறாங்க...'

அவள் பார்வையும் பிரபாகரனின் பார்வையும் சந்தித்துப் பிரிந்தன. அதைக் கவனித்துவிட்ட ஸ்வேதாவின் ஆத்திரம் பன்மடங்காகப் பெருகிவிட்டது.

''என்ன சொல்ல வந்தேன்.. என் பரம்பரையில் இருக்கும் பெண்களுக்கு சுட்டுப்போட்டாலும் இது தெரியாதுன்னு சொல்ல வந்தேன்...''

''எது?''

நர்மதாவின் குரல் கண்டிப்பாக ஒலித்தது. அவள் முகத்தில் தெரிந்த கோபாக்கினியின் ஜுவாலையைக் கண்டு மாலினியே அச்சமுற்றாள். பிரபாகரனின் கோபம் எங்கிருந்து வந்தது என்பதை அவளால் கண்டுகொள்ள முடிந்தது.



ஆனால் ஸ்வேதா.. அதை சட்டை செய்யவே இல்லை. இந்த வீட்டுக்கு மருமகளாக வேண்டுமென்ற கனவு அவளுக்குள் இருந்தது உண்மைதான். அதற்காக எவ்வளவு தான் பொறுத்துப் போவதென்ற அளவு இல்லையா.. நர்மதாவின் வாய்வார்த்தையை வேதவாக்காக எடுத்துக் கொள்ள அவளென்ன சசிரேகாவைப் போல அன்றாடங் காய்ச்சியின் வீட்டிலிருந்து வந்தவளா?

'நான் மட்டும் இந்த வீட்டிற்கு மருமகளாக வந்தேன் என்றால்.. இந்தக் கிழவியைத் தூக்கி மூலையில் உட்கார வைத்துவிடுவேன்..'

அப்படியொரு வன்மம் நர்மதாவின் மேல் ஸ்வேதாவிற்கு நீண்ட நாள்களாக உண்டு.

''இப்படி முறையில்லாமல் காதல் வலைவீசி பணக்கார வீட்டு ஆண்பிள்ளைகளை கைக்குள் போட்டுக் கொள்வது..''

''ஸ்வேதா...''

இப்போது மாலினி அதிர்ந்து போய்விட்டாள். எவ்வளவு தைரியம் இருந்தால் ஸ்வேதா இதைப் போல் பேசுவாள்? அவள் உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. அப்போதுதான் நர்மதா அந்தக் காரியத்தைச் செய்தாள்.

ஸ்வேதாவின் கன்னத்தில் ஓங்கி அறைந்துவிட்டாள்.

''அத்தை..'' ஸ்வேதா கன்னத்தைப் பிடித்துக் கொண்டு சிலையாக நின்றுவிட்டாள்.

''நானும் பொறுமையாய் பேசிப் பார்க்கிறேன். நீ அடங்க மாட்டேன்னு அடம்பிடிக்கிறாயே. இப்படிப்பட்ட வார்த்தைகளை இந்த வீட்டுப் பெண்களைப் பார்த்துப் பேசும் தைரியத்தை உனக்கு யார் கொடுத்தது?''

''நான் இந்த வீட்டுப் பெண்ணில்லையா?''

''இல்லை.. இனி அப்படியொரு நிலையும் வராது. எவ்வளவு தைரியம் உனக்கு.. என் பெரியப்பாவின் பேத்தியாக இருந்தால் நீ என்ன வேண்டுமானாலும் பேசிவிடுவாயா?''

''நான் அப்படியென்ன தப்பாக பேசிவிட்டேன். கருணா அத்தானை அந்த சசி காதல் கல்யாணம் பண்ணிக் கொண்டு இந்த வீட்டுக்குள் வந்தவள்தானே..''

''அடித்துப் பல்லைக் கழட்டி விடுவேன்.. ராஸ்கல். என் மருமகளைப் பார்த்து என்ன வார்த்தை பேசுகிறாய்.. கருணா.. சசியைக் காதலித்தான். அது உண்மை.. ஆனால், அவங்க இரண்டு பேரும் காதல் கல்யாணம் பண்ணிக் கொள்ளவில்லை. கருணா அவன் மனதிலிருந்ததை என்னிடமும் பிரபாவிடமும் சொன்னான். நாங்க சசியைப் போய் பெண் பார்த்தோம். குறை சொல்ல முடியாத நிறைகுடமாய் அவள் இருந்தாள். இப்போதும் இருக்கிறாள். இனியும் இருப்பாள். எங்க குடும்பத்திற்கு ஏற்ற பெண்ணுன்னு முடிவு பண்ணினோம். கல்யாணம் பண்ணி வைத்தோம். எங்கள் சம்மதமில்லாமல் கருணா ஒரு காரியத்தையும் செய்ததில்லை. இனியும் செய்ய மாட்டான்..''

கருணாகரனை மணந்துகொள்ள வேண்டுமென்ற கனவு ஒரு காலத்தில் ஸ்வேதாவிடம் இருந்தது. எல்லா முறை மாப்பிள்ளைகளுக்கும் கண்களால் வலைவீசிக் கொண்டிருந்தவள்.. கருணாகரனின் மீது அதிகமாக வலை வீசினாள். ஆனால்.. அவனோ சசிரேகாவை மணந்து கொண்டான். அந்த ரணம் இன்னும் அவள் மனதில் மீதமிருந்தது.

''காதல்னு சொல்லி.. சசி இந்த வீட்டில் நுழைந்தாள்னு சொல்லுங்க. இல்லாவிட்டால்.. இந்த வீட்டின் மருமகளாக அவளால் முடியுமா? இந்த வாழ்க்கையை கனவில் நினைத்துப் பார்க்கக்கூட அவளுக்கு தகுதியில்லை. பட்டும் தங்கமுமே அவளுக்கு எட்டாக்கனி. இதில் வைரங்களும் மாளிகையும் இந்த சொத்து சுகமும் கிடைக்குமுன்னு அவள் நினைத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டாள். எனக்கு என் அப்பா.. கொடுக்கப் போகும் சீர்வரிசைகளின் மதிப்பாவது அவளுக்குத் தெரியுமா.. என் ஒரு வைர மாலைக்கு ஈடாக மாட்டாள் அவள்.. அவளெல்லாம் இந்த வீட்டுக்கு மருமகள்..''



''வாயை மூடுன்னு சொன்னேனா இல்லையா? உன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வருகிறவன்.. உன்னிடம் இருக்கிற வைரங்களுக்காகவும் சொத்து சுகத்திற்காகவும்தான் உன்னைப் பெண் கேட்டு வருவான். உனக்காக.. உன் அழகுக்காக.. உன் குணத்திற்காக உன்னைப் பெண் கேட்டு வர மாட்டான். ஆனால்.. சசியை அவளுக்காக நாங்கள் பெண் கேட்டுப் போனோம். அவளுக்கு நீ ஈடா?''

''அத்தை...''

''உனக்கு ஒன்று தெரியுமா.. சசி.. கருணாவைக் காதலித்தபோது அவன் இவ்வளவு பணக்காரன்னு அவளுக்குத் தெரியாது. தெரிந்தவுடன் விலகிப் போயிருக்கிறாள்..''

''எல்லாம் நடிப்பு...''

''அவளுக்கு நடிக்கத் தெரியாது. அதுக்கான அவசியமும் அவளுக்கு இல்லை. ஏன் இவ்வளவு சொல்கிறாயே... இந்த வீட்டின் பெருமைக்காகவும் சொத்து சுகத்திற்காகவும் தானே நீ இந்த வீட்டு ஆண்களை சுற்றி வருகிறாய்?''

'கேட்டாளே ஒரு கேள்வி..' மாலினிக்கு நர்மதாவை கட்டிப் பிடித்துக் கொஞ்ச வேண்டும் போல இருந்தது.

'அத்தை..'

''போதும் ஸ்வேதா.. இத்தோடு நிறுத்திக்கொள். இனியும் நீ என் மருமகளைப் பற்றியோ அவளுடைய தங்கையைப் பற்றியோ குறைவாக ஒரு சொல் சொன்னாலும் நான் சும்மாயிருக்க மாட்டேன். உன் வீட்டாரை வரவழைத்து விஷயத்தைச் சொல்லி உன்னை அவங்களோடு அனுப்பி வைத்துவிடுவேன். அதற்குப் பின் நீ இந்த வீட்டில் காலடி வைக்கவே முடியாது..''

''அத்தை..''

ஸ்வேதா ஸ்தம்பித்து விட்டாள். இப்படிப்பட்ட கடுமையை நர்மதா வெளிப்படுத்துவாள் என்று அவள் நினைத்துக்கூடப் பார்த்தது இல்லை.

''போ.. போய் உன் ரூமில் உட்கார்ந்து நீ நடந்து கொள்ளும் முறையை யோசித்துப் பார்..''

நர்மதா கடுமையாய் ஸ்வேதாவின் அறையை நோக்கி கை காட்டவும்.. ஸ்வேதா அங்கிருந்து ஓடியே போய் விட்டாள்.

32

*உன் நிழல் தேடி.. என் நெஞ்சம்..*
*தினம் தவிக்கும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

'கொடுத்து வைத்தாள்' ஆயிரத்து ஐந்தாவது முறையாக சசிரேகாவைப் பற்றி ஆச்சரியத்துடன் நினைத்துக் கொண்டாள் மாலினி.



எப்பேர்ப்பட்ட குடும்பம் இது.. ஸ்வேதா மிகைப் படுத்திக் கூறினாலும் அதில் சிறிதளவு உண்மை இருக்கத் தானே செய்கிறது?

சசிரேகாவின் குடும்பம் ஏழ்மையானதுதான். அந்த வீட்டில் பிறந்த பெண்ணிற்கு கண்ணுக்கு லட்சணமாய் கணவனும் கிடைத்து அவனுடைய காதலும் சேர்த்துக் கிடைப்பதே பெரிய வரம்.

சசிரேகாவிற்கு அது கிடைத்தது. கணவனின் குடும்பம் மிகப் பெரிய பணக்கார குடும்பமாக அமைந்துவிட்டதில் அவளுக்குச் சந்தோஷம்தான் என்றாலும்.. அது இல்லாமல் கருணாகரன் சாதாரண கூலித் தொழிலாளியாக இருந்திருந் தாலும் அவள் அதை பெரிதாக நினைத்திருக்க மாட்டாள்.

அவளுக்கு வேண்டியது கருணாகரன் மட்டும்தான். ஆனால்.. நர்மதாவின் அன்பு.. பாசம்... மருமகளின் மேல் அவர் காட்டிய கனிவு.. இவையெல்லாம் காணக் கிடைக் காத பொக்கிஷம் அல்லவா?

ஸ்வேதா.. நர்மதாவின் சொந்தப் பெரியப்பாவின் பேத்தி.. ஒன்றுவிட்ட அண்ணன் மகள்.. அவளையே தன் வீட்டிற்கு வந்த மருமகளுக்காக தூக்கி எறிந்துவிட்டா ளென்றால் சசிரேகாவின் அதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது.

அந்த நொடியில்.. சசிரேகாவை நினைத்து மாலினிக்கு லேசாக பொறாமை வந்தது. அது அவளுடைய புகுந்த வீட்டின் அளவற்ற செல்வத்தை நினைத்து வரவில்லை. அவளுக்குக் கிடைத்திருக்கும் அருமையான உறவுகளை நினைத்து வந்தது.

அதிகாலையில் விழிப்பு வந்தவுடன் கோலத்தின் நினைவுதான் மாலினிக்கு முதலில் வந்தது. அழிந்து

விட்டிருக்குமோ என்ற அச்ச உணர்வு தலைதூக்க.. அவள் எழுந்து உடை மாற்றிக் கொண்டு கீழே ஓடினாள்.

கோலம் அழகாக.. அப்படியே அலுங்காமல் இருந்தது. அதைப் பார்த்து ரசித்த வண்ணம் நின்றுகொண்டிருந்த வளின் நாசியில் காபியின் மணம் நுழைந்தது.

'ஸ்.. ஆ...' என்று ரசித்து அந்த நறுமணத்தை நுகர்ந்த படி திரும்பினாள் மாலினி.

''என்னம்மா.. அப்படி வாசம் பிடிக்கறீங்க..'' வாயெல் லாம் பல்லாக கேட்டபடி காபி தம்ளரை நீட்டினாள் செந்தாமரை.

''அன்னபூரணி மெஸ் காபியின் மணம் கமழும்போது அதை ரசித்து வாசம் பிடிக்கத் தோணுமா.. இல்லை குடிக்கத் தோணுமா..'' என்று கேட்டபடி காபித் தம்ளரை வாங்கிக் கொண்டாள் மாலினி.

''அன்னபூரணி மெஸ்ஸா..'' கண்களை அகல விரித் தாள் செந்தாமரை.

''நம்ம கிச்சன் கேபினட் மினிஸ்டரைத்தான் சொன் னேன்...'' மாலினி சிரித்தாள்.

''ஏம்மா... மினிஸ்டருன்னா மந்திரிதானுங்களே..'' செந்தாமரை சந்தேகம் கேட்டாள்.

''மந்திரியேதான்..''

''நம்ம வீட்டில் யாருக்கும்மா கோழி மந்திரின்னு பெயரை வைத்திருக்கீங்க...''

''கோழி மந்திரியா?''

காபி குடிப்பதை நிறுத்திவிட்டு செந்தாமரையை விசித்திரமாகப் பார்த்தாள் மாலினி.

''ஆமாம்மா.. கோழி மந்திரிதான். நீங்கதானே சிக்கன் மினிஸ்டருன்னு சொன்னீங்க..''



'இவள் கிச்சன் கேபினட் மினிஸ்டருன்னு சொன் னதை சிக்கன் மினிஸ்டருன்னு நினைத்து விட்டாள்..'

மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது. அவள் ஏன் அப்படி வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரிக்கிறாள் என்று புரியாமல் செந்தாமரை விழித்தாள்.

''ஹைய்யோ.. ஹையோ.. செந்தாமரை.. அது சிக்கன் மினிஸ்டரில்ல. கிச்சன் மினிஸ்டர்..''

''அப்படின்னா?''

''கிச்சன்னா சமையல்கட்டு...''

''ஓ.. நீங்க நம்ம அன்னபூரணியை சமையல்கட்டு மந்திரின்னு சொல்கிறீங்களா...''

''அறிவுக்கொழுந்து.. ஒருவழியாய் புரிஞ்சுக்கிட்ட..''

''நானே.. படிக்காத கூதரை.. என்கிட்ட சொன்னீங் கன்னா நான் என்னத்தைக் கண்டேன்?''

''அதுக்காக கோழி மந்திரியையா கண்டுபிடிப்பே?''

கேலியாக வினவியவாறு கையிலிருந்த காலி காபித் தம்ளரை செந்தாமரையிடம் நீட்டினாள் மாலினி. அவள் என்னவோ.. தன்னைப் புகழ்ந்துவிட்டதைப் போல மகிழ்ந்து போய் சிரித்தவாறு வீட்டுக்குள் சென்றாள் செந்தாமரை.

அதிகாலைக் காற்றை ரசித்தபடி தோட்டத்துப் பக்கம் சென்றாள் மாலினி. ஏதேதோ யோசித்தவாறு இலக்கில் லாமல்.. வாய்க்குள் ஏதோ பாடலை முணுமுணுத்தவாறு தோட்டத்தைச் சுற்றி வந்தாள்.

*''வருஷம்.. மாதம்.. தேதிபார்த்து*
*வயது வந்த பெண்ணைப் பார்த்து*
*புருஷனாக வருவேனென்று*
*சொன்னாரு..*

*அத்தான்.. பூமிக்குள்ள..*
*பொன்னைத் தேடி நின்னாரு..*
*அத்தான்.. பூமிக்குள்ள..*
*பொன்னைத் தேடி நின்னாரு...''*

பாடியவாறு செடிகளைக் கையால் அணைத்தபடி சென்றாள்.

மற்றைய நாள்களைவிட அன்றைய நாள் அதிக சந்தோஷம் கொண்டதாக அவளுக்குத் தோன்றியது.

வீட்டில் தோன்றியிருந்த விழா நாளின் உற்சாகம்.. காலையில் எழுந்ததும் அரக்கப்பறக்க வேலைக்கு கிளம்பத் தேவையில்லாத விடுதலை உணர்வு.. இவை எல்லாம் சேர்ந்து அவளுக்குள் உற்சாக ஊற்றை உருவாக்கின.

இவையெல்லாவற்றையும்விட முதல் நாளிரவு பிரபாகரன் அவளைப் பார்த்த பிரத்தியேகப் பார்வை.. இனிப்பாய் மனதில் உறைந்துநின்றது.

'அத்தான்..' என்று அழைக்கப்படுவதை அவன் மிகவும் விரும்புவான். அதனாலேயே.. அத்தானைப் பற்றிய பாடலை அவள் பாடினாள்.

எதிரில் அவன் நின்று இதைக் கேட்டுக் கொண்டிருந்தால் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்த்தவளின் முகத்தில் புன்னகை மலர்ந்தது.

அவனை முதன்முதலில் இந்தத் தோட்டத்தில் தானே சந்தித்தோம் என்று நினைத்துக் கொண்டாள்.

''ஒரு அத்தான் போட்ச் சொன்னதற்கு நீ எட்டு அத்தான் போடுகிறாயே...'' என்று அவன் அன்று சொன்னதும் இன்று அவள் நினைவுக்கு வந்து தொலைத்தது.

'அத்தான்..' தனக்குத்தானே சொல்லிக் கொண்டு சிரித்தாள்.



*''அத்தான்.. என் அத்தான்..*
*அவர் என்னைத்தான்..*
*எப்படிச் சொல்வேனடி...''*

எதிரில் இருந்த பூச்செடியிடம் கேட்டவாறு அங்கேயிருந்த சிமெண்ட் பெஞ்சில் அமர்ந்து கொண்டாள். கால்களை ஆட்டியவாறு பின்னலை முன்னால் விட்டுக் கொண்டாள்.

*''அன்பே.. அன்பே..*
*அன்பே.. அன்பே..*
*அத்தான்.. அத்தான்...*
*என்றால் உள்ளம் உருகாதா..?''*

முழங்கால்களைத் தூக்கி கைகளால் கட்டி அதில் தலைகவிழ்ந்து கொண்டு அடுத்த பாடலை யோசித்துக் கொண்டிருந்தவளின் காதில்...

''என்ன ஆச்சு.. நினைவுக்கு வரவில்லையா?'' என்ற கேள்வி நுழைந்தது.

அவள் அவசரமாக தலையை நிமிர்ந்தாள். பிரபாகரன் அவளுக்கு அருகே சுவாதீனமாக அமர்ந்தான்.. மாலினி அவசரமாக பெஞ்சிலிருந்து இறங்கிக் கொண்டாள். அவன் கேள்வியுடன் அவளைப் பார்த்தான்.

''என்ன ஆச்சு.. என் பக்கத்தில் உட்கார மாட்டாயா?''

மாலினி பதில் பேசாமல் போக முயல.. பிரபாகரன் எழுந்து அவள் பாதையை மறித்தான்.

''வழியை விடுங்க..''

''நீ முதலில் உட்கார்..''

''நான் போக வேண்டும்..''

''போகலாம்.. போகாமல் இங்கேயே இருந்துவிட முடியுமா?''

''எனக்கு வேலை இருக்கிறது..''

''நானும் வெட்டிப் பயல் இல்லை..''

கே.பி. என்று அனைவராலும் அறியப்படும் அவனைப் போய் வெட்டிப்பயல் என்று விளையாட்டுக் குழந்தைகூடச் சொல்லாது என்று நினைத்துக் கொண்டவள்... அதைச் சொல்ல வாய் வரை வந்த வார்த்தையை இழுத்துப் பிடித்து தொண்டைக்குள் விழுங்கிக் கொண்டாள்.

''என்ன சொல்லணுமோ அதைச் சீக்கிரமாய் சொல்லி முடிங்க..''

''உட்கார்.. சொல்கிறேன்...''

''பரவாயில்லை.. நின்றுகிட்டே கேட்கிறேன்..''

''கால் வலிக்காதா?''

''என் கால்தானே வலிக்கும். வலித்தால் வலித்து விட்டுப் போகட்டும்..''

''நான் அக்கறைப்படக் கூடாதா?''

''அது என்ன தேவைக்கு?''

''ஓஹோ.. அப்படியா?''

அவளை உச்சந்தலையிலிருந்து பாதம் வரை ஒரு மார்க்கமாய் பார்வையிட்டான் அவன்.

''ஏன் இப்படிப் பார்த்துத் தொலைக்கிறான்.. என்னவோ பெண்பார்க்க வந்திருக்கிற மாப்பிள்ளை பார்ப்பதைப் போல.. என்ன பார்வை வேண்டிக் கிடக்கு..''

ஒரு நொடி அவனை பெண்பார்க்க வந்திருக்கும் மாப்பிள்ளையைப் போல் கற்பனை பண்ணிக் கொண்டாள் மாலினி. அவள்தான் திருமணப் பெண். அவன் அவளை சபை நடுவில் உட்கார்ந்து பார்க்கிறான்.



மாலினியின் கண்கள் கனவில் மிதந்தன. அவளது முகம் சிவந்து போனது. அவள் முன்னால் அமர்ந்து பார்வையால் அவளை விழுங்கிக் கொண்டிருந்தவனின் கரம் தொட்டு உறவாட அவள் மனம் விழைந்தது.

''ஆனால்?''

அவன் அன்று சொல்லிய வார்த்தை.. அவள் மனதில் உருவான மென்மையான உணர்வுகளை கணப்பொழுதில் அழிக்க, அவள் முகம் திருப்பிக் கொண்டாள்.

''ஏன் மாலினி... என் முகத்தைப் பார்க்க உனக்குப் பிடிக்கவில்லையா?'' பிரபாகரன் ஆழ்ந்த குரலில் கேட்டான்.

மாலினி ஓர் அதிர்வுடன் அவனைப் பார்த்தாள்.

இளங்காலை இன்னும் ஆரம்பித்திருக்காத அதிகாலைப் பொழுது... புலர்ந்தும் புலராத விடியல் வேளை.. இதமான குளிருடன் கூடிய தன்மையான வெப்பநிலை.. சுற்றிலும் பூச்செடிகள்... உடலைத் தழுவும் காலை நேரக் காற்று... அதுபோன்ற சூழ்நிலையில் இயல்பான தோற்றத்துடன் வசீகரமாக எதிரே நின்றவனை ஆவலுடன் அவர் பார்த்தாள்.

இந்த வசீகரனின் முகம் பார்க்க அவளுக்குப் பிடிக்கவில்லையா?




*அந்த வசீகரனின் கண்ணசைவில்...*
*இந்த வஞ்சிமயிலின் மனம் அசைவதை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

அந்தப் பொல்லாதவன்.. இவளது முகம் பிரதிபலித்த உணர்வுகளின் அலையை உள்வாங்கிக் கொள்பவனாக

இமைக்காமல் அவள் முகத்தையே பார்த்தபடி அமர்ந்திருந்தான்.

அவனது இதழ்களில் கேலிப் புன்னகை நெளிந்தோடியது.

'இவன் என்னைக் கண்டுபிடித்து வைத்திருக்கிறான்..?' அவள் தனக்குள் சொல்லிக் கொண்டாள்.

இவனுக்குத் தெரியாமல் இருக்காது. இவனிடம் அவள் மயங்கிப் போய்விடுவதை உணர்ந்துதான் இருக்கிறான். இந்த தைரியமான வார்த்தைப் பிரயோகமும் இவனது கண் வீசும் வீச்சும் அந்தத் தன்னம்பிக்கையில் வருவதுதான்.

ஆனால்.. அதை உடைக்க வேண்டும் என்ற வேகம் அவளுக்குள் வர மறுப்பதை ஓர் இயலாமையுடன் அவள் உணர்ந்தாள்.

''சொல் மாலினி.. என் முகம் பார்க்கப் பிடிக்கவில்லையா?'' அவன் மீண்டும் வம்புக்கு இழுத்தான்.

''அப்படி ஸ்வேதாகூடச் சொல்ல மாட்டாளே..'' இப்போது மாலினி அவனை வம்புக்கு இழுத்தாள்.

''ஊகும்... உனக்கு ஸ்வேதான்னா ரொம்பப் பிடிக்குமோ...'' அவன் குறும்பாக வினவினான்.

அவளுக்கு எரிச்சல் வந்துவிட்டது.. ஸ்வேதாவின் பேச்சை எடுத்தது அவள்தான் என்பதை மறந்துபோனவளாக முகம் சுளித்தாள்.

''எனக்கு சூர்ப்பனகையைப் பிடிக்கும்னு சொல்லுங்க, கேட்டுக்கறேன். பூலான்தேவிதான் என் உயிர் சிநேகிதின்னு சொல்லுங்க.. ஆஹான்னு தலையை ஆட்டுகிறேன். ஆனால்.. உங்க ஆசை மாமன் மகளை மட்டும் எனக்குப் பிடிக்குமுன்னு சொல்லாதீங்க. அதுக்குப் பதில் உங்க கையால நாலு அடி வேண்டுமானாலும் அடித்துக் கொள்ளுங்க. சந்தோஷமா வாங்கிக்கறேன்...''



''ஆசை மாமன் மகளா.. அவளா? ஹா.. ஹா...'' அவன் ரசித்துச் சிரித்தான்.

''என் ஆசைக்கு உரியவள்.. மாமன் மகளில்லையே. அத்தை மகளதானே. அதுசரி.. உன்னைப் போய் என்னால் எப்படி அடிக்க முடியும்?''

அவன் சரஸமாய் வினவ...

'ஏன் முடியாது?' என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டாள் மாலினி.

'என் மனதில் அடிக்க உன்னால் முடியும்போது நிஜமாகவே என்னை அடிக்க உன்னால் முடியாதா?'

அவனோ முடியாது என்றுதான் சொன்னான்.

''உன்னை அடிக்க என்னால் முடியாது மாலினி. உனக்கு வலித்தால் அதைவிட பத்து மடங்கு அதிகமாக எனக்கு வலிக்குமே..''

'பெரிய ரோமியோ... காதல் மன்னன். இப்படி உருகுகிறவன் அன்றைக்கு ஏன் அவனுடைய தம்பியின் பேச்சை எடுத்தானாம்...'

அவள் மனதில் ஓடிய எண்ணங்களைப் படித்தவனைப் போல அவன் சொன்னான்...

''பொஸஸிவ் உணர்வு பெண்களுக்கு மட்டும் சொந்தமானது இல்லை மாலினி. ஆண்களுக்கும் அது வரும்..''

''நீங்கள் பேசியது பொஸஸிவ் இல்லை..''

''அதை நீயாய் முடிவு பண்ணினால் எப்படி?''

''நான் பாதிக்கப்பட்டவள்..''

''என்னைவிட அதிகமாக பாதிக்கப்பட்டவள் இல்லை..''

''ப்ச்சு.. இதெல்லாம் சும்மா சொல்வது...''

''நீ இந்த அளவுக்கு ராட்ஸஸியா?''

''நான் ராட்ஸஸிதான். உங்க மாமன் மகள் ஸ்வேதா தான் அழகு தேவதை...''

''அவள் பேச்சை நீ விடவே மாட்டாயா?''

''என்னை நீங்கள் விட்டுவிட்டால் நானும் அவள் பேச்சை விட்டுவிடுகிறேன்...''

''விடாமல் உன் கையைப் பிடித்தா நிறுத்தியிருக்கிறேன்?''

அவன் கண்கள் சிரிக்க.. அவள் பல்லைக் கடித்தாள்.

'இவன் கையைப் பிடித்து இழுப்பதிலேயே கவனமாக இருப்பான். ரௌடி.. காதல் ரௌடி..'

''பேச்சால் நிறுத்தியிருக்கீங்க...''

''உன்னிடம் பேசக்கூட எனக்கு உரிமையில்லையா?''

'உரிமையைப் பற்றி நீ பேசாதே..' அவள் மனதிற்குள் வெகுண்டாள்.

''அடுத்தது காட்டும் பளிங்குபோல் - நெஞ்சம் கடுத்ததைக் காட்டும் முகம்..'' என்றான் அவன்.

''என்ன ஆச்சு.. குறளெல்லாம் தூள் பறக்குது?'' அவள் கேலியாக வினவினாள்.

''அந்தக் காலத்திலேயே ஹைக்கூ கவிஞர் திருவள்ளுவர். பளிங்கு போல இருக்கும் உன் முகத்தைப் பற்றி எழுதியிருக்கார். அதைச் சொன்னேன்.''



''பளிங்கு முகமா?''

அவள் முகம் அழகாயிருக்கிறதென்று சொல்கிறானா.. இருக்காதே. இப்போது அவன் முக அழகைப் பற்றிப் பேச வேண்டிய தேவை இல்லையே.

''உன் மனதில் இருப்பதை உன் முகம் காட்டுது. அதைத்தான் அப்படிச் சொன்னேன்..''

அவளது கோபத்தை குறிப்பிடுகிறான். அவள் இதழ் வளைத்துச் சுழித்து அழகு காட்டினாள்.

''இதிலொன்றும் குறைச்சலில்லை...''

''வேறு எதிலும் குறைச்சல் இல்லை. எங்கே.. அதை உனக்கு உணர்த்த நீதான் விட மாட்டேன்கிறாயே.. உன்னைத் தொடக்கூடாதுன்னு என் கைகளைக் கட்டிப் போட்டு வைத்திருக்கிறாயே..''

அவள் மனதில் உணர்வுகள் பிரவாகமாய் பொங்கி எழ.. அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு முகத்தை திருப்பிக் கொண்டாள்.

''மாலினி..''

''ம்ம்ம்..''

''என்னைப் பார்..''

'எதற்கு.. திரும்பவும் என்னை நீ மயக்குவதற்காகவா?' அவள் முகம் திருப்பவில்லை.

''உன்னை அடிக்கச் சொல்கிறாயே.. உன்னைத் தொடாமல் என்னால் அடிக்க முடியுமா?''

மாலினி கண்மூடித் தன் உணர்வுகளைக் கட்டுப்படுத்தப் போராடினாள். மயிலிறகைப் போல மனம் வருடிச் சென்றன, அவனுடைய வார்த்தைகள். அவள் மனம் மயங்கியது.

''நீ உன்மேல் ஆணைன்னு சொல்லி என் கைகளைக் கட்டிப் போட்டுவிட்டாயே கண்ணம்மா..''

அவன் குரல் பட்டுப்போல மிருதுவாக ஒலித்தது. மாலினி பல்லைக் கடித்துக் கொண்டு அங்கிருந்து ஓட முயன்றாள்.

''நில் மாலினி..'' என்றான் பிரபாகரன்.

அவள் நிற்காமல் நகர முனைய..

''என் மேல் ஆணை. நான் சொல்லும் வரை நீ இங்கேயிருந்து போகக்கூடாது..'' என்று அழுத்தமான குரலில் ஆணித்தரமாக அவன் சொன்னான்.

அசைய முடியாமல் அப்படியே மாலினி நின்று விட்டாள். பிரபாகரன் அவளருகில் வந்து நின்றான்.

''ஆணை வைக்க உனக்கு மட்டும்தான் தெரியுமா..'' என்று கேட்டான்.

மாலினி பதில் பேசவில்லை. அவள் முகத்தையே உற்றுப் பார்த்தவனின் கண்களில் சினம் வந்தது.

''ஓராயிரம் வார்த்தைகளை உன்னிடத்தில் பேசியிருக்கிறேன். அதில் ஒரு வார்த்தைகூட உன் மனதில் நிற்கவில்லையில்ல.. தேவையில்லாத ஒரு வார்த்தையைப் பிடித்துக் கொண்டு தொங்குகிறாயே. நம்மிருவருக்குள்ளும் தேவைப்படும் ஒரே ஒரு வார்த்தையை நீ நினைத்துப் பார்த்தால் நம் பிரச்னை ஒரு முடிவுக்கு வந்துவிடும்...''

சினத்தோடு அவன் பேச... 'அது என்ன வார்த்தை?' என்ற கேள்வியோடு அவனைப் பார்த்தாள் மாலினி.

''என்ன முழிக்கிறாய்.. அந்த வார்த்தை என்னவென்று உனக்குத் தெரியவில்லையா.. உன்னைப் போன்ற ஒரு



பிடிவாதக்காரிக்கு அந்த வார்த்தையைப் பற்றி எப்படித் தெரியும்?''

''ம்ச்ச..''

''இப்போ எதற்கு இப்படிச் சலித்துக் கொள்கிறாய்.. அந்த வார்த்தை என்ன தெரியுமா? மன்னிப்பு..''

மாலினி வியப்புடன் பிரபாகரனை நிமிர்ந்து பார்த்தாள். கோட்டையூர் ஜமீன் வம்சத்தின் வாரிசு.. கே.பி. என்று இரண்டு எழுத்தால் அனைவராலும் அறியப்படும் அந்த மிகப் பெரிய வி.ஐ.பி. அவளுடைய சீனியர் ஆபீஸர், அருகில் வந்து நின்று பேச முடியுமா.. என்று மலைக்கிற அளவுக்கு உயரத்தில் இருக்கும் ஒருவன்.. மிகவும் சாமானியப் பெண்ணான மாலினியிடம் மன்னிப்புக் கேட்கிறான்..



*உன் கை தொடாத போதும்..*
*உன் கண் தொடுகின்ற தொடுகையை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

''என்ன அப்படிப் பார்க்கிறாய் மாலினி... நான் மன்னிப்புக் கேட்டுவிட்டால் உன் மனம் அமைதியாகி விடுமென்றால் சொல்.. நான் மன்னிப்புக் கேட்கிறேன்...'' பிரபாகரனின் விழிகள் கூர்மையாக அவள் மேல் படிந்தன.

''வேண்டாம்.. வேண்டாம்..'' அவசரமாக அவள் தடுத்தாள்.

''ஏன் வேண்டாம்?'' அவன் விழிகளில் இனம் விளங்காத திருப்தி ஒன்று உதயமாகியது.

''என்னிடம் போய் நீங்க மன்னிப்புக் கேட்பதா?''

''கேட்டால் என்ன? நான் தவறு செய்தவன்தானே?''

''அப்படி நான் சொன்னேனா?''

''ஏய்ய்.. பிறகு எதற்காக என்கூட பேசமாட்டேன்னு விரதமிருக்கிறாய்?''

''ம்ப்ச்...''

''இப்படி.. 'ச்' கொட்டினால் மட்டும் நீ தப்பித்துவிட முடியாது. எனக்கு ஒரு பதிலைச் சொல்லு..''

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை அத்தான்..''

''என்ன சொன்னாய்?''

அவன் விழிகள் மின்னின. அவளருகில் ஒரு எட்டு அவன் முன்னால் வைக்க.. அவள் அவசரமாக பின்னடைந் தாள். அவன் அப்படியே நின்று தீர்க்கமாக அவளைப் பார்த்தான்.

''ஏன்.. பின்னால் போகிறாய் மாலினி. உன் பேச்சை நான் மீறுவேனா?''

தன் தவறு புரிந்தவளாக அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு தன்னையறியாமல் சொன்னாள்.

''ஸாரி அத்தான்..''

அந்த ஒரு வார்த்தையில் முகம் மலர்ந்து போனான் பிரபாகரன்.

''எத்தனை நாளாச்சு தெரியுமா.. நீ இப்படி 'அத்தான்'னு இயல்பாய் கூப்பிட்டு. நான் ஏங்கிப் போயிட்டேன் மாலினி...'' அவன் குரலில் தெரிந்த தவிப்பைக் கண்டு அவள் உருகிப் போனாள்.

''ஐ ஆம் ஸாரி எகெய்ன் அத்தான்..''



''நீயேன் திருப்பித் திருப்பி ஸாரி சொல்கிறாய் மாலினி. நான்தானே இதை ஆரம்பித்து வைத்தவன்.. நான்தான் ஸாரி கேட்கணும்..''

''வேண்டாம் அத்தான்..''

''எது வேண்டாம்.. நானா?''

அவள் முறைத்தாள். அவளது கோபத்தைக் கண்டு அவன் உல்லாசமாய் நகைத்தான்.

''இதுதான் சாக்குன்னு ஸ்வேதாவிடம் போய் கோத்துக் கொள்ளும் திட்டம் ஏதுமிருக்கா?''

''அடிப்பாவி.. இப்படி ஒரு பழியை என்மேல் போட லாமா... இது நியாயமா?''

''ஆண்பிள்ளைகள் மனது அலைபாய்கிற மனது. அது எந்தப் பக்கம் வேணும்னாலும் பாயும்..''

''இதைச் சொல்லு கேட்டுக்கறேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் என் தங்கையை பெண்பார்க்க வரும் ஃபங்ஷனில் கலந்துகொள்ளப் போகும் சாக்கில் என் முறைப்பெண்கள் எல்லாம் வரிசை கட்டிக் கொண்டு இங்கே வரப் போகி றாங்க. அதில் எவளாவது ஒருத்தியிடம் என் மனம் அலை பாயலாம். அதையெல்லாம் விட்டுவிட்டு ஸ்வேதாவை மட்டும் சொல்லாதே மாலினி.. உனக்கு கோடி புண்ணியமாக இருக்கும்..''

''ஓஹ்ஹோ... ஐயா சைட் அடிப்பீங்களா...''

''அடிப்பேன்..''

''கணக்குப் பண்ணுவீங்களோ...''

''கணக்கு மட்டுமில்லை.. சயின்ஸையும் சேர்த்துப் பண்ணுவேன்..''

''சயின்ஸா?''

''ஆமாம் மாலினி... கெமிஸ்ட்ரி வொர்க் அவுட் ஆகணுமில்ல.. கெமிஸ்ட்ரி.. சயின்ஸில்தானே வருது?''

பிரபாகரன் சிரிக்காமல் வினவ.. மாலினி குபீரென்று சிரித்தாள்.

''ஏன் அத்தான்.. டி.வி-யில் டான்ஸ் ஷோ அதிகமாய் பார்ப்பீங்களோ?''

''அதுக்கெல்லாம் எனக்கேது நேரம்.. ஆமாம் திடீர்னு ஏன் இப்படிக் கேட்கிறாய்?''

''கெமிஸ்ட்ரியைப் பத்தி அதில்தான் அதிகமாக சொல்லுவாங்க..''

மாலினி தன் அழகிய பல் வரிசை தெரிய... இதழ் விரித்துச் சிரித்தாள். பிரபாகரன் அவள் சிரிக்கும் அழகை ரசித்தவனாக அவளையே விழுங்கிவிடுவதைப் போலப் பார்த்துக் கொண்டு நின்றான்.

''மாலினி..'' மெதுவான குரலில் அழைத்தான்.

அவன் அழைப்பில் தெரிந்த ஏதோ ஒன்று அவளை வசப்படுத்த, அவள் கிளர்ச்சியுடன் நிலம் பார்த்து...

''ம்ம்ம்..'' என்றாள்.

''நான் உன்னைத் தொடக்கூடாதா?''

மாலினியின் முகம் சிவந்துவிட்டது. அவள் அங்கிருந்து ஓட யத்தனித்தாள். பிரபாகரன் அழுத்தமான குரலில்..

''என் மேல் ஆணை வைத்திருக்கிறேனே.. மறந்து விட்டாயா?'' என்று கேட்டான்.

''என்ன அத்தான் இது.. நான் போக வேண்டும்..''

''என் வார்த்தையை மீறிப் போவதானால் போ..''

''எப்படிப் போக முடியும்.. நீங்கள்தான் ஆணை வைத்திருக்கிறீங்களே..''



''அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிற?''

''உங்கள் ஆணையை திரும்ப வாங்கிக்கங்க..''

''அதுதான் எப்படி?''

''என் மேல் ஆணை.. நீ போன்னு சொல்லிவிடுங்க.. சரியா போய்விடும்..''

''அப்போ.. நீயும் சொல்லு..''

''என்ன சொல்ல?''

''என் மேல் ஆணை.. என்னைத் தொட்டுப் பேசுங்கன்னு..''

''என்னது.. என்னால் அது முடியாது..''

''அப்போ.. என்னாலும் இது முடியாது..''

''அத்தான் ப்ளீஸ்..''

''ஊஹூம்.. நீ சொல்லு. நானும் சொல்கிறேன்..''

''நான் எப்படி அத்தான்.. அப்படிச் சொல்லுவேன்?''

''வாயால்தான் சொல்லணும்.. நான் வேண்டும்னா அதைச் சொல்லிக் காண்பிக்கவா?''

மாலினியின் முகம் இன்னும் சிவந்தது. அவள் வெட்கத்துடன் தடுமாறினாள்.. அவன் சொன்னதைச் சொல்ல.. அவளால் முடியவில்லை. கைபிசைந்தாள்.

''வேறு எதையாவது சொல்லச் சொல்லுங்க.. சொல்கிறேன். இது வேண்டாம் அத்தான்..''

''ஏன்?''

''எனக்கு.. எனக்கு..''

''உனக்கு.. உனக்கு?''

''என்னவோ போல் இருக்கிறது...''

அவள் விழிகளில் நீர் மல்கியே விட்டது. அவள் வெட்கத்தில் தவிப்பதைக் கண்டவனுக்கு அவள் மேல் ஆசை கிளர்ந்தது.

''சரி.. போ..'' என்றான்.

''நிஜமாகவா அத்தான்..'' என்றாள் அவள் ஆச்சரி யத்துடன்.

''நிஜமாகத்தான்... போ..'' அவன் தலையசைத் தான்.

ஒரு விடுதலை உணர்வுடன் விட்டால் போதுமென்று அவள் சிட்டாகப் பறந்துவிட்டாள்.

அவள் விட்டுச் சென்ற உணர்வுகள் அலைகளாக அவனைச் சுற்றிக் கொள்ள.. அவன் அங்கேயே அமர்ந்து விட்டான்.

'எனக்கு... எனக்கு... என்னவோ போல் இருக்கு...'

மனம் மறைக்காமல் அவள் உதிர்த்த வார்த்தைகள் அவன் நினைவில் நிழலாடின. அவன் இதழ்களில் அவளது வெட்கத்தை எண்ணிய இளநகை படர்ந்தது.

சென்னையில் பிறந்து வளர்ந்தவள்.. மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் படித்தவள். அவ்வளவு தொலைவிலிருந்து வேலை செய்ய தனியாக வந்திருக்கும் தைரியசாலி.. முன் பின் பார்த்திரா ஆண் என்ற எண்ணமும் பயமும் சிறிதளவு கூட இல்லாமல் முதல் நாளே அவன் முகத்தை நேருக்கு நேர் பார்த்து வாயாடிய துறுதுறுப்புக்காரி.. இன்று அவன் முகம் பார்த்து ஒரு வார்த்தை சொல்ல வெட்கப்படுகிறாள்.

மாலினியிடம் தெரிந்த அந்தப் பெண்மை.. அவனை காந்தமாய் கவர்ந்து இழுத்தது.

அவளது ஒவ்வொரு அசைவிலும் தெறித்து விழுந்த மென்மையைக் கண்டு அவன் தாபம்.. திமிறிய குதிரையாக சிலிர்த்தது.



அவள் வேண்டும் போன்ற உணர்வை அவன் உணர்ந்தான். அவளைத் தொட வேண்டும்... அணைக்க வேண்டும்.. அவளது கூந்தல்மலர் காட்டில் முகத்தை புதைக்க வேண்டும் என்ற வேகம் அவனது உடலெங்கும் வியாபிக்க.. சுகமான ஓர் அயர்வுடன் அவன் கண்மூடிக் கொண்டான்.

''அத்தான்..''

அவனது நினைவுகளின் சுரங்களிலிருந்து விலகி.. பிசிறு தட்டிய குரலில் அபஸ்வரமாக ஒலித்தது. அந்த அழைப்பு.

அந்தக் குரல் மாலினியுடையது அல்ல என்று அவனுக்குத் தெரியும்.

மாலினி அழைக்கும் 'அத்தானி'ல் ஒரு துள்ளல் இருக்கும். துடிப்பு இருக்கும். உயிர்ப்பு இருக்கும். ஈர்க்கும் விசை இருக்கும்.

இதுபோல சாகஸம் இருக்காது. அவனுக்குத் தெரியும்.. கண் திறக்காமலே அது ஸ்வேதாவின் அழைப்பு என்பதை உணர்ந்தான் பிரபாகரன்.

''என்ன?'' என்றான் விழி திறக்காமல்.

''தோட்டத்திற்கு வந்தீங்களா அத்தான்..'' அவள் கொஞ்சிப் பேசுவதாக நினைத்துக் கொண்டு தமிழை கொலை செய்தாள்.

அதை சகிக்க முடியாமல் விழி திறந்து முகம் சுளித் தான் பிரபாகரன்.

''உன்னிடம் லட்சம் தடவை சொல்லிவிட்டேன் ஸ்வேதா..''

''எதை.. அத்தான்?''

''இப்படி செயற்கையாய் பேசித் தொலைக்கா தேன்னு.. நீ கேட்கிறதாக இல்லை..''

''எப்போதும் பேசுவதை எப்படி அத்தான் மாற்றிப் பேசுவது..''

''நீ எப்போதுமே இப்படியா பேசித் தொலைக்கிறாய்? அம்மாவிடம் இப்படிப் பேசிப் பார்.. அடுத்த நிமிடமே.. உன்னை ஊருக்கு பார்சல் பண்ணி விடுவாங்க..''

''அத்தான்..''

ஸ்வேதா செல்லமாய் சிணுங்குவதாக நினைத்துக் கொண்டு ஊளையிட்டு வைக்க.. பிரபாகரனின் முகம் விளக்கெண்ணெயைக் குடித்ததைப் போலாகிவிட்டது.

''தலைவலியை வர வைக்காதேம்மா. நீயேன் என்னிடமும் கருணாவிடமும் தினாவிடமும் இதுபோலவே பேசி வைக்கிறாய்?''

''கருணா அத்தானை சொல்லாதீங்க அத்தான். அவரிடம் நான் பேச்சே வைத்துக் கொள்வதில்லை..''

''அது இப்போ.. நான் சொல்வது அப்போ..''

''அப்போன்னா.. எப்போது அத்தான்?''

''அவன் சசியைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முந்தைய 'அப்போ..'''

ஸ்வேதாவின் முகம் இதைக் கேட்டதும் விழுந்து விட்டது. அவள் சுதாரித்துக் கொண்டு பேச்சை மாற்றினாள்.

''தோட்டத்திற்கு வந்தீங்களான்னு கேட்டால் அதுக்குப் பதில் சொல்லாமல் வேறு எது எதையோ பேச நீங்களே... அத்தான்..''

''காலங்கார்த்தாலேயே கடுப்படிக்கணும்கிற முடிவோடு நீ வந்திருக்கிறாயா.. இப்படி அபத்தமாய் பேச உன்னால் மட்டும்தான் முடியும். தோட்டத்தில் உட்கார்ந்திருக்கிறவனைப் பார்த்து தோட்டத்துக்கு வந்திருக் கிறாயான்னு கேட்கறியே... எனக்கு எவ்வளவு எரிச்சல் வரும்னு நினைத்துப் பார்க்கறியா?''

'எரிச்சல் வருதா.. ஏன் வராது.. இவ்வளவு நேரமும் அந்த அன்றாடங்காய்ச்சியிடம் பல்லைக் காட்டிக் காட்டிப் பேசிக் கொண்டிருந்தாயே.. அப்போது எரிச்சல் வரவில்லையா? நான் பேசினால் மட்டும் மிளகாயை அரைத்து உடம்பில் பூசியதைப் போல எரிச்சல் வருகிறதா.. அவள் பேசினால் இனிக்கிறது.. நான் பேசினால் கசக்கிறதா? அப்படி அவள் என்னைவிட அழகில் உயர்ந்தவளா? பணத்தில் உயர்ந்தவளா? வயிற்றுப்பிழைப்புக்காக வேலைக்கு வந்தவளை என்னைவிட உயர்த்தியாக நீயும் உன் தம்பியும் நினைக்கறீங்களா?'

ஸ்வேதா மனதிற்குள் குமுறினாள். வெளியே அதைக் காட்டிக் கொள்ளாமல் பிரபாகரன் அருகே அவள் அமர.. சட்டென்று எழுந்து வீட்டை நோக்கிப் போய்விட்டான் பிரபாகரன்.

ஸ்வேதா வன்மத்துடன் அவன் முதுகை வெறித்தாள்.




*உன் வாய் உதிர்க்கும் வார்த்தை...*
*என்னை வசீகரிக்கும் விதத்தை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

தினகரன் அழகாக உடுத்திக் கொண்டு அவனது அறையிலிருந்து வெளிப்பட்டான். அதற்காகவே காத்திருந்த

ஸ்வேதா.. கவனமாக பார்த்துப் பார்த்து தேர்ந்தெடுத்துக் கட்டிய ஆகாய வண்ண பிரிண்டட் சேலையை ஒற்றையாய் தோளில் படியவிட்டு முடியை விரித்து விட்டு கழுத்திலும் காதிலும் கைகளிலும் வைரங்கள் மின்ன.. ஒரு தேர்ந்தெடுக்கப்பட்ட மாடலின் பூனை நடையோடு அவன் எதிரே நடந்து வந்தாள்.

அந்த ஹாலில் போடப்பட்டிருந்த சோபா.. டீப்பாய்.. சேர்களைக்கூட சுவாரஸ்யமாய் தினகரன் பார்த்துவிடுவான் போல.. அந்த உயிரில்லாத பொருள்களிடம் காட்டிய கவனத்தைக்கூட அவன் எதிரே பூனை நடை நடந்து வந்த ஸ்வேதாவிடம் காட்டவில்லை. கல்லையும்.. மண்ணையும் பார்ப்பதைப் போல அவளையும் ஒரு பார்வை பார்த்துவிட்டு அகன்றான்.

'இரண்டு மணி நேரமாய் கண்ணாடி முன்னால் நின்று மெனக்கெட்டதெல்லாம் இதற்காகத்தானா?' ஸ்வேதா இடிந்துவிட்டாள்.

''அத்தான்..'' கடந்து போனவனை சப்தமாக அழைத்தாள்..

''யார்?'' அவன் நின்று திரும்பிப் பார்த்துவிட்டு..

''நீயா?'' என்றான் அசுவாரஸ்யமாக.

ஸ்வேதாவிற்கு பற்றிக் கொண்டு வந்தது. அவளும் தான் என்ன செய்வாள். அவளும் அந்த வீட்டிற்கு வந்த நாள் முதல் இந்த நாள் வரை பிரபாகரனையும் தினகரனையும் வளைக்க என்னென்னவோ யுக்திகளை கையாண்டு விட்டாள். ஒன்றுமே கதைக்கு ஆகவில்லையென்றால் அவளுக்குத்தான் எப்படி இருக்கும். பற்றிக் கொண்டு வராதா?

பிரபாகரனாவது ஸ்வேதாவிடம் மட்டுமில்லாமல் எல்லோரிடமும் இரும்பு முகத்தைக் காட்டுவான்.



ஆனால் இந்த தினகரன்.. ஸ்வேதாவைத் தவிர மற்ற எல்லாப் பெண்களிடமும் வழிவான். அதுதான் ஸ்வேதாவிற்குத் தாங்க முடியாமல் போனது.

''என்ன ஸ்வேதா, சொல்லு? எனக்கு நிறைய வேலையிருக்கு..'' தினகரன் கைக்கடிகாரத்தை பார்த்தவாறு கேட்டான்.

''என்ன அத்தான்.. இப்படிச் சொல்கிறீங்க. இன்றைக்கு என்ன நாள் என்பதை மறந்துவிட்டீங்களா?'' பொய் கோபத்துடன் முறைத்தாள் ஸ்வேதா.

என்னவோ அவர்கள் இருவருக்கும் அன்றுதான் திருமண நாள் என்பது போலவும் தினகரன் என்னவோ அதை மறந்துவிட்டது போலவும் அவள் கொஞ்ச.. தினகரனுக்கு கடுப்பு கிளம்பியது.

அவன் ஸ்வேதாவை ஒரு மார்க்கமாய் முறைத்துப் பார்த்தான்.

'இவன் ஏன் இப்படி முறைக்கிறான்?'

''உனக்கு ஒழுங்காகவே பேச வராதா?''

'ஆமாம்.. இது ஒன்றை அண்ணனும் தம்பியும் கண்டு பிடித்து வைத்துக் கொண்டு மாற்றி மாற்றி சொல்லிக் காட்டுவீங்களே. உங்களிடம் இப்படிப் பேசியே வேலைக்கு ஆகவில்லை. இந்த லட்சணத்தில் நான் ஒழுங்காகப் பேசினால் அவ்வளவுதான். என்னைத் திரும்பிக்கூட பார்க்க மாட்டீங்க..'

''நீ சுத்த போர் ஸ்வேதா...''

'அதை நீ சொல்லி நான் கேட்கணும்கிறது என் தலையெழுத்து. நீ மட்டும் கருணாகர ஜமீன்தாரின் கடைசி மகனாக பிறந்திருக்காவிட்டால் நான் உன்னைத் திரும்பிக் கூடப் பார்த்திருக்க மாட்டேன்..'

''எப்ப பார்த்தாலும் எதையாவது சொல்லிக்கிட்டு.. உனக்குப் பேச வேறு ஆள் கிடைக்கவில்லையா?''

'நீ இப்படி சொல்லுவாய்னு தெரிந்ததுதானே காலங் கார்த்தாலேயே உன் அண்ணனிடம் நூல் விட்டுப் பார்த் தேன். ஆசாமி சிக்கவில்லையே.. நான் என்ன செய்ய? அவனுக்கு அடுத்து நீதானே என்னிடம் மாட்டியாகணும்..'

''நீ எனக்கு ஒன்றுவிட்ட மாமாவின் மகள்தான்..''

'ஹப்பா.. இப்போதாவது உனக்கு அந்த நினைப்பு வந்ததே..'

''அதுக்காக நீ போடும் ரம்பத்தையெல்லாம் நான் சகித்துக் கொள்ளணும்கிற அவசியம் ஒன்றும் எனக்கு இல்லை...''

'அடப்பாவி.. வயதுப் பெண்.. அதுவும் முறைப்பெண் ணிடம் நீ பேசுகிற லட்சணமா இது?'

''நீ விருந்தாளியுமில்லை... வீட்டுப் பெண்ணும் இல்லை. உன்னை எந்தக் கணக்கில் வைப்பதுன்னே எனக்குத் தெரியவில்லை..''

'உன் பெண்டாட்டியாய் வைத்துப் பார்.. கணக்கு சரியாகிவிடும்..'

''விருந்தும் மருந்தும் மூன்று நாள்கள்தான்னு சொல் வாங்க. நீயோ வருஷக்கணக்கில் இந்த வீட்டில் டேரா போட்டிருக்கிறாய். உன்னை விருந்தாளி கணக்கிலும் சேர்க்க முடியாது...''

'சேர்க்காதே...'

''என் அம்மாவின் கூடப் பிறந்த அண்ணனின் மகளாகக்கூட நீ இல்லை. உன் அப்பா.. என் அம்மாவுக்குப் பெரியப்பாவின் மகனாம். உன்னைப் போய் எப்படி.. வீட்டுப் பெண்ணாய் நினைக்க முடியும்?''



'ஒரு தாலியைக் கட்டிவிடு. அப்புறம் நீ என்ன நினைத்தால் எனக்கென்ன?'

''நான் இத்தனை பேசுகிறேன்.. அசையாமல் மரம் போல நிற்கிறாயே.. நீ என்ன செவிடா?''

தினகரன் கோபத்துடன் கேட்கவும்.. ஸ்வேதா கலகல வென்று சிரித்தாள்.

''ஐயோ.. அத்தான்..''

''நல்ல நாளும் அதுவுமாக என்ன வார்த்தையைச் சொல்லித் தொலைக்கிறாய்.. சே...''

''நீங்கள் பேசும் அழகை ரசித்துக் கொண்டிருந்தேன் அத்தான்..''

அந்த நேரம் பார்த்தா மாலினி அவளுடைய அறை யிலிருந்து வெளிப்பட வேண்டும்.

உடைத்த பாசிப் பருப்பின் வண்ணத்தில் பிரிண்டெட் சேலையுடுத்தி இடுப்பு வரை அடர்ந்திருக்கும் கூந்தலை விரித்து விடாமல் தளர்வாக பின்னி.. அதில் முல்லைச் சரத்தை சூடிக் கொண்டு அழகு தேவதையாக எதிரே வந்து கொண்டிருந்தவளை ஏக்கத்துடன் பார்த்தான் தினகரன்.

''ம்ஹூம்.. நீ என் அழகைப் பார்த்து ரசித்து எனக்கென் னம்மா ஆகப் போகிறது.. ரசிக்க வேண்டியவங்க ரசிக்க மாட்டேன்கிறாங்களே...''

ஏற்கெனவே அவன் பார்வை போன திசைப்பக்கம் பார்வையை ஓட்டிய ஸ்வேதா.. பல்லைக் கடித்துக் கொண் டிருந்தாள். போதாதகுறைக்கு எரிகிற தீயில் எண்ணெயை ஊற்றுவதைப் போல் தினகரன் பேசி வைக்கவும், அவள் கொதிகலனாகவே ஆகிவிட்டாள்.

''கருணா அத்தான் தரமில்லாமல் செய்த வேலை நம்மை எங்கே கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறது..?''

மாலினியின் அழகை ரசித்துக் கொண்டிருந்த தினகரன் புருவங்கள் முடிச்சிட ஸ்வேதாவைப் பார்த்தான்.

''எங்கே நிறுத்தியிருக்கிறது.. நான் என் வீட்டு ஹாலில் தானே நின்றுகொண்டிருக்கிறேன்... ஒருவேளை.. நீ அடுத்தவர் வீட்டில் நிற்கிறோமேயென்று இப்படிச் சொல்கிறாயா ஸ்வேதா?''

அதற்குள் மாலினி அவர்களை சமீபித்துவிட ஸ்வேதா பல்லைக் கடித்துக் கொண்டே அவளைப் பார்த்தபடி கூறினாள்..

''இது எனக்கு ஒன்றும் அடுத்தவர் வீடு இல்லை அத்தான். என் அத்தையின் வீடு. நானொன்றும்.. கட்டிய புடவையோடு ஒருத்தியை முன்னால் அனுப்பிவிட்டு அவளிடம் சொந்தம் கொண்டாடிக் கொண்டு பின்னாலேயே வந்து ஊரார் வீட்டில் டேரா போடவில்லை..''

இதைக் கேட்ட தினகரனின் முகம் கோபத்தில் ஜிவுஜிவுத்துவிட, தினகரனையும் ஸ்வேதாவையும் கண்டு கொள்ளாமல் கடந்து போகப் போன மாலினி நின்றாள். ஸ்வேதாவை திரும்பிப் பார்த்தாள்.

'இருடி.. உன்னை ஒருவழி பண்ணுகிறேன்..' என்று எண்ணமிட்டபடி தினகரனைப் பார்த்து...

''ஹாய்..'' என்றாள்.

தினகரன் அயர்ந்துவிட்டான். அன்று வரை அவனிடம் ஓரிரு வார்த்தைகளுக்கு மேல் மாலினி பேசியதில்லை. அவனாக வலியப் போய் பேசினாலும் கண்டுகொள்ளாமல் நகர்ந்து விடுவாள்.

அப்படிப்பட்டவள் இன்று தானே வந்து 'ஹாய்..' சொன்னவுடன் அவன் வாயெல்லாம் பல்லாகிவிட்டான்.



''என்னிடமா ஹாய் சொன்னீங்க?''

''உங்களிடம் சொல்லாமல் இந்த அம்மாவிடமா 'ஹாய்' சொல்வேன்?''

மாலினி, ஸ்வேதாவை கைகாட்டி கேட்க.. தினகரன் வாய்விட்டு சிரித்துவிட்டான். ஸ்வேதாவோ சினந்தாள்.

''யாரைப் பார்த்து அம்மாங்கிற?''

''ஏன் உன்னைப் பார்த்துதான் சொன்னேன்?''

''என்னைப் பார்த்தால் அம்மா மாதிரியா தெரியுது..''

''சேலை கட்டியிருப்பதால் அம்மா மாதிரிதான் தெரியுது. நிச்சயம் அப்பா மாதிரி தெரியவில்லை..''

''மாலினி..''

''ஸ்ஸ்.. சத்தம் போடக்கூடாது. அது அத்தைக்குப் பிடிக்காது?''

''யாருக்கு யார் அத்தை?''

''அடடா... இந்த சந்தேகம் உனக்கு தீரவே தீராதா.. இங்கே நிற்கிறாரே என் சின்னன்..ன.. அத்தான்.. இவருடைய அம்மாதான் எனக்கு அத்தை. என்ன அத்தான்.. நான் சொல்வது சரிதானே...''

மாலினி 'சின்ன அத்தானுக்கு' கொடுத்த அழுத்தத்தில் சொக்கிப்போன தினகரன்.. தேன் குடித்த நரியைப் போல் ஆகிவிட்டான்.

''நீங்க சொன்னால் அது தப்பாகவா இருக்கும்.. சரிதான்...''

''பார்த்தாயா ஸ்வேதா.. சின்ன அத்தான் என்ன சொல்கிறாருன்னு. இன்னும் உனக்கு சந்தேகம் தீரவில்லைன்னா

வா.. கீழே போய் என் அத்தையிடமே பேசி உன் சந்தே கத்தை தெளிவுபடுத்திக் கொள்ளலாம்..''

ஸ்வேதா செய்வதறியாத கோபத்துடன் மாலினியை முறைத்துக் கொண்டு நிற்க.. மாலினி அவளுடைய கோபத்தை குதூகலமாக பார்த்துக் கொண்டே தினகரனிடம் பேச்சை வளர்த்தாள்.

''ஏன் சின்ன அத்தான்.. இந்த நகைகளையும் பணத் தையும் காட்டி கணவனை விலைக்கு வாங்க வேண்டிய நிலையில் இருக்கும் பெண்களைப் பற்றி நீங்க என்ன நினைக்கறீங்க?''

இது தனக்கான அம்பு என்று ஸ்வேதாவிற்குப் புரிந்து விட்டது. கவனமாய் அம்பை அவள்மேல் எய்த மாலினி.. அடுத்த அம்பை செலுத்த தயாரானாள்.

''எங்க சசியின் அழகுக்கும் அன்புக்கும் முன்னால காசு பணம் நிற்க முடியல சின்ன அத்தான். வைரத்தையும் சொத்தையும் சசியின் வீட்டுக்காரர் முன்னால் போட்டா லும் அவர் அதை ஏறெடுத்துப் பார்க்காமல் எங்க சசியைப் பார்த்திட்டிருக்கிறாருன்னா சசியிடம் அந்த வைரங்களை யும் சொத்தையும்விட மேலான ஒன்றை அவர் பார்த்திருக் கிறாருன்னுதானே அர்த்தம்? சசியின் உயர்வுக்கு பக்கத்தில் பேச்சுக்குகூட யாராலும் நிற்க முடியாது அத்தான். எங்க சசியை கட்டின புடவையோடு அனுப்பினாலும் அடுத்த வங்க மனதைப் புண்படுத்தாமல் பேச வேண்டும்... பெரிய வங்ககிட்ட மரியாதையாய் இருக்க வேண்டும்னு ஆயிரம் குணங்களை சொல்லிக் கொடுத்து அந்த குணங்களை சீர்வரிசையாய் அனுப்பியிருக்கோம். அதெல்லாம் சுட்டுப் போட்டாலும் மத்தவங்களுக்கு வராது...''






*அலைகடலாய்.. உன் நினைவு..*
*ஆக்கிரமித்து.. எனை மயக்குவதை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

தினகரன்.. மாலினியின் சொல்லம்புகளை ரசித்துக் கொண்டிருந்தான். அவனுக்கும் சரி... அவனுடைய அண்ணன்மார்களுக்கும் சரி.. ஸ்வேதாவின் சாகசப் பேச்சுக் களை கட்டோடு பிடிக்காது. அதேசமயம் அவளை வாயடக்க வைக்கவும் அவர்களால் முடியாது. நர்மதா ஒருத்திதான் அவ்வப்போது ஸ்வேதாவை கடிந்து கொள்வாள். அவளுமே இப்படியெல்லாம் பேசக்கூடாது என்று சொல்வாளே யொழிய ஸ்வேதாவின் சாகசம் நிறைந்த ஜாடைப் பேச் சிற்கு பதிலடி கொடுத்ததில்லை. முதலில் அவள் பேசுவது ஜாடைப் பேச்சு என்று புரியும் முன்னரே ஸ்வேதா அடுத்த பேச்சிற்கு தாவி விடுவாள்.

அத்தகைய பாரம்பர்யம் கொண்ட ஸ்வேதாவின் ஜாடைப் பேச்சை இமைப் பொழுதில் கண்டுகொண்ட தோடு அவள் பேச்சிற்கு எதிர் பேச்சை அவள் பாணியி லேயே பேசி அவளை வாயடைக்க வைத்த மாலினியின் கெட்டிக்காரத்தனத்தை தினகரன் மனதிற்குள் மெச்சிக் கொண்டான். அத்தோடு அவன் நிறுத்தியிருக்கலாம். மனதில் நினைத்ததை வாய்விட்டுச் சொல்லிப் பாராட்டியும் வைத்தான்.

''வாவ்.. இதை நான் உங்களிடம் எதிர்பார்க்கவே இல்லை மாலினி.. அழகோடு அறிவும் சேர்ந்திருக்கும் பெண்ணை இப்போதுதான் பார்க்கிறேன்..''

இதைவிட ஸ்வேதாவின் மூக்கை உடைக்கும் வார்த்தைகள் வேறு எதுவும் இருக்க முடியாது என்று நினைத்துக் கொண்ட மாலினிக்கு சிரிப்பு வந்துவிட்டது.

''நீங்க சிரிக்கும்போது இன்னும் அழகாக இருக்கீங்க மாலினி..'' தினகரன் கிடைத்த சந்தர்ப்பத்தை விடாமல் வழிய ஆரம்பித்தான்.

ஸ்வேதா பல்லைக் கடித்தாள்.

'மகனே.. இத்தனை நேரமும் உன் முன்னால் நின்று நான் கடலை போட்டபோது விளக்கெண்ணெயைக் குடித்தவன் போல முகத்தை வைத்துக் கொண்டிருந்துவிட்டு இப்போது இவளைக் கண்டதும்.. இஞ்சி தின்ற குரங்கைப் போல பல்லைக் காட்டுகிறாயா.. இருக்குடா உனக்கு...'

ஸ்வேதாவின் முகபாவனையை வைத்தே அவளது எண்ணவோட்டத்தை யூகித்துக் கொண்ட மாலினி, உள்ளூர சிரித்துக் கொண்டாள். அவளுக்கு ஸ்வேதாவின் மேலிருந்த கோபம் இன்னும் தீரவில்லை. அவளைப் பேசியிருந்தால் கூட அவள் பொறுமையாக போயிருப்பாள். ஆனால் ஸ்வேதா.. முதல் நாள் இரவே.. 'எங்கள் குடும்பத்துப் பெண்களுக்கு இதெல்லாம் வராது..' என்ற ரீதியில் மாலினியின் குடும்பத்துப் பரம்பரையில் வந்த பெண்களையெல்லாம் வம்புக்கு இழுத்துவிட்டாள். அவளுக்கு பதிலடி கொடுக்காவிட்டால்.. மாலினியின் பாட்டி.. கொள்ளுப் பாட்டி.. கொள்ளுக் கொள்ளுப் பாட்டியெல்லாம் கோபித்துக் கொள்ள மாட்டார்களா?

அதனால் தன் குடும்பப் பெண்களின் பாரம்பர்யப் பெருமையைப் பாதுகாக்க களம் இறங்க வேண்டிய கட்டாயம் மாலினிக்கு வந்துவிட்டது.

''ஈஸிட்? நீங்க இதுவரைக்கும் அழகான பெண்களைப் பார்த்ததில்லையா.. இல்லை அறிவான பெண்களைப் பார்த்ததில்லையா?''

ஸ்வேதாவைப் பார்த்தவாறே தினகரனிடம் கேள்வி கேட்டாள் மாலினி.

''நான் பார்க்காத பெண்களா?'' தினகரன் பெருமையாய்க் கூற..

''அதுதான் எனக்குத் தெரியுமே.. அந்தப் பெண்கள் உங்களைத் திரும்பிப் பார்த்தார்களா..?'' என்று சந்தடி சாக்கில் தினகரனின் மூக்கையும் சேர்த்து உடைத்தாள் மாலினி.

அதை உணர்ந்து கொண்ட தினகரனின் விழிகளில் தெரிந்த பாராட்டுதலின் சாயை அதிகமானது. அதைப் பார்த்த ஸ்வேதா..

'ரோஷமில்லாதவன்.. இவள் இப்படியொரு கேள்வியைக் கேட்கிறாள்.. அதையும் கேட்டுக் கொண்டு 'ஈ'..ன்னு பல்லைக் காட்டுகிறானே...' என்று மனதிற்குள் தினகரனை திட்டித் தீர்த்தாள்.

''ஏன் மாலினி.. பெண்கள் என்னைத் திரும்பிப் பார்க்க மாட்டார்களா?'' கேலியான குரலில் தினகரன் வினவினான்.

''ஏன் திரும்பிப் பார்க்க மாட்டார்கள்.. அதெல்லாம் திரும்பிப் பார்ப்பார்கள்.. அதைத்தான் தினமும் நான் பார்த்துக் கொண்டிருக்கிறேனே...'' ஸ்வேதாவை ஜாடையாய் பார்த்தபடி மாலினி கூற, ஸ்வேதா முகம் மலர்ந்தாள். தினகரன் முகம் கடுத்தான்.

''நான் கேட்டது வேறு பெண்களை..'' அவன் எரிச்சலுடன் சொன்னான்.

''வேறு பெண்களா.. அது யார் சின்ன அத்தான்?'' மாலினி வரவழைத்துக் கொண்ட ஆச்சர்யத்துடன் வினவினாள்.

''நான் கேட்டது அழகான பெண்களை.. அறிவான பெண்களை..'' தினகரன்.. ஸ்வேதாவை இப்போது வெளிப் படையாகவே முறைத்தான்.

''ஓ... நீங்க அப்படி வருகிறீங்களா..'' மாலினியும் ஸ்வேதாவைப் பார்த்தபடி கிண்டலாகப் பதில் சொன்னாள்.

''அப்படித்தான். இப்பச் சொல்லுங்க.. அப்படிப்பட்ட பெண்கள் என்னைத் திரும்பிப் பார்க்க மாட்டாங்களா?''

''அது என்னவோ.. எனக்குத் தெரியாது. ஆனால்.. சசிரேகாவை உங்க அண்ணன்தான் முதலில் திரும்பிப் பார்த் திருக்கிறார்.. சசி அவரை ஏறெடுத்தும் பார்க்கவில்லை...''

மாலினி வீசிய இந்த சொல்லம்பு தனக்கானது என்று ஸ்வேதாவிற்கா புரியாது. அவளது முகம் கறுப்பதைப் பார்த்தபடி தன் தாக்குதலைத் தொடர்ந்தாள் மாலினி.

''எங்கள் குடும்பத்துப் பெண்கள்... ஆண்களை ஏறெடுத்துதான் பார்க்க வைப்போம். நாங்கள் யாரையும் ஏறெடுத்தும் பார்க்க மாட்டோம். எங்களைத் தேடி பெரிய குடும்பங்களில் இருந்து பெண் கேட்டு வர வைப்போம். நாங்களாகப் போய் இந்த வீட்டிற்கு மருமகளாக மாட்டோமா என்று தவம் கிடக்க மாட்டோம். எங்கள் குடும்பத்துப் பெண் களுக்கு நீங்கள் சொன்ன அழகும் அறிவும் நிறைய இருக்கும்.. சாகசம் இருக்காது. பொறுமை இருக்கும்.. பெருமை இருக்காது. பணிவும் பண்பாடும் இருக்கும்.. பகட்டு இருக்காது. அடக்கம் இருக்கும்.. ஆணவம் இருக் காது. நேர்மை இருக்கும்.. சிறுமை இருக்காது.''

விட்டால் அன்று முழுவதும் மாலினி. அவள் குடும் பத்துப் பெண்களின் சிறப்பம்சங்களைப் பட்டியலிட்டுக் கொண்டிருப்பாள் என்பது புரிந்துபோக.. ஸ்வேதா அந்த இடத்தை விட்டு வேகமாக அகன்றாள்.



மாடிப்படிகளில் அவளது கோபமான காலடியோசை தேய்ந்து மறைவதைக் கேட்டபடி மாலினியைப் பார்த்த தினகரன்...

''தேங்க்ஸ்..'' என்று நன்றியுணர்வுடன் கூறினான்.

அவன் உண்மையாகவே நன்றி சொல்கிறான் என்பதை அவனது முகம் உணர்த்த...

''எதற்கு இந்த தேங்க்ஸ்?'' என்று ஆச்சரியத்துடன் மாலினி கேட்டாள்.

''ஸ்வேதாவிடமிருந்து என்னைக் காப்பாற்றியதற்கு...''

''இது உங்களுக்கே ஓவராகத் தெரியவில்லையா?''

''கொஞ்சம்கூடத் தெரியவில்லை. உங்களுக்கு எப்படிங்க என் கஷ்டம் புரியும்.. நீங்கதான் தாய்க்குல மாச்சே.. பெண்கள் பெண்களை விட்டுக் கொடுப்பீங்களா என்ன?''

''அதெல்லாம் உங்க மாமன் மகளை விட்டுக் கொடுப் பேன். ஏன்னா.. அந்த ஜீவன் தாய்க்குலமேயில்லை..''

''அப்படின்னா அவ யாரு? பேய்க்குலமா?''

''ஊஹூம்.. அப்படி நான் சொல்ல மாட்டேன்..''

''ஏன்?''

''அப்புறம் பேய்கள் என்கூட சண்டைக்கு வந்து விடாதா.. பெண்ணுன்னா பேயே இரங்கும்.. இவள்.. இவளைத் தவிர மற்ற பெண்களை மனுஷியாகவே நினைக்க மாட்டேன்கிறா...''

''சரியான மதிப்பீடு...''

''தேங்க்ஸ்..''

''என்னவோ போங்க.. அவள் எப்போது பார்த்தாலும் என்னிடம் 'மொக்கை' போடுவாள்தான். ஆனால், இன்றைக்கு என்னடாவென்றால் காலையிலேயே ஆரம்பித்துவிட்டாள்..''

''எதை ஆரம்பித்து விட்டாள்?''

'''மொக்கை' போடுவதைத்தான்..''

மாலினிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. அவள் வாய் பொத்தி சிரித்துக் கொண்டிருக்கும்போது அந்த ஹாலில் பிரபாகரன் நுழைந்தான். தினகரனிடன் நின்று சிரித்துக் கொண்டிருந்த மாலினியையும் அவளது சிரிப்பையும் ரசித்துக் கொண்டிருந்த தினகரனைப் பார்த்தவனின் முகம் மாறியது. அவனை அங்கே கண்டவுடன் மாலினியின் சிரிப்பும் நின்றுவிட்டது. அதைப் பார்த்தவாறே அவன் அவர்களுக்கு அருகில் வந்தான்.

''என்ன தினா.. உன்னை பேங்க்குக்குப் போகச் சொன்னேனே... போகவில்லையா?'' அழுத்தமான குரலில் வினவினான்.

''இதோ போய்க்கிட்டே இருக்கேன் அண்ணா...'' தினகரன் அவசர நடையுடன் மாடிப் படிகளை அடைந்தான்.

அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்த பிரபா கரன், சாவாதானமாய் மாலினியின் பக்கம் திரும்பினான்.

'கடவுளே... இவன் சும்மாவே சாமியாடுவானே.. இப்போது நான் சிரிப்பதை நேரில் பார்த்துவிட்டானே.. என்ன செய்ய காத்திருக்கிறானோ..' மாலினி மனம் நடுங் கினாள்.

அவள் முகம் சிரிப்பைத் தொலைத்துவிட்டு கலக்க மாக இருக்க.. பிரபாகரன் கூர்மையாக அவளைப் பார்த்தான்.

''தினா.. ஜோக்கடித்தானா?''

''இல்.. இல்லை..''

''ஊஹூம்.. அப்போ நீ ஜோக்கடித்தாயா?''

''அதுவும் இல்லை...''



''எதுவுமில்லாமல் ஏன் அப்படி அவனிடம் சிரித் தாய்?''

'ஆரம்பித்து விட்டாயா?' என்று இருந்தது மாலினிக்கு.

என்றைக்கும் சிரிக்காதவள் திருவிழாக் கடையில் சிரித்தாளாம். அந்தக் கதையாய் இன்றைக்கு ஆகிப்போய் விட்டதே என்று வருத்தப்பட்டாள் மாலினி.

காலையில்தான் அவர்கள் இருவருக்கும் இடையே ஆறு மாத காலமாக இருந்த பிணக்கு முடிவுக்கு வந்தது. இப்போது திரும்பவும் பிணக்கு ஆரம்பித்தால் அவள் தாங்கு வாளா?

தினகரனுடன் நின்றுகூடப் பேசாதவளை அன்று நின்று பேச வைத்துவிட்ட ஸ்வேதாவை மனதார மனதிற் குள் திட்டித் தீர்த்துக் கொண்டாள் மாலினி.

''யாரைத் திட்டுகிறாய்?'' என்று அவளது முகபாவ னையைக் கவனித்தவாறே கேட்டான் பிரபாகரன்.

'இவன் ஒருத்தன்.. இவன் முன்னால் மனதில்கூட எதையும் நினைத்துத் தொலைக்க முடியாது. 'மைண்ட் ரீடிங்' தெரிந்தவனைப் போல உயிரை எடுப்பான். பெரிய 'சந்திரமுகி ரஜினி'ன்னு மனதிற்குள் ஒரு நினைப்பு..'

''என்ன பதிலைக் காணோம்?''

''நான் என்னத்தை பதில் சொல்லி நீங்க என்னத்தைக் கேட்டு.. அதெல்லாம் வேலைக்கு ஆகாது அத்தான்..''

''நீ சொல்லு.. அது வேலைக்கு ஆகுமா ஆகாதான்னு நான் முடிவு பண்ணிக்கிறேன்..''

அவன் அமர்த்தலான குரலில் சொன்னான்.



*உன் வாய் பேசாத போதும்...*
*உன் கண் பேசும் கதையை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

"நான் எதற்காக அத்தான் இன்றைக்கு லீவு போட்டேன்?"

"அதைத்தான் நீ மறந்துவிட்டாயே.."

மாலினியின் கேள்விக்கு பிரபாகரன் பதிலடி கொடுக்க.. அவள் மௌனமாக அவனை முறைத்தாள். அவன் அயராமல் பதில் பார்வை பார்த்தான்.

"காயத்ரியைப் பெண்பார்க்க வருகிறாங்க.. எனக்கு ஒத்தாசையாய் இருன்னு அத்தை சொன்னாங்க. அதுக்காக லீவு போட்டேன்.."

"ஓ.. அப்படியா.. தினாவின் பேச்சுக்கு சிரித்துக் கொண்டு நிற்பதுதான் நீ பண்ணும் ஒத்தாசையா?"

இப்போது மாலினிக்கு குற்றஉணர்வு போய் கோபம் வந்துவிட்டது. அவள் எரிப்பதை போல் பிரபாகரனை பார்க்க ஆரம்பித்து விட்டாள்.

"உங்கள் தம்பி.. உங்களுக்குத்தான் உயர்த்தி. எனக்கு இல்லை.."

"ஓஹோ.."

"சிரிக்க வைக்கக்கூட அவருக்குத் தெரியுமா?"

"அது எனக்குத் தெரியாது. சிரித்த உனக்குத்தான் தெரியும்..."



"கஷ்டகாலம்.."

"யாரைச் சொல்கிறாய்?"

"உங்களைச் சொல்லவில்லை.."

"ஏன்.. அதையும்தான் சொல்லிப் பாரேன்.."

"சண்டைக்கு வருகிறீங்களா?"

"எனக்கு வேறு வேலையே இல்லையா.. என்னைச் சொல்லவில்லைன்னா வேறு யாரைச் சொன்னாய்.. தினாவையா?"

"அவரைப் போய் சொல்வேனா?"

"அதுதானே பார்த்தேன்..."

மாலினி இமைக்காமல் பிரபாகரனையே பார்த்துக் கொண்டிருக்க.. அவனும் சளைக்காமல் அவள் பார்வையைச் சந்தித்தான்.

"நீங்க அடங்கவே மாட்டீங்களா?"

"நீதான் அடக்கிப் பாரேன்..."

"உங்களை அடக்க என்னால் முடியுமா.. அதனால் அந்தக் கதையை விட்டுவிட்டு வேற கதையைப் பேசலாமா?"

"பேசு.."

"நான் கஷ்டகாலம்னு ஸ்வேதாவைச் சொன்னேன்..."

"அவள் எங்கே இங்கே வந்தாள்?"

"அதுசரி... இவ்வளவு நேரமும் நான் உங்கள் தம்பியுடன் தனியாக நின்று பேசிக் கொண்டிருந்தேன்னா நினைத்தீங்க.. சரியாப் போச்சு போங்க.."

இப்போது பிரபாகரனின் முகத்தில் இறுக்கம் கொஞ்சம் தளர்ந்தது.

''ஸ்வேதாவும் இங்கே இருந்தாளா?''

''ஆமாம்.. நான் டிபன் சாப்பிட கீழே வரலாம் என்று ரூமை விட்டு வெளியே வரும்போது இவள் உங்க தம்பியுடன் நின்று பேசிக் கொண்டிருந்தாள்..''

''என்ன பேசினாளாம்?''

'''மொக்கை' போட்டாளாம்...''

'''மொக்கையா..'?''

பிரபாகரன் தன்னையுமறியாமல் வாய்விட்டு சிரித்தான்.

''பார்த்தீங்களா.. நீங்களே சிரித்துட்டீங்க..''

''ஏன் எனக்குச் சிரிப்பு வராதா? நானும் மனிதன் தானே..''

''எது எப்படியோ.. மனிதப் பிறவிகளுக்கு சிரிப்பு வரும்கிறதை நீங்க ஒப்புக்கொண்டதே எனக்குப் போதும். ஏன்னா.. உங்க தம்பி இதைச் சொன்னவுடன் எனக்குச் சிரிப்பு வந்து தொலைத்துவிட்டது...''

மாலினி அலுப்பாக கூறியவுடன்.. பிரபாகரனின் முக இறுக்கம் முற்றிலும் தளர்ந்துவிட்டது. அவன் இயல்பாக பேச ஆரம்பித்துவிட்டான்.

''நான் உன்னைத் தேடித்தான் வந்தேன்..''

''என்ன விஷயம்?''

''காயத்ரிக்கு அலங்கரிக்க பியூட்டி பார்லரிலிருந்து ஆள் வரவழைக்க வேண்டாம்னு அம்மாவிடம் சொல்லிவிட்டாயாமே...''

''ஆமாம்.. நான் பார்த்துக் கொள்கிறேன். சசி எனக்கு ஹெல்ப் பண்ணுவாள்...''



''அதற்காக ஏதும் வேண்டுமா? நான் வாங்கி வரட்டுமா?''

''பெண்களின் சமாசாரம் உங்களுக்கு எப்படித் தெரியும்? நானும் சசியும் போய் வாங்கிக் கொண்டு வருவோம்..''

''துணைக்கு யார் வருவது?''

''ஏன்.. உங்க.. ப.ப. பரந்தாமன் என்ன ஆனார்?''

''அவருக்கு ஆயிரம் வேலையிருக்கு. நான் உங்களைக் கூப்பிட்டுக் கொண்டு போகிறேன். சீக்கிரமாய் டிபனை முடித்துக் கொண்டு கிளம்புங்க..''

அந்த வீட்டு டிரைவருக்கு ஆயிரம் வேலைகள் இருக்கிறதாம். அந்தக் குடும்பத்தின் தலைமகன்.. பல தொழில்களின் பொறுப்பை தன் தோள் மேல் தாங்கிக் கொண்டிருப்பவனுக்கு ஒரு பொறுப்பும் இல்லையாம்.

மாலினியின் முகத்தில் புன்னகை படர்ந்தது. அதைப் பார்த்த பிரபாகரனின் முகத்தில் உல்லாசம் படர்ந்தது.

''என்ன.. என்கூட வருகிறாயா?''

என்னவோ... 'ஓடிப் போகலாமா?' என்ற தொனியில் அவன் கேட்கவும், அவளுக்கு சிரிப்பு அதிகமாகியது.

''வருகிறோம்..'' என்று சொன்னாள்.

பிரபாகரன் அங்கிருந்து நகராமல்.. அவளையே பார்த்துக் கொண்டு நிற்கவும்.. மாலினிக்கு அங்கேயிருந்து போக மனமில்லாமல் போய்விட்டது.

எதைப் பேசுவது என்று புரியாமல் இருவரும் திகைத்தனர். பிரபாகரன் தேவையில்லாமல் கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டான். மாலினி.. உதட்டைக் கடித்துக் கொண்டாள். அவளது உதட்டின் மேல் அவன் பார்வை படிய.. முகம் சிவக்க... தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

என்ன தெரியும்.. அவள் பாவம்.. இன்ஜினீயராக வேலை பார்க்க சென்னையிலிருந்து மார்த்தாண்டத்திற்கு வந்திருப்பவள். இன்றைக்கு என்னவோ.. அம்மாவுக்காக.. அவங்க சொன்ன ஒரு வார்த்தைக்காக லீவைப் போட்டுவிட்டு வீட்டில் இருக்கிறாள். மற்ற நாள்களில் நீ பேசும் இந்த வெட்டிப்பேச்சைக் காது கொடுத்து கேட்க அவளுக்கு நேரம் இருக்குமா.. சாப்பிட நேரமில்லாமல் ஓடிக்கொண்டிருப்பவளிடம் சாப்பாட்டைப் பற்றி நீ பேசினால் அவள் என்ன பதிலைச் சொல்லுவாள்? இதெல்லாம் உன் டிபார்ட்மெண்ட்.. அதனால இதைப் பற்றி நீ தனியாகவே ஆராய்ச்சி செய்து பிஹெச்.டி. பண்ணி டாக்டரேட் பட்டம் வாங்கு. மாலினியை விட்டுவிடு.. அவளுக்கு ஆயிரம் வேலைகள் இருக்கு...''

நர்மதா உள்பட அங்கிருந்த அனைவரும் குறுஞ்சிரிப்புடன் ஸ்வேதாவைப் பார்க்க.. அவளுக்கு அவமானம் பிடுங்கித் தின்றது. பிரபாகரன், மாலினிக்கு ஆதரவாக இந்த அளவுக்கு பேசிவிட்ட பின்னால் அந்த வீட்டிலிருக்கும் வேலையாள்கள்கூட இனி மாலினியைத்தான் மதிப்பார்கள். தன்னை ஒரு பொருட்டாகக் கருத மாட்டார்கள் என்று அவளுக்குப் புரிந்து போனது.

''மாலினி..'' அதட்டலாக அழைத்தான் பிரபாகரன்.

அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''சீக்கிரமாய் டிபனை முடி.. சசி.. உன்னையும்தான். நாம் மூவரும் வெளியே போக வேண்டியிருக்கிறது...''

பிரபாகரனின் வார்த்தைகளைக் கேட்டதும் சசிரேகா மரியாதையுடன்..

''சரி.. பெரிய அத்தான்..'' என்று பதில் சொல்லிவிட்டு வேகமாய் சாப்பிட ஆரம்பித்தாள்.

மாலினி, சசியின் அருகே அமர.. இயல்பாக அவள் அருகே அமர்ந்த பிரபாகரன். அவள் தட்டில் பூரிகளை வைத்துவிட்டு குருமா கிண்ணத்தையும் நகர்த்தி வைத்தான்.



அதைப் பார்த்துக் கொண்டிருந்த ஸ்வேதாவிற்கு மேனி எரிந்தது. அவள் பிரபாகரனைப் பார்த்து..

"நீங்க மூன்று பேரும் எங்கே போறீங்க அத்தான்?'' என்று விசாரித்தாள்.

'இப்போதுதான் இவளை மிக மோசமாக மட்டம் தட்டிப் பேசினான் பிரபாகரன்.. அதை உடனேயே தட்டி விட்டு எதுவும் நடக்காததைப் போல அடுத்த விஷயத்தை அறிய மூக்கை நுழைக்கிறாளே.. இவளெல்லாம் என்ன ஜென்மம்?' என்று நினைத்துக் கொண்டு ஸ்வேதாவை பார்த்தாள் மாலினி.

அவளுக்கும் அதே நினைவுதான் என்பது அவளது பதில் பார்வையிலிருந்து புரிய.. பேசாமல் குனிந்து சாப்பிட ஆரம்பித்தாள்.

நர்மதா கண்டிப்புடன் நிமிர்ந்து ஸ்வேதாவைப் பார்த்தாள். மற்ற நாள்களில் அவள் ஸ்வேதாவை லேசாக கடிந்து கொண்டு விட்டு விடுவாள். இன்று அவளுடைய செல்ல மகளைப் பார்க்க வருகிறார்கள். இன்று ஸ்வேதாவை எளிதாக விட்டு விட நர்மதா தயாராக இல்லை.



*பொட்டு வைத்த போது...*
*எனைத் தொட்டுச் சென்ற உன் நினைவை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

''அவர்கள் எங்கே போனால் உனக்கென்ன ஸ்வேதா?'' நர்மதாவின் குரல் கண்டிப்புடன் வெளியே வந்தது.

''அதில்லை அத்தை.. நான் வீட்டில் சும்மாதானே இருக்கிறேன்?''

''அதைத்தானே பிரபா இவ்வளவு நேரமும் சொல்லிக் கொண்டிருந்தான்?''

நர்மதாவின் குரலில் தெரிந்த கோபம் கலந்த கேலியை ஸ்வேதா கண்டுகொண்டதாகவே தெரியவில்லை.

''நானும் அவர்களுடன் போகிறேனே அத்தை...''

''எதற்காக? அவர்களுக்கு வேலையிருக்கு... போகிறார்கள்..''

'''நானும் அவர்களுக்கு ஹெல்ப் பண்ணுகிறேனே..''

''அவர்களுக்குத் செய்யும் உதவியை நீ வீட்டிலிருந்து செய்..''

''அது எப்படி அத்தை.. அவர்கள் கூடப் போனால் தானே உதவ முடியும்?''

''அவர்கள் கூடப் போகாமல் நீ இருந்தாலே அவர்களுக்கு அது மிகப் பெரிய உதவிதானே ஸ்வேதா..''

மாலினி சிரிப்பை அடக்கிக் கொள்ள மிகவும் பிரயத்தனப்பட்டாள். சசிரேகாவைப் பார்த்தபோது.. அவள் முகத்தில் எந்தவித உணர்வையும் பிரதிபலிக்காமல் சிலை போல அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தாள்.

'இவளால் எப்படித்தான் இப்படி இருக்க முடிகிறதோ..' மாலினி ஆச்சரியப்பட்டுப் போனாள்.

மாலினியின் முகத்தில் தெரிந்த சிரிப்பை ஸ்வேதா பார்க்காமல் இல்லை. அவள்தான் எதை.. எங்கே.. எப்போது கண்டுகொள்ள வேண்டும் என்பதில் கைதேர்ந்தவள் ஆயிற்றே.

அதனால் மிகச் சாதாரணமாக முகத்தை வைத்துக் கொண்டு வேதாளம் தன் முயற்சியைத் தொடர்வதைப் போல விடாமல் தன் முயற்சியைத் தொடர்ந்தாள்.



''வீட்டில் இருந்து நான் என்ன செய்யப் போகிறேன் அத்தை...''

''இத்தனை நாள்களாய் என்ன செய்து கொண்டு இருந்தாயோ அதையே செய்..''

''வீட்டில் நடக்கும் விசேஷத்தில் என் பங்கும் இருக்க வேண்டாமா அத்தை?''

''அது உனக்கு நினைவில் இருந்தால் இந்த விசேஷம் முடிகிறவரை நீ வாயைத் திறக்காதே. மௌனவிரதம் இரு...''

''நான் உதவி செய்ய வந்தால் மறுக்கறீங்களே.. இது நியாயமா அத்தை...''

''கடுப்பைக் கிளப்பாதே ஸ்வேதா.. நேற்று ராத்திரி முழுவதும் கஷ்டப்பட்டு சசியும் மாலினியும் வாசலிலும் போர்டிகோவிலும் பெரிய பெரிய கோலங்களைப் போட்டாங்களே... அப்போது நீ போய் உதவி செய்ய வேண்டியதுதானே. உன் கையைப் பிடித்து யார் தடுத்தது?''

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முடியாமல் ஸ்வேதா திணறிக்கொண்டிருக்கையில்.. காயத்ரி லேசான சிரிப்போடு..

''அதுசரி.. மாலினியும் சின்ன அண்ணியும் கோலம் போட்டால் ஸ்வேதா எப்படி ஹெல்ப் பண்ணப் போவாள்.. அந்த இடத்தில் பெரிய அண்ணனும் தினா அண்ணனும் இருந்திருந்தால் ஹெல்ப் பண்ண ஓடியிருப்பாள்..'' என்று கூறினாள்.

ஸ்வேதா வெட்கப்படுவதைப் போல காயத்ரியைப் பார்த்து கொஞ்சும் குரலில்...

''கேலி பண்ணாதே காயத்ரி...'' என்று சொல்லவும், நர்மதாவும் எரிச்சலுடன் தன் பெரியப்பாவின் பேத்தியை முறைத்தாள்.

''நான் சொன்னால் சொன்னதுதான் ஸ்வேதா.. காயத்ரியைப் பெண்பார்க்க மாப்பிள்ளை வீட்டுக்காரங்க வந்து போகிறவரை நீ அடங்கியிருப்பதாக இருந்தால் மட்டுமே இந்த மட்டில் இரு. இல்லை.. இப்படி அபத்தமாகத்தான் உளறிக் கொண்டிருப்பேன்னு அடம்பிடித்தால் இன்றைக்கு வரும் உன் அப்பாம்மாவுடன் வீட்டிற்கு கிளம்பிவிடு..''

''என்ன அத்தை பிரிச்சுப் பேசறீங்க.. இதுதானே என் வீடு?''

தினகரன் கைகழுவ எழுந்து கொண்டே காயத்ரியைப் பார்த்து ஜாடை காட்டி சிரித்தான். பின் ஸ்வேதாவைப் பார்த்து..

''அதுவா ஸ்வேதா.. நீ வருஷக்கணக்கில் இந்த வீட்டில் முகாம் போட்டிருக்கிறாயில்லையா.. அதனால் வந்த பிரமைதான் இது. உன் வீடு.. கருங்கல்லில் இருக்கிறது ஸ்வேதா. இது எங்களின் வீடு. கோட்டையூர் ஜமீன்தார் கார்த்திகேயன் பெற்ற பிள்ளைகளுக்குச் சொந்தமானது. அதனால் பேச்சுக்குகூட இதை உன் வீடுன்னு சொல்லாதே. நான் ஒரு நேரம் போல ஒரு நேரம் இருக்க மாட்டேன். கேஸ் போட்டுவிடுவேன்..'' என்று சொல்லியபடி சென்றுவிட்டான்.

சசிரேகா எழுந்துகொண்டே கணவனின் அனுமதியைக் கண்களால் வேண்ட.. அவன் லேசாக தலையசைத்து அவளுக்கு சம்மதம் சொன்னான். அவள் முகமலர்ச்சியுடன் கைகழுவ விரைந்தாள்.

சின்ன மருமகள்.. பார்வையிலேயே கருணாகரனிடம் அனுமதி வாங்கிய விதத்தைக் கண்டு நர்மதாவிற்கு மனதிற்குள் பெருமையாக இருந்தது.

'அருமையான பெண்.. கோட்டையூர் ஜமீன் வமிசத்தின் பெருமையைக் காப்பாற்ற வந்தவள்..' மனதிற்குள் சசிரேகாவை சிலாகித்துக் கொண்டாள்.



அதையறியாமல் ஸ்வேதா.. கருணாகரனுடன் சசிரேகா பார்வைப் பரிமாற்றம் செய்து கொண்டதற்கு புது அர்த்தத்தை கற்பித்தாள்.

''என்ன காயத்ரி இது.. வயதுப் பெண்கள் இருக்கும் இடத்தில் கருணா அத்தானின் மனைவி அடக்கி வாசிக்க வேண்டாமா.. நம் முன்னாலேயே இப்படி அத்தானை பார்த்து வைக்கிறாளே. நம் குடும்பத்தில் எல்லாம் இப்படி இருக்கவே மாட்டோம்.. சேச்சே..''

அவ்வளவுதான்.. நெற்றிக் கண்ணின் உக்கிரத்தை தன் இரு கண்களிலும் தேக்கி நர்மதா அக்கினிப் பிழம்பாக அவளை ஒரு பார்வை பார்த்தாள். ஸ்வேதா நடுங்கிவிட்டாள்.

''அத்தை..''

''நீ அடங்கவே மாட்டாயா..''

''இல்லை அத்தை.. அது வந்து..''

''ஷ்ஷ்ஷ்..''

நர்மதா வாயில் தன் ஆள்காட்டி விரலை வைத்து ஸ்வேதாவை அடக்கினாள். பின்னர் கைகளால் அவளைப் போய்விடும்படி சமிக்ஞை செய்தாள்.

நர்மதா அவ்வளவு கோபத்தை அதுவரை ஸ்வேதாவிடம் காட்டியதில்லை. நர்மதாவின் கோபத்திற்கு முன்னால் எப்போதுமே ஸ்வேதாவினால் எதிர்த்து நிற்க முடிந்ததில்லை. அவள் அவசரமாக எழுந்து அந்த இடத்தை விட்டுப் போய்விட்டாள்.

நர்மதாவின் உக்கிரத்தைக் கண்டு காயத்ரியே பயந்து போய் மௌனமாகிவிட.. மாலினி எழுந்து கொண்டாள்.

''என்னம்மா சாப்பிட்டு விட்டாயா?'' அக்கறையுடன் நர்மதா வினவினாள்.

அவ்வளவு சீக்கிரமாய் அவள் இயல்பு நிலைக்கு திரும்பிவிட்டதைக் கண்ட மாலினி.. மனதிற்குள் ஆச்சரியப் பட்டுக் கொண்டாள்.

'சும்மாவா இந்த அம்மாவை எல்லோரும் ஒரு மகாராணி யைப் போலக் கொண்டாடுகிறார்கள்...'

மனதில் தோன்றிய மெச்சுதலுடன்..

''சாப்பிட்டு விட்டேன் அத்தை...'' என்று மரியாதை யாகச் சொன்னாள் மாலினி.

''என்னவோ போ.. மற்ற நாள்களில்தான் உட்கார்ந்து சாப்பிட நேரமில்லாமல் ஓடிவிடுகிறாய்னு பார்த்தால்.. இன்றைக்குமா இப்படி ஆக வேண்டும்?''

நர்மதாவின் வருத்தம் புரிந்தாலும்.. அவளுடைய ஒன்றுவிட்ட அண்ணன் மகளைப் பற்றிய கவலைக்கு எப்படி ஆறுதல் சொல்வது என்ற எண்ணத்துடன் மாலினி.. மறைமுகமாக அவளுக்குத் தன் பதிலைச் சொன்னாள்.

''நான் சென்னையில் பிறந்து வளர்ந்தவள் அத்தை. இதுபோல நிறைய பார்த்திருக்கிறேன். எதுவுமே என்னைப் பாதிக்காது அத்தை.. இதுவரைக்கும் நானுண்டு என் படிப்புண்டுன்னு போய்க்கிட்டு இருந்தேன். இனிமேல் நானுண்டு என் வேலையுண்டு இருக்கப் போகிறேன். அதனால் நீங்கள் எதைப் பத்தியும் கவலைப்பட்டுக்க வேணாம் அத்தை. இன்றைக்கு வீட்டில் விசேஷம் நடக்கப் போகுது. நீங்க ஃப்ரீ மைண்டா இருங்க..''

மாலினி மறைமுகமாக ஆறுதல் சொல்வதை புரிந்து கொண்ட நர்மதா.. பிரபாகரனைப் பார்த்து.. 'கவனித்தாயா..' என்பது போல் சிரிக்க.. அவனும் மெல்லிய சிரிப்புடன் தலையை ஆட்டினான்.

''நான் சசியுடனும் பெரிய அத்தானுடனும் வெளியே போய்விட்டு வரவா அத்தை?'' மாலினி வினயமாக நர்மதா விடம் அனுமதி கேட்டாள்.

நர்மதாவின் முகம் மலர்ந்துவிட்டது.

''தாராளமாய் போய்விட்டு வா.. காயத்ரிக்கு அலங் காரம் பண்ணத் தேவையானதை வாங்கத்தானே போறீங்க. பிரபா என்னிடம் ஏற்கெனவே சொல்லிவிட்டானே..''



''இருந்தாலும்.. நான் சொல்லவில்லையே.. நான் சொல்ல வேண்டாமா?''

நர்மதா, மாலினியை அன்போடு பார்த்தாள்.

''உன் வீட்டில் உன்னை நன்றாக வளர்த்து வைத்திருக் காங்கம்மா.. நல்லா இரு..''

மாலினி மரியாதையுடன் சிரித்துவிட்டு கைகழுவி விட்டு.. வாசலுக்கு சென்றாள். அங்கே சசிரேகா.. கருணா கரனிடம் நின்று பேசிக் கொண்டிருந்தாள். கணவனும் மனைவியும் தனிமையில் பேசிக் கொண்டிருக்கிறார்களே என்று மாலினி தயங்கி நிற்க.. சசிரேகா திரும்பிப் பார்த்து..

''வா.. மாலினி..'' என்றாள்.

வேறுவழியின்றி மாலினி அவர்களுக்கு அருகே சென்றாள்.

''உன்னைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தோம் மாலினி..'' என்று சசிரேகா கணவனைப் பார்த்தபடி கூறி னாள்.

''என்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தீர்களா?'' மாலினி திகைத்தாள்.

''ஆமாம்மா.. உன்னைப் பற்றி சசி ரொம்ப கவலைப் படுகிறாள். நீ பத்திரமாய் இருக்கணும்னுதான் உன் வீட்டில் உன்னை எங்கள் வீட்டில் தங்க வைத்தாங்க..'' வருத்தத் துடன் பேசினான் கருணாகரன்.

''நான் இங்கே பத்திரமாகத்தானே இருக்கிறேன் அத்தான்..'' மரியாதையுடன் பதில் சொன்னாள் மாலினி.

''பத்திரமாக இருக்கிறாய்.. நிம்மதியாக இருக்கிறாயா?''

''ஏன் அத்தான்.. என் நிம்மதிக்கு என்ன குறை?''

''ஸ்வேதாதான் குறை..''

''அவளெல்லாம் எனக்கு ஒரு மேட்டரே இல்லை..''

''அப்படியில்லை மாலினி...''

''இதோ பாருங்கள் அத்தான்.. இப்போது டைனிங் ஹாலில் நீங்களும் சசியும் வந்த பின்னால் அத்தையும் இப்படித்தான் வருத்தப்பட்டாங்க. அவங்களிடம் என்ன சொன்னேன் தெரியுமா?''

''என்ன சொன்னாய்?''

''நான் சென்னையில் பிறந்த வளர்ந்தவள். இவளைப் போல எத்தனையோ பேரை தினம் தினம் பார்த்திருக் கிறேன். அத்தனையையும் சமாளித்து வந்திருக்கிறேன். அதோடு ஒப்பிடும்போது ஸ்வேதாவெல்லாம் சப்பை மேட்டர் அத்தான். நான் அவளையெல்லாம் மைண்ட் பண்ணிக்கவே மாட்டேன். நீங்களும் அத்தையும் இதை நினைச்சு ஃபீல் பண்ணிக்காம ஃப்ரீ மைண்டா இருந்தால் அதுவே எனக்குப் போதும்..''

மாலினி தெளிவாகப் பேசப் பேச.. கருணாகரன் வியப்புடன் அவளைப் பார்த்தான்.

'பரவாயில்லையே.. இந்தப் பெண் ரொம்பவும் புத்தி சாலியாக இருக்கிறாளே..' என்று அவனுக்குத் தோன்ற, மனைவியைப் பார்த்துச் சிரித்தான்.



*நீ அருகில் வந்தபோது...*
*நான் உருகி நின்ற நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

கார் நெடுஞ்சாலையில் விரைந்தது.

''நாம்.. எங்கே போகிறோம் சசி?'' என்று கேட்டாள் மாலினி.



மார்த்தாண்டத்திலிருந்து வெளியேறி கார் நெடுஞ் சாலையில் விரைவதை சசிரேகாவும் கவனித்துக் கொண்டு தான் இருந்தாள். ஆனால்.. பிரபாகரனிடம் அதைப் பற்றிக் கேட்கும் துணிவு அவளுக்கில்லை.

''ஷ்ஷ்.. என்னை ஏண்டி கேக்கிற?'' என்று மாலினி யிடம் அவள் முணுமுணுத்தாள்.

''நீயும்தானே என்கூட காரில் வருகிற. உன்னைக் கேட்காமல் யாரிடம் கேட்பது?''

''ஏண்டி.. என்னை மாட்டி விடற. எனக்கு இது தெரியாது. காரை ஓட்டுவது பெரிய அத்தான். நீ அவரிடமே இதைப் பத்திக் கேளு...''

''அதையும் நான்தான் கேட்கணுமா.. நீ கேட்டுச் சொல்ல மாட்டாயா?''

''இதோ பார் மாலினி. அவர் காரை இந்த கன்யாகுமரி கடலுக்குள் விட்டால்கூட நான் எங்கே போகிறோம்னு அவரிடம் கேட்க மாட்டேன்...''

''அடிப்பாவி.. உன் வீட்டில் தங்கியிருப்பதற்கு நீங்க இதையும் செய்வீங்களா.. உங்களை நம்பி காரில் ஏறி உட்கார்ந்தால் கடலில் விடுவீங்களா.. உங்க இரண்டு பேரையும்விட அந்த ஸ்வேதா எவ்வளவோ தேவலை...''

பின்ஸீட்டில் அமர்ந்து கொண்டிருந்த மாலினியும் சசிரேகாவும் தாழ்ந்த குரலில் வழக்கடித்துக் கொண்டிருக்க.. பிரபாகரன் காரின் முன்பக்கத்தில் இருந்த கண்ணாடியை சரிசெய்து அதன் வழியாக மாலினியைப் பார்த்தான்.

''என்ன விஷயம்.. ஏன் எங்க வீட்டு மருமகளை மிரட்டிக் கொண்டிருக்கிற?'' என்று மாலினியை கேட்க வேறு செய்தான்.

''ஹலோ.. சார்..''

''சாரா.. யார் அது?''

''வேறு யார்.. எல்லாம் நீங்கதான்..''

''ஆஹா.. மரியாதை பலமாய் இருக்கு...''

''மகிழ்ந்துபோவது இருக்கட்டும். இவள் உங்க வீட்டுக்கு மருமகளாக வருவதற்கு முன்னாலேயே என் பெரியப்பாவிற்கு மகளாக பிறந்து விட்டாள்..''

''நேற்றுக் கதை நேற்றோடு.. இன்றைக்கு அவள் யார்?''

''மிஸஸ் கருணாகரன்..''

தன் கணவனின் பெயரை மாலினி சொல்லவும், சசிரேகாவிற்கு கோபம் வந்துவிட்டது. அவள் மாலினியின் கையைக் கிள்ளினாள்.

''ஸ்ஸ் ஆ.. ஏண்டி குரங்கே கிள்ளினாய்..'' மாலினி கையை உதறினாள்.

''நீதான் என் வீட்டுக்காரருக்கு பெயர் வைத்தாயா?''

''இல்லையே.. அவருடைய அப்பாவும் அம்மாவும் பெயர் வைத்திருப்பாங்க. அதுக்கும் நீ என் கையைப் பிடித்துக் கிள்ளியதற்கும் என்னடி சம்பந்தம் இருக்கு?''

''என்னவோ நீதான் அவருக்கு பெயர் வைத்ததைப் போலக் கொஞ்சம்கூட பயம் இல்லாமல்... மரியாதை இல்லாமல் அவர் பெயரை எப்படிடீ நீ சொல்லலாம்?''

சசிரேகா சண்டைக்கு வரவும்.. மாலினி, பிரபாகரனை முறைத்தாள்.

''இதை நீ உன் பெரிய அத்தானிடமே கேளுடி..''

''என்னிடம் ஏன் கேட்கச் சொல்லுகிறாள்.. சசி?''

''அவர்தானே நீ யாருன்னு என்னிடம் கேட்டார்...''

''நான் கேட்டால்.. உங்க தம்பியின் வொய்ஃப்ன்னு உன் தங்கை சொல்ல வேண்டியதுதானே சசி.. அதை விட்டு விட்டு ஏன் கருணாவின் பெயரைச் சொன்னாள்ன்னு கேளு சசி..''



''ஆமாமாம்.. உங்க தம்பி பெண்டாட்டிக்கு பேசவே தெரியாது. நீங்க எடுத்துக் கொடுங்க...''

அதுவரை சசிரேகாவை ஊடே வைத்து விளையாட்டாய் மோதிக் கொண்டிருந்த மாலினி.. நேரடியாய்ப் பேசி விடவும்.. பிரபாகரன் உற்சாகமாகிவிட்டான்.

''அது என்னவோ மாலினி.. நீ வரும்வரை சசிக்கு பேசவே தெரியாதுன்னுதான் நான் நினைத்துக் கொண்டிருந்தேன்..''

இதைக் கேட்டதும் சசிரேகாவிற்கு மிகவும் வெட்கமாகி விட்டது. அவள் சங்கடத்துடன் காரின் ஜன்னல் வழியாக வெளிப்புறமாய் பார்க்க ஆரம்பிக்க.. பிரபாகரன் காரின் முன்பக்க கண்ணாடி வழியாக மாலினியைப் பார்வையிட ஆரம்பித்தான். தற்செயலாய் விழி உயர்த்தி கண்ணாடியைப் பார்த்துவிட்ட மாலினி, கிளர்ச்சியடைந்தாள்.

'இவன் இவ்வளவு நேரமும் இந்த வேலையைத்தான் செய்தானா?'

தன் பார்வையை மாலினி கண்டுகொண்டு விட்டதை அறிந்ததும் பிரபாகரன் உற்சாகமாகிவிட்டான். மாலினி லேசாக விழியுயர்த்தி கண்ணாடியைப் பார்ப்பதும் அவன் பார்வையை விலக்காமல் இருப்பதைப் பார்த்ததும் அவசரமாய் தன் பார்வையைத் தாழ்த்திக் கொள்வதுமாக இருந்தாள்.

'இவன் ரோட்டைப் பார்த்துக் காரை ஓட்ட மாட்டானா..''

அழகான அந்த விளையாட்டு தொடர்ந்து கொண்டிருக்கையில் பிரபாகரன்.. மாலினியே எதிர்பார்க்காத வண்ணம் அந்தக் காரியத்தைச் செய்துவிட்டான். மறுமுறை

மாலினி அவனது விழி நோக்கியபோது லேசாக கண் சிமிட்டி விட்டான்.

'அடப்பாவி.. சசியை காரில் வைத்துக்கொண்டே என்னைப் பார்த்துக் கண்ணடிக்கிறானே.''

அவளுக்கு குப்பென்று முகம் சிவந்துவிட்டது. உட லெங்கும் ஒருவித பரபரப்பு பரவி ஓடியது. அவனுடைய சொந்தம் கலந்த அந்தச் செய்கையை மனதிற்குள் அவள் மிகவும் ரசித்தாள்.

'ரௌடி.. காதல் ரௌடி.. என்ன ஒரு அடாவடித் தனம்..'

அதற்கு மேல் விழியுயர்த்தி அவனைப் பார்க்க மாலினி யால் முடியவில்லை. அவளை வெட்கம் சூழ்ந்து கொண் டது. அதே சமயம் அவனைப் பார்க்காமல் இருக்கவும் மாலினியால் முடியவில்லை. தன்னையறியாமல் விழி யுயர்த்தி அவனைக் கள்ளப்பார்வை பார்த்தாள். அவளது பார்வைக்காக காத்திருந்ததைப் போல அவன் புருவம் உயர்த்தினான்.

'என்னமாய் சைட் அடிக்கிறான்... ராஸ்கல்..'

என்னவோ அவள் அமைதியாக இருப்பதைப் போல வும், பிரபாகரன் மட்டுமே அவளைப் பார்த்துக் கொண்டு வருவதைப் போலவும்.. நினைவு மனதிற்குள் ஓடவும்.. அவளுக்கே சிரிப்பு வந்துவிட்டது.

''என்ன சிரிக்கிறாய்?''

பிரபாகரன் மௌனத்தை கலைக்க, சசிரேகா கவனம் கலைந்தவளாக ஜன்னல் பக்கமிருந்து தன் பார்வையைத் திருப்பினாள். இனி பிரபாகரனின் பேச்சுக்கு பதில் சொல் லியே ஆக வேண்டும் என்பதை உணர்ந்த மாலினி.. வாய் திறந்தாள்.



''இல்லை அத்தான்.. வீட்டுக்குள் சாதுவாக எங்களைக் கடைத்தெருவிற்கு கூப்பிட்டுக் கொண்டு போவதாக சொல்லி அழைத்துக் கொண்டு வந்தவர், மார்த்தாண்டத்தை விட்டுக் கடத்திக் கொண்டு போகிறீங்களே.. அது எங்கேன்னு யோசித்தேன்.. சிரித்தேன்..''

மாலினி இப்படிச் சொல்லியவுடன் சசிரேகா பதறி விட்டாள்.

''மாலினி.. என்ன பேச்சு இது?''

''ஏண்டி.. ஏன் சிரிச்சேன்னு உன் பெரியத்தான் கேட்டதற்குத்தானே நான் பதில் சொன்னேன்..''

சசிரேகாவின் பதற்றத்தைக் கண்டு பிரபாகரன் அவளைத் திரும்பிப் பார்த்து சமாதானப்படுத்தும் விதத்தில் சிரித்தான்.

''இதையெல்லாம் நீ கண்டுகொள்ளாதே சசி..''

''ஆனாலும் பெரிய அத்தான்.. இவள் இப்படிப் பேச லாமா?''

''அடடா.. நாங்க இன்றைக்கு நேற்றா இப்படிப் பேசிக் கொள்கிறோம்.. உனக்குத்தான் தெரியுமே சசி.. இவளைப் பார்த்த முதல் நாளிலேயே என்னிடம் இவள் என்னமாய் வாயடித்தாள்?''

''அப்போது நீங்க யாருன்னு இவளுக்குத் தெரியாது. இப்போது அப்படியா?''

''அதனால் என்ன?''

''இல்லை... பெரியத்தான்..''

சசிரேகா மனத்தாங்கலுடன் வழக்கடித்துக் கொண டிருக்க.. மாலினியோ அவளை விசித்திரமாகப் பார்த்தாள்.

''அடடா.. அவர்தான் எங்களை கண்டுகொள்ளா தேன்னு சொல்கிறாரே. அப்புறமும் ஏண்டி அவரைக் கேள்விக் கேட்கிற?''

''என்னது.. பெரிய அத்தானை நான் கேள்வி கேட் கிறேனா.. ஐயையோ.. பெரிய அத்தான்.. இவள் சொல் வதையெல்லாம் காதிலேயே போட்டுக் கொள்ளாதீங்க. நான் உங்கள் முன்னால் நின்று பேசவே பயப்படுவேன்..''

''அதுதான் எனக்கே தெரியுமே. எனக்கே தெரிந் திருக்கும்போது அவருக்குத் தெரியாமல் போகுமா.. நீ அடங்கி உட்காரு..''

''எங்கே.. உனக்கு பெரியப்பா மகளாகப் பிறந்து விட்டு நான் நிம்மதியா காரில் உட்கார்ந்து வந்துவிட முடியுமா?''

சசிரேகா பரிதாபமாக இதைக் கேட்ட விதத்தில் பிரபாகரன் சிரித்தே விட்டான். லேசாகத் திரும்பி அவன் மாலினியைப் பார்த்த பார்வையில் அப்பட்டமான கேலி தெரிந்தது.

''ஏய்ய் வாலு.. நீ என்ன எங்க வீட்டு மருமகளை விரட்டி ஒரு வழி பண்ணணும்னே சென்னையை விட்டுக் கிளம்பி வந்தாயா?''

''யாரு? நான்.. உங்க வீட்டு மருமகளை மிரட்டி வைத்திருக்கிறேன்.. தோடா.. இதை யார் சொல்வதுன்னு ஒரு நியாயம் இல்லையா? உங்கள் பெயரைச் சொன்னாலே இவளும் சரி... மற்றவர்களும் சரி.. கிடுகிடுவென நடுங்கு கிறாங்க.. அப்படிப்பட்ட ஹிட்லர் என்னைப் பார்த்து பழி போடுகிறார்...''

'ஓகே... ஓகே... உன்னோடு பேசி என்னால் ஜெயிக்க முடியுமா.. இப்ப என்னதான் உனக்குப் பிரச்னை?''



''காரை நீங்க எங்கே விடறீங்கன்னு எனக்குத் தெரி யணும்..''

''நிச்சயமாய்.. கன்யாகுமரிக் கடலுக்குள் விடப் போவதில்லை..''

''ஆஹா.. எப்பேர்ப்பட்ட உத்தரவாதம். சசி.. நாம் நினைத்தது போல உன் பெரியத்தான் கடலுக்குள் காரை விடப் போவதில்லையாம்டி...'' என்று சசிரேகாவிடம் சொன்னாள் மாலினி.

சசி பதிலுக்கு மௌனமாய் ஒரு பார்வை பார்த்து வைத்தாள். 'உன்னிடம் போய் சொன்னேனே..' என்று தலையில் அடித்துக் கொண்டாள் மாலினி.

''தலை வலிக்கப் போகிறது..'' அக்கறையாய் கண்ணாடி வழியாகப் பார்த்துச் சொன்னான் பிரபாகரன்.

''என் தலை.. நான் அடித்துக் கொள்கிறேன்.. வலித் தால் எனக்குத்தானே வலிக்கும்?'' மாலினி விறைப்பாகச் சொன்னாள்.

இப்போது கன்யாகுமரிக்குள் கார் நுழைந்துவிட.. ஜன்னல் வழியாக கடைகளில் தெரிந்த பெயர்ப் பலகை யைப் படித்த மாலினி.. ஆச்சரியத்துடன்..

''சசி.. இது கன்யாகுமரிடி...'' என்று சொன்னாள்.

''அட.. ஆமாம்..'' நீண்ட நேரத்திற்குப் பின் முதன் முதலாக வாய் திறந்து பதிலைச் சொன்ன சசிரேகா..

''யாரைப் பார்த்து 'அட'ன்னு சொன்னாய் சசி.. உன் பெரிய அத்தானைப் பார்த்தா?'' என்று மாலினி வெடி குண்டைக் கொளுத்தி போடவும், அலறிவிட்டாள்.

''ஐயோ.. பெரிய அத்தான்.. நான் அப்படிச் சொல்ல வில்லை...'' கண்களில் நீர் தளும்பிவிட்டது சசிரேகாவிற்கு.

சசிரேகாவின் நிலையைப் பார்த்த பிரபாகரனுக்கு சிரிப்பு வந்துவிட்டது.

''உன் தங்கையைப் பற்றி என்னைவிட உனக்குத் தானே நன்றாகத் தெரியும் சசி. தெரிந்துகொண்டே அழலாமா.. நான் உன்னைத் தவறாக நினைத்துக் கொள்ள மாட்டேன்..'' என்று தம்பியின் மனைவியை ஆறுதல் படுத்தினான்.

கார் அந்த மிகப் பெரிய ஸ்டோரின் முன்னால் போய் நின்றது.



*உனக்காக வென்று.. நான்..*
*ஒப்பனைகள் செய்வதை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

சசியின் கண்ணீர் மறையாமல் இருக்க.. பிரபாகரனைக் கள்ளப் பார்வை பார்த்துக்கொண்டே சசிரேகாவைச் சமாதானப்படுத்த முனைந்தாள் மாலினி.

''அதுதான் உன் பெரிய அத்தானே பெரிய மனது பண்ணி உன்னைத் தவறாக நினைக்க மாட்டேன்னு சொல்லிட்டாரே. அப்புறமும் எதுக்குடி அழுவாச்சியாய் இருக்கிற. அடச்சீ.. கண்ணைத் துடை..''

''உன்னுடன் கிளம்பி வந்தேன் பார்.. என்னைச் சொல்ல வேண்டும்..'' சசிரேகா.. மாலினியை முறைத் தாள்.

''சசி.. வேறு யார் சொன்னாலும் நம்பலாம். மாலினி சொல்வதை நம்பி உன் மேல் கோபித்துக் கொள்வேனா..'' பிரபாகரன் வேண்டுமென்றே மாலினியைச் சீண்டினான்.

''அப்படியா.. அப்படி வேறு யார் சொன்னால் இவர் நம்புவாராம் சசி.. ஸ்வேதா சொல்வதையா?'' மாலினி சிரிக்காமல் வினவ.. மற்ற இருவரும் சிரித்து விட்டார்கள்.

''சீக்கிரமாய் ஷாப்பிங் பண்ணி முடிங்க. எனக்கு வேறு வேலை நிறைய இருக்கு..''

படிகளில் ஏறும்போது பிரபாகரன் கூற.. சசிரேகா ''ஆகட்டும்.. பெரிய அத்தான்..'' என்று தலையை ஆட்டினாள்.

''என்ன ஆகட்டும்.. அதெல்லாம் சீக்கிரமாய் பர்ச்சேஸ் பண்ண முடியாது. லேடீஸ் பர்ச்சேஸ் பண்ணினால் கொஞ்சம் முன்னே பின்னே ஆகத்தானே செய்யும். இதை யெல்லாம் பெண்களுடன் துணைக்கு கிளம்புவதற்கு முன்னாலேயே யோசித்திருக்க வேண்டும்..'' மாலினி கறாராய் கூறினாள்.

''அப்படின்னா.. சரி.. நாம் மெதுவாக ஆற அமர பர்ச்சேஸ் பண்ணிவிட்டு நிதானமாக ராத்திரி பன்னிரண்டு மணிக்கு வீட்டுக்குப் போய் கொள்ளலாம். காயத்ரிக்கு சும்மா தலைவாரிப் பின்னலிட்டு பூ வைத்து பொட்டு வைத்து மாப்பிள்ளை வீட்டுக்காரங்க கண்ணில் காட்டும்படி அம்மாவுக்கு போன் போட்டு சொல்லி விடுகிறேன்..'' பிரபாகரன் செல்போனைக் கையில் எடுத்தான்.

''வேண்டாம்.. வேண்டாம்..'' மாலினி போனைப் பறித்துக் கொண்டாள்.

''நீதானே பர்ச்சேஸ் பண்ண லேட்டாகும்னு சொன்ன?''

''நானா.. எப்போது சொன்னேன்?''

''இதைப் பாருடா.. லேடீஸ் பர்ச்சேஸ் பண்ணினால் முன்னே பின்னேதான் ஆகும்னு சொன்னது யார்?''

''அது ஸ்வேதா போன்ற பெண்கள் பர்ச்சேஸ் பண்ணு வதைப் பற்றிச் சொன்னது. நான் அப்படிச் சொல்ல வில்லையே.. ஏண்டி சசி.. நீயேதும் அப்படி வாய்விட் டாயா?''

சசிரேகா அனல் பார்வையொன்றைப் பார்க்க...

''சரி.. சரி.. நீயேன் இப்படிக் கொதிக்கிற. கூல்... கூல்..'' என்று அவளை அமைதிப்படுத்தினாள் மாலினி.

பெண்களின் ஒப்பனைப் பொருள்கள் விற்கும் பகுதிக்குப் போனவுடன் மாலினி சுறுசுறுப்பாக செயல் பட்டாள்.

கடையின் விற்பனைப் பெண்ணிடம் அவள் ஏதேதோ பொருள்களின் பெயரைச் சொல்வதையும் அவர்கள் எடுத்துக் கொடுப்பதை ஆராய்ச்சியுடன் பார்த்து பல கேள்விகளைக் கேட்பதையும் பார்த்துக் கொண்டிருந்த பிரபாகரனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

அந்த ஆச்சரியத்தை வாய்விட்டு கேட்டும் விட்டான்.

''ஏன் சசி.. உன் தங்கை மேக் அப் பண்ணிக் கொள் ளாமல் கேஷுவலாய் இருப்பவள்.. அவளுக்கு எப்படி இதெல்லாம் தெரிகிறது?''

''எல்லாவற்றையும் தெரிந்து வைத்துக் கொள்ள வேண்டுமென்ற ஓர் ஆர்வம்தான்னு சொல்லு சசி..''

''ஏன்.. உனக்கு வாயில்லையா.. நீயே நேரடியாய் என்னிடம் சொல்ல வேண்டியதுதானே..''

''எனக்கு வாயில்லை.. நான் வாயில்லாப்பூச்சின்னு சொன்னால்... நீங்க நம்பி விடுவீங்களா?''



''இப்போதுதான் பிறந்திருக்கும் குழந்தைகூட அதை நம்பாது..''

''தெரிந்துகொண்டே எதற்காக கேள்வி கேட்கறீங்க?''

''தெரியாமல் கேட்டுவிட்டேன்..''

''இல்லை.. தெரிந்து கொண்டுதான் கேட்டீங்க..''

''எதுவோ ஒன்று.. இப்போது எதற்காக சசியை ஊடே வைக்கிறாய்?''

''நானா வைத்தேன்.. நீங்கதானே நான் என்னவோ ஏழு கடல் ஏழு மலை தாண்டி அந்தப் பக்கமாய் இருக் கிறதைப் போல சசியிடம் கேட்டுக்கிட்டு இருந்தீங்க..''

அவர்கள் இருவரும் பேசிக்கொள்வதை மெலிதான ஆச்சரியத்துடன் கவனித்துக் கொண்டிருந்தாள் சசிரேகா. பிரபாகரன் யாருடனும் இவ்வளவு இயல்பாகப் பேசக்கூடி யவன் அல்ல.. நர்மதாவிடமே அவன் அளவாகத்தான் பேசுவான்.

அப்படிப்பட்டவன் இவ்வளவு எளிமையாக அவர் களுக்கு காரோட்டிக் கொண்டு துணையாக வந்ததுமில் லாமல் அவர்களுடன் சரிசமமாக நின்று பேசுவது அவளுக்கு கனவு போலவே இருந்தது.

ஒரு விஷயத்தை சசிரேகா மிகத் தெளிவாக உணர்ந் தாள். அது.. பிரபாகரனுக்கும் மாலினிக்கும் இடையில் ஓடிய மெல்லிய காதல் உணர்வு.

பிரபாகரனைப் பார்க்கும்போது மாலினியின் முகத்தில் ரகசியப் புன்னகை மலர்ந்தது. மாலினியைப் பார்க்கும் பிரபாகரனின் முகத்தில் பல்ப் தெரிந்தது. அவர்களது பேச்சில் அந்நியோன்யம் கலந்த கிண்டலும் கேலியும் வெளிப்பட்டது.

இதை சசிரேகா எதிர்பார்த்திருக்கவில்லை. சிறு வயது முதல் அவளுக்குப் பிடித்தமான நெருக்கமான தோழியாக மாலினியைத்தான் அவள் நினைத்து வந்தாள். கோடை விடுமுறைகளை சென்னையில் மாலினியின் வீட்டில்தான் அவள் கழிப்பாள். சசிரேகாவிற்கும் மாலினிக்கும் இடையே அழகான பாசம் கலந்த ஆழமான நட்புப் பிணைப்பு உண்டு.

அந்தக் காரணத்தினால்தான் தனக்காக என்று எதையும் வாய் திறந்து கேட்காத சசிரேகா.. தன் சித்தப்பா மகளைத் தன் வீட்டில் தங்கி வேலை பார்த்துக் கொள்ள அனுமதியை கணவனிடம் கேட்டாள்.

மாலினி வந்த பின்னால் சசிரேகாவிடம் தெரிந்த மலர்ச்சியை கண்ட கருணாகரன்கூட விளையாட்டாய்..

''பேசாமல்.. மாலினியை இந்த வீட்டிலேயே இருக்க வைத்துவிடு சசி.. அப்போதுதான் நீ சிரித்த முகத்துடன் இருப்பாய்..'' என்று கூறினான்.

கணவன் சொன்ன சொல்.. உண்மையாகிவிடுமோ என்று அந்தக் கணத்தில் சசிரேகாவின் மனதில் தோன்றியது.

''போகலாமா?''

வாங்க வேண்டிய பொருள்களை வாங்கி முடித்த மாலினி வினவவும்.. பிரபாகரன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான்.

''கிரேட்.. பதினைந்தே நிமிடங்களில் பர்ச்சேஸை முடித்து விட்டாயே..''

''இதில் என் பக்க கிரெடிட் எதுவுமே இல்லை. நான் கேட்டதெல்லாம் கிடைக்கும் கடைக்கு கூப்பிட்டுக் கொண்டு வந்த உங்களுக்குத்தான் அத்தனை கிரெடிட்டும் வந்து சேர வேண்டும்..''



''மார்த்தாண்டம் டவுன்தான். அதைவிடப் பெரிய சிட்டி கன்யாகுமரி. இங்கே கிடைக்காத பொருள் கிடையாது! அதனால்தான் உன்னை இங்கே கடத்திக் கொண்டு வந்தேன்...''

பிரபாகரனின் கண்களில் தெரிந்த ஏதோ ஒன்றை இனம் கண்டுகொண்டவளாக ரகசியப் பார்வை ஒன்றை அவன் பக்கம் வீசினாள் மாலினி.

''ஏன்.. சசியும்தானே வந்தாள்.. அவளை நீங்கள் கடத்தவில்லையா?''

''அவள் எங்கள் வீட்டு மகாலட்சுமி..''

''நான்.. ஊரார் வீட்டு மகாலட்சுமியாக்கும்?''

கேள்வியைக் கேட்டவளும் அதைக் கேட்டுக் கொண்டவனும் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

''வேலை முடிஞ்சாச்சு.. இனி அடுத்து என்ன?'' பிரபாகரன் காரில் ஏறியவாறே கேட்டான்.

''வேறென்ன அத்தான்.. உங்க மார்த்தாண்டபுரத்து அரண்மனைக்கு காரைவிட வேண்டியதுதானே..'' மாலினி வாங்கிய பொருள்களைச் சரிபார்த்துக் கொண்டே பதில் சொன்னாள்.

''அது சரி.. செவிக்கு உணவில்லாதபோது வயிற்றுக்கு கொஞ்சம் ஈயச் சொல்லி இருக்கிறார்கள். நீதான் லொடலொடன்னு பேசி செவிக்கு உணவைக் கொடுத்துக் கொண்டே வந்தாயே.. அப்புறம் வயிற்றைப் பற்றி உனக்கெங்கே நினைவிருக்கப் போகிறது..'' பிரபாகரன் காரை ஓட்டிக் கொண்டே பேசினான்.

''உன் பெரிய அத்தான் பேசுவதைக் கேட்டாயா சசி.. நான்தான் பேசிக்கொண்டே வந்தேனாம்.. சார் வாயைத்

திறக்காமல் மௌனச் சாமியார் போல வந்தாராம். இந்தப் பொய்யை வேறு எங்கேயாவது கேட்டிருக்கிறாயா?''

மாலினி கேட்க.. சசிரேகா.. ஃபெவிகாலைப் போட்டு வாயை ஒட்டிக் கொண்டதைப் போல இதழ் பிரிக்காமல் வெளியே வேடிக்கைப் பார்த்தாள்.

''ஏண்டி சசி.. உன்கிட்டேதாண்டி பேசிக்கிட்டு இருக்கேன்..''

''.....''

மாலினி, சசிரேகாவை முறைப்பதை கண்ணாடி வழியே பார்த்த பிரபாகரன் சிரித்தான்.

''என்ன ஆச்சு.. தனக்குத்தானே பேசிக்கிட்டு வருகிற?''

''ஏன் சொல்லமாட்டீங்க.. நீங்க பக்கத்தில் இருந்தால் தான் உங்க வீட்டு மகாலட்சுமிக்கு நான் பேசினால் காது கேட்கமாட்டேன் என்கிறதே..''

''அப்படியா சசி?''

''இல்லை.. பெரியத்தான்..''

''அடிப்பாவி.. நான் கேட்டால் பதில் சொல்ல மாட்டாய். அதுவே உன் மச்சினர் கேட்டால் உடனே பதில் சொல்லுவாய். எந்த ஊர் நியாயம்டி இது?''

சசிரேகா மௌனித்துவிட... பிரபாகரனே மாலினியின் கேள்விக்குப் பதில் சொன்னான்.

''எங்க ஊர் நியாயம் இதுதான்..''

''இப்படிப் பாரபட்சமான நியாயம்தான் உங்க ஊர் நியாயமா?''

''நீ என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொள். ஆனால்.. என்னைச் சாமியார்னு மட்டும் சொல்லாதே...''



''ஏனாம்?''

''ஏன்னா.. எனக்குச் சாமியாராகப் போகும் ஆசை இல்லை...''

கடலோரமாக இருந்த அந்த ஐஸ்க்ரீம் பார்லருக்கு அருகே காரை நிறுத்திய பிரபாகரன்.

''இறங்குங்க..'' என்றான்..

''என்னடி சசி இது.. ஐஸ்க்ரீம் பார்லர் போல இருக்கு..''

''ஐஸ்க்ரீம் பார்லர் போல இல்லை.. ஐஸ்க்ரீம் பார்லரே தான்..''

''அப்பாடி! ஒரு வழியாய் மௌனவிரதத்தை கலைத் தாயே...''

''அதை நான் கன்டினியூ பண்ணாமலிருப்பது உன் கையில்தான் இருக்கிறது...''

''டிரை பண்ணுகிறேன். ஆமாம்.. உன் பெரியத்தான் எதுக்கு நமக்கு ஐஸ்க்ரீம் வாங்கிக் கொடுத்து கணக்குப் பண்ணப் பார்க்கிறார்?''

சசிரேகாவிற்கு கண்மண் தெரியாமல் கோபம் வந்து விட்டது. அவள் மாலினியின் முதுகில் ஒரு போடு போட்டாள்.

''ஏண்டி பிசாசே.. அடிக்கிற?''

''உன்னை அடிப்பதோடு நிறுத்திக் கொள்ளக்கூடாது. தூக்கிக் கடலில் போட வேண்டும். நீ வாயைத் திறந் தாலே வம்புதாண்டி. எதைப் பேசுவது.. எதைப் பேசக்கூடா துன்னு உனக்கு கணக்கே இல்லையா?''

''ஏண்டி.. நீ மட்டும் இப்ப கணக்கைப் பத்திப் பேச லாமா.. உனக்கு ஒரு நியாயம்.. எனக்கொரு நியாயமா?''

இப்படிக் கேட்டவளிடம் எப்படிப் பதில் சொல்வது என்று தெரியாமல் திருதிருவென்று விழித்தாள் சசிரேகா.

''அம்மா.. கணிதமேதை ராமானுஜத்தின் மறுபிறவியே.. உன் பெரியப்பா மகளுக்கு இந்தக் கணக்கைப் பற்றியெல்லாம் ஒன்றும் தெரியாது. அவளை விட்டுவிடு. பிழைத்துப் போகட்டும். பாவம்..'' கிண்டலாகச் சொன்னான் பிரபாகரன்.

''இவளுக்கா கணக்குப் பண்ணத் தெரியாது.. அப்புறம் எப்படி கருணா அத்தானை கணக்குப் பண்ணினாள்?'' என்று மாலினி சந்தேகம் கேட்க...

''பெரியத்தான்.. எனக்கு ஐஸ்க்ரீம் வேண்டாம்.. நான் போகிறேன்..'' என்று கடலை நோக்கி நடக்க ஆரம்பித்து விட்டாள் சசிரேகா.



*உன் கண் வீச்சில்.. என்னை..*
*கட்டிப் போட்ட பொழுதை..*
*என்னவென்று நான் சொல்ல..?*

கண்ணாடிச் சுவருக்கு அப்பால் தெரிந்த கடலின் அழகில் தன் மனதைப் பறிகொடுத்தாள் மாலினி. கடலின் அலைகளை ரசித்தபடி தன் முன்னாலிருந்த ஐஸ்க்ரீமை சுவைத்துக் கொண்டிருந்தவளைப் பார்க்கும்போது அமைதியின் வடிவமாக இருக்கும் இவளா.. வாயைத் திறந்தால் வெடிகுண்டை வெடிக்க வைக்கிறாள் என்று பிரபாகரன் மனதிற்குள் ஆச்சரியப்பட்டுப் போனான்.

சற்று முன்னால் சசிரேகாவை சமாளித்து.. ஐஸ்க்ரீம் பார்லருக்குள் அழைத்துக் கொண்டு வருவதற்குள் பிரபாகரனுக்கு போதும் போதும் என்று ஆகிவிட்டது. அது இவளுக்கு நினைவே இல்லையா என்ன?



''வேண்டாம் பெரியத்தான்.. இவள் வாயைத் திறக்காமல் இருக்க மாட்டாள்..''

''அதுதான் இந்த ஊருக்கே தெரியுமே. அப்படியிருக்கும்போது நீ கோபித்து என்ன ஆகப் போகிறது?''

''இவள் பேசுவதைக் கேட்க என்னால் முடியாது...''

''ஓகே.. அந்தக் கடையில் பஞ்சு வாங்கித் தருகிறேன். காதில் அடைத்துக் கொள்..''

''நீங்களும் என்னைக் கேலி செய்கிறீங்களே பெரியத்தான்..''

''சேச்சே.. நான் அப்படிச் செய்வேனா.. பாரும்மா.. நாம் காலாகாலத்தில் ஐஸ்க்ரீமை காலி பண்ணிவிட்டு வீட்டுக்குப் போய் சேர்ந்தால்தான் மேற்கொண்டு வேலை நடக்கும்.. நம் காயத்ரியைப் பெண்பார்க்க வருகிறாங்க. நீதான் வீட்டு மருமகள். நீ பக்கத்திலிருந்து அவளைப் பார்த்துக் கொள்ள வேண்டாமா?''

ஒருவழியாய் சசிரேகா சமாதானமடைந்து.. ''வாடி.. போகலாம்..'' என்று அழைத்தவாறு திரும்பிப் பார்த்தாள்.

மாலினியைக் காணவில்லை.

''ஐயோ.. பெரியத்தான்! மாலினியைக் காணோமே...'' சசிரேகா பதற்றத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தாள்..

''பொறு சசி.. அவள் எங்கேயும் போயிருக்க மாட்டாள். இங்கேதான் எங்கேயாவது இருப்பாள்..''

''தெரியாத ஊரில் அவள் எங்கே போவாள் பெரியத்தான்.. என்னை நம்பி சித்தப்பா வீட்டில் அனுப்பினாங்களே.. அவளை பத்திரமாய் பார்த்துக்க சசின்னு தினமும் சித்தி எனக்குப் போன் பண்ணுகிறாங்களே.. அவங்களுக்கு நான் என்ன பதிலைச் சொல்லுவேன்..''

பிரபாகரனுக்கு சசிரேகாவின் புலம்பலைக் கேட்க வேடிக்கையாக இருந்தது.

''ஏன் சசி.. இப்படிப் பயப்படுகிறாய்.. அவள் என்ன சின்னக் குழந்தையா? இது டூரிஸ்ட் ஸ்பாட்.. கடலைப் பார்க்க ஆசையாக இருந்திருக்கும். கடலோரமாக நடந்து விட்டு வரலாமுன்னு போயிருக்கலாமில்லையா?''

''உங்களுக்கு அவளுடைய கோபத்தைப் பற்றித் தெரியாது பெரியத்தான்..'' சசி அங்கலாய்க்க..

'எனக்கா தெரியாது?' என்று நினைத்துக் கொண்டான் பிரபாகரன்.

''அவளுக்கு கோபமும் ரோஷமும் அதிகம் பெரியத்தான்..''

''ஆளைப் பார்த்தாலே தெரிகிறதே...''

''வேண்டாமென்று விலகி விட்டால்.. அப்புறம் நாம் எவ்வளவு கெஞ்சினாலும் அவள் நம்மைத் திரும்பிக்கூடப் பார்க்க மாட்டாள்..''

பிரபாகரனுக்கு ஏனோ அந்த வார்த்தைகளைக் கேட்டதும் மனம் துணுக்குற்றது.

''இப்போது அவள்பாட்டுக்கு கோபித்துக் கொண்டு சென்னைக்குப் பெட்டியைக் கட்டிவிட்டால்.. அப்புறம் ஆயுளுக்கும் என்கூட முகம் கொடுத்துப் பேச மாட்டாள்..''

சசிரேகா பதறிக் கொண்டிருக்க.. தற்செயலாக ஐஸ்க்ரீம் பார்லருக்குள் திரும்பிப் பார்த்த பிரபாகரனுக்கு சிரிப்பு வந்துவிட்டது.

''அங்கே பார்த்தாயா.. சசி..''

பிரபாகரன் சுட்டிக்காட்டிய திசைப் பக்கம் திரும்பிப் பார்த்த சசிரேகா திகைத்துப் போனாள்.



விச்ராந்தியாய் ஒரு மூலையில் அமர்ந்து ஐஸ்க்ரீமை சாப்பிட்டபடி கடலின் அழகை ரசித்துக் கொண்டிருந்தாள் மாலினி.

சசிரேகா கோபத்துடன் அவளருகே சென்று மீண்டும் முதுகில் ஒரு அடியை வைத்தாள்.

''ஏண்டி சசி.. உன் வீட்டில் சாப்பிட்ட சாப்பாடு உடம்பில் சேருவதற்கு முன்னால் அதைக் கரைத்துவிடணும்னு திட்டம் போட்டு அடி கொடுக்கிறாயா?''

''பேசாதேடி பிசாசே..''

''எனக்கும் பேசுகிற மூடு இப்போது இல்லை. அங்கே கடலைப் பாரேன்.. ஹெள நைஸ்?''

மாலினி குழந்தை போல் கண்களை விரித்துக் கொண்டு கடலை ரசிக்க ஆரம்பிக்க.. சசிரேகாவிற்கு சிரிப்பு வந்தது.

''உன்னை... போடி இவளே..''

ஒன்றுவிட்ட அந்தச் சகோதரிகள் இருவரும் சமாதான மாகி ஐஸ்க்ரீமை சாப்பிட ஆரம்பித்தனர்.

''சென்னையில் கடல் இல்லையா?'' என்று விசாரித் தான் பிரபாகரன்.

மாலினி அவனை மிதப்பாக ஒரு பார்வை பார்த்தாள்.. ''எங்க ஊரில் இருக்கிற மெரீனா பீச்சின் அழகைப் பத்தி இந்த உலகமே பேசுமே...''

''ஓஹோ.. அப்புறம் எதுக்கு அம்மணி.. இந்தக் கடலை இப்படிக் காணாததைக் கண்டது போல் ரசிக்கறீங்களாம்?''

''வேறு என்ன அத்தான் செய்வது.. நாள் பூராவும் மெஷின்களைப் பார்த்துவிட்டு வருகிற மெக்கானிக்கல் இன்ஜினீயர் நான். கண்ணுக்கு குளிர்ச்சியா பச்சக்குன்னு ஏதாவது இயற்கைக் காட்சியைப் பார்த்தால்தான் என்

சூடேறிய மூளை குளிர்ச்சியாகும். எங்கே எனக்கு அதுக்கு கொடுத்து வைக்கிறதா.. வேலையை முடித்து வீட்டுக்கு வந்தால் ஸ்வேதாவின் முகத்தில்தான் விழிக்கணும்னு எனக்கு விதிச்சிருக்கு. இன்றைக்கு எந்த சாமி புண்ணியமோ.. கடலைப் பார்க்க எனக்கு கொடுத்து வச்சிருக்கு.. உங்களுக்கு அது பொறுக்கலையா?''

மாலினி வெகு தீவிரமாக முகத்தை வைத்துக் கொண்டு பேச.. பிரபாகரன் அவளை நேராகப் பார்த்து கேட்டான்.

''போனதையெல்லாம் விடு.. இனி வாரா வாரம் உன்னை ஏதாவது ஒரு பிக்னிக் ஸ்பாட்டுக்கு கூப்பிட்டுக் கொண்டு போகிறேன்.. வருகிறாயா?''

''ஓயெஸ்.. ஸ்வேதாவிடமிருந்து தப்பித்து வெளியே வருவதற்கு யாராவது மாட்டேன்னு சொல்வாங்களா?''

''நீயென்ன.. வந்த இடத்தில்கூட ஸ்வேதாவை மறக்க மாட்டேன்கிற.. அவள் மேல் அவ்வளவு பிரியமா?''

''அவ்வளவு வெறுப்பு...''

''பிரியமாக இருக்கிறவங்களைத்தானே நாம அதிகம் நினைப்போம்..''

''அது உங்க கணக்கு..''

''இதோ பார் மாலினி.. கணக்கைப் பற்றி நீ பேசப் போய்த்தானே உனக்கும் சசிரேகாவிற்கும் சண்டையே வந்தது. இன்னும் நீ கணக்கை விடவில்லையா...''

''அதை விடுவதைப் பற்றி அப்புறமாய் நான் யோசிக்கிறேன். இப்ப இதைக் கேளுங்க..''

''நீ சொல்லி கேட்காமலிருக்க முடியுமா.. சொல்லு தாயே?''

''கிருஷ்ணனிடம் ஒரு சமயம் அர்ஜுனன் கேட்டாராம். 'கிருஷ்ணா.. உன்னை அதிகமாய் நினைப்பது நான்தானே..'ன்னு. அதற்கு கிருஷ்ணன் 'இல்லை'ன்னு சொன்னாராம். உடனே அர்ஜுனன்.. 'என்னைவிட அதிகமாக உன் பெயரை மனதில் நினைப்பது யாரு'ன்னு கேட்டாராம். கிருஷ்ணன் யார் பெயரைச் சொல்லியிருப்பாருன்னு நீங்க நினைக்கறீங்க?''

''நாரதர் பெயரைச் சொன்னாரா?''

''ஊஹூம்.. துரியோதனன் பெயரைச் சொன்னாராம்..''

''என்னது?''

பிரபாகரன் ஆச்சரியத்துடன் வினவியவாறு சசிரேகாவைப் பார்த்தான். அவனது ஆச்சரியத்திற்கு கொஞ்சம் கூட குறையாத ஆச்சரியத்தை தன் கண்களில் பிரதிபலித்தாள் சசிரேகா.

''ஆமாம் அத்தான்.. தூக்கத்தில்கூட அவன் கிருஷ்ணனை மறந்ததில்லையாம். இப்போ சொல்லுங்க.. துரியோதனனுக்கு கிருஷ்ணனின் மேல் இருந்தது என்ன?''

''நிச்சயமாக பிரியமாக அது இருந்திருக்காது..''

''அதுவேதான் ஸ்வேதாவின் மேல் எனக்கிருப்பதும்...''

அவர்கள் திரும்பி வந்தபோதும் மாலினி.. சலசலத்துக் கொண்டுதான் வந்தாள். ஆனால்.. பிரபாகரன் அவளிடம் வம்புக்கு வரவில்லை. சசிரேகாவுடன் அவளை பேச விட்டு விட்டு மௌனமாக கண்ணாடி வழியாக அவளைப் பார்த்துக் கொண்டே வந்தான்.

''இவள் என்ன மாதிரியான பெண்!''

நினைக்க நினைக்க அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. கொட்டுகிற அருவி போல உற்சாகமாக ஆர்ப்பரிக்கும் இவளிடம் ஆழமான பல தன்மைகள் இருக்கின்றன என்று அவன் நினைத்துக் கொண்டான்.

அதுதான் அவனை அவள் பக்கம் ஈர்க்கிறது. அவளது பேச்சும் சிரிப்பும் பழகும் விதமும் காணக் கிடைக்காதவை என்று அவனுக்கு தோன்ற வைக்கிறது.

இவள் மனுஷியல்ல.. 'யக்ஷிணி...' என்று அவன் நினைத்துக் கொண்டான்.. ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு வடிவில் காட்சி தரும் யக்ஷிணி.

சசிரேகாவிடம் பேசிக்கொண்டே கண்ணாடியை ரகசியப் பார்வை பார்த்தாள் மாலினி. அவனது பார்வையைச் சந்தித்ததும் அவள் முகம் சிவந்ததை அவன் ரசித்தான்.

அவளுக்குள் காதல் பொங்குவதை அவனால் உணர முடிந்தது. அதை அள்ளிப் பருக அவன் மனம் துடித்தான். அந்தக் காதலை நுகரத் தவித்தான்.

மார்த்தாண்டத்தில் அவர்களது கார் நுழைந்தது. வீட்டு போர்டிகோவில் கார் நின்றதுமே ஸ்வேதா வேகமாக வந்து எட்டிப் பார்த்தாள்.

''வாசலிலேயே காவல் காக்கிறா பாரேன்.. போன பிறவியில் இவள் வாட்ச்வுமனாக பிறந்திருப்பாளோ..'' சசிரேகா சந்தேகம் கேட்டாள்.

''இந்தப் பிறவியிலும் அதே கதைதான்..'' என்றாள் மாலினி.

''எதே கதை?''

''அதுதான்.. வாட்ச்வுமன்..''

''புரியவில்லை..''

''உன் மரமண்டைக்கு எதுதான் புரிந்தது.. மத்தவங்களை வாட்ச் பண்ணிக்கிட்டே அலைகிற வுமனை என்னன்னு சொல்லுவோம்?''

''வாட்ச் வுமன்..! வாவ்..''



அவர்கள் இருவரும் கிசுகிசுத்தவாறே படியில் ஏற.. அவர்களை துச்சமாக பார்த்தபடி படிகளில் இறங்கி.. பிரபாகரனின் அருகே ஓடினாள் ஸ்வேதா.

''என்ன அத்தான்.. காரை விட்டு இறங்கிட்டீங்க?''

''இறங்காமல்.. அதிலேயே குடியிருக்கச் சொல்கிறாயா?''

''அதில்லை அத்தான்.. காயத்ரிக்கு ஹேர் பேண்ட் வாங்கணும்.. அதுக்கு கடைக்குப் போகிறதுக்காக நான் வெயிட் பண்ணிக்கிட்டு இருக்கேன்..''

''அதுக்காக வெயிட் பண்ணுவானேன்.. தெருமுனையில் இருக்கும் ஸ்டோரில் வாங்கிக் கொண்டு வர வேண்டியதுதானே..''

பிரபாகரன் இலகுவாக கூறிவிட்டு உள்ளே சென்றுவிட.. தங்களுக்குள் வேறு எதையோ கிசுகிசுத்துக் கொண்டிருந்த மாலினியும் சசிரேகாவும் கலகலத்து சிரித்தார்கள்.

அதைத் திரும்பிப் பார்த்த ஸ்வேதாவின் விழிகளில் வெஞ்சினம் தோன்றியது.

'சிரிங்கடி... சிரிங்க.. உங்க சிரிப்பு எத்தனை நாளைக்கு நிலைச்சிருக்கும்னு நானும் பார்க்கிறேன்..'



*உன் இதழ் உதிர்க்கும் ஒரு வார்த்தையில்*
*என் உயிர் குடியிருக்கும் நிலையை..*
*என்னவென்று நான் சொல்ல...?*

காயத்ரியைக் கவனமாக அலங்கரித்துக் கொண்டிருந்தாள் மாலினி. அவளுக்கு உதவி செய்து கொண்டிருந்தாள் சசிரேகா. சற்று நேரம் கழித்து மருமகளிடம்

எதையோ கேட்டபடி அங்கு வந்த நர்மதா.. மகளைக் கண்டதும் பிரமித்து விட்டாள்.

துளிக்கூட ஒப்பனையின் சாயல் முகத்தில் இல்லாமல் இயற்கையான வனப்பை உணர்த்தியவாறு வானுலகில் இருந்து இறங்கி வந்த தேவதையைப் போல நின்றுகொண் டிருந்தாள் காயத்ரி.

ஒப்பனைப் பெண்களின் துணை இல்லாமலேயே அவர்களைவிடச் சிறப்பாக மகளைத் தயார் செய்திருந்த மாலினியை அன்புடன் நோக்கினாள் நர்மதா.

''உனக்குத் தெரியாத விஷயமே கிடையாதா மாலினி..'' நர்மதா பாராட்டுதலாகக் கூறவும்.. மாலினி தன்னடக்கத்துடன் பதில் சொன்னாள்.

''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை அத்தை...''

''எதை ஒன்றுமில்லைன்னு சொல்கிற.. நேற்று ராத்திரி என்னடான்னா அவ்வளவு அழகாக ரங்கோலிக் கோலங்களைப் போட்டிருக்கிற.. இன்றைக்கு என்னடான்னா காயத்ரிக்கு தேவையானதை வாங்கிக் கொண்டு வந்து அழகாய் அழகுபடுத்தியிருக்கே..''

மாலினி என்ன சொல்வது என்று தெரியாமல் சிரித்து வைக்க.. அங்கே வந்து எட்டிப் பார்த்த ஸ்வேதாவிற்கு அந்தக் காட்சியைக் காணச் சகிக்கவில்லை.

''அது என்ன அத்தை.. அழகாய் அழகுபடுத்துவது?'' என்று பொறாமையுடன் கேட்டு வைத்தாள்.

''மேக்-அப் பண்ணிக் கொண்டிருப்பதே தெரியாமல் மேக்-அப் பண்ணிக் கொள்வதைத்தான் அப்படிச் சொன் னேன். சில பேர் உதட்டுக்குச் சாயம் போட்டு இமைகளில் மங்காரா போட்டுன்னு கோரமாய் நிற்பாங்க. அதுபோல இல்லாமல் அமைதியான முறையில் அழகுபடுத்திக் கொண்டிருப்பதைத்தான் அப்படிச் சொன்னேன்..''



நர்மதாவின் பார்வையில் தெரிந்த செய்தியை ஸ்வேதா புரிந்துகொண்டாள். உதட்டுக்கு பளீரிடும் நிறங்களில் லிப்ஸ்டிக் போட்டு இமைகளுக்கு மங்காரா போட்டுக் கொள்வது அவளின் வழக்கம். அன்றும் அதேபோல நின்ற வளைப் பார்த்து அசூசை கண்களில் தெரிய.. வெறுப்புடன் நர்மதா சொல்லவும்.. ஸ்வேதா அவசரமாய் ஏதோ வேலை யிருப்பதைப் போல அங்கேயிருந்து ஓடிவிட்டாள்.

மாலினியைப் பார்த்து அன்பாக புன்னகைத்துவிட்டு நர்மதாவும் சென்றுவிட.. காயத்ரிக்கு ஒப்பனையில் ஏதும் குறைவைத்து விட்டோமா என்று ஒருமுறை சரிபார்த்து விட்டு..

''ஓகே. காயத்ரி.. நானும் போய் டிரஸ் சேன்ஜ் பண்ணி விட்டு வருகிறேன்.. நீ ஏ.ஸி. ரூமிலேயே இரு. வெளியே வர வேண்டாம்..'' என்று கூறினாள் மாலினி.

காயத்ரி சம்மதமாய் தலையசைக்க.. சசிரேகாவும் மாலினியும் அறையை விட்டு வெளியே வந்தார்கள். வாசலில் கார்கள் வந்து நிற்கும் சப்தம் கேட்டு வெளியே எட்டிப் பார்த்தாள் சசிரேகா.

''மாப்பிள்ளை வீட்டுக்காரங்களா சசி?'' மாலினி வினவினாள்.

''இல்லையில்லை... இவங்க வேற சொந்தக்காரங்க. ஆனா.. இவங்களும் நமக்கு நெருங்கிய சொந்தக்காரங்க தான்...''

சசிரேகா என்னவோ இயல்பாகத்தான் இதைச் சொன் னாள். ஆனால், அதைக் கேட்டுக் கொண்டே மாடிப்படி களில் இறங்கிக் கொண்டிருந்த ஸ்வேதாவின் முகத்தில் ஏளனம் தெரிந்தது.

''என்ன சசிரேகா... அந்தப் பெண்ணிடம் போய் நம்ம சொந்தம்கிற. வந்திருக்கிறவங்க என் வீட்டைச்

சேர்ந்தவங்க. என் அப்பா.. பெரியப்பா.. சித்தப்பா... குடும்பத்து ஆளுங்க. அவங்க உங்க ரெண்டு பேருக்கும் சொந்தமா? நீயாவது அடிக்கிற காத்தில் குப்பைமேட்டி லிருந்து பறந்து போய் கோபுரத்தில் ஒட்டிக் கொண்ட காகிதம். என் கருணா அத்தானை வளைத்துப் போட்டு கழுத்தை நீட்டிட்ட. இவள் யார்?''

மாலினி வாசல் பக்கம் பார்த்தாள். வந்திருந்த உறவினர் களை நர்மதா வரவேற்றுக் கொண்டிருக்க.. அவர்கள் அங்கேயே அவளுக்குப் பதில் சொல்லிக் கொண்டு தேங்கி நின்றனர். மாலினி பார்வையைத் திருப்பி ஸ்வேதாவைப் பார்த்தாள்.

''நான் யாருங்கிறது இருக்கட்டும். முதலில் நீ யார்? கல்யாணமாகாத பெண். எங்க சசியின் கணவரைப் போய் 'என் கருணா..'ங்கறயே. உனக்கு கொஞ்சம்கூட வெட்க மாக இல்லையா. இப்படியா.. அடுத்தவளின் கணவனின் மேல் உரிமை கொண்டாடுவாய்?''

''மாலினி..''

''உஷ்.. கத்தாதே. ஏற்கெனவே உனக்கு நான் வார்ன் பண்ணியிருக்கிறேன். அதிகமாய் ஆடாதேன்னு. நீ அடங்க மாட்டேன்கிறாய். நீயாய் அடங்கிவிடு. நான் அடக்கினால் நீ தாங்க மாட்டாய்..''

''எவ்வளவு தைரியம்..''

''இதை நான் உன்னிடம் கேட்க வேண்டும். எவ்வளவு தைரியமிருந்தால் என் சசியைப் பார்த்து குப்பைமேட்டுக் காகிதம் என்பாய். அவளொன்றும் குப்பை மேட்டுக் காகிதம் இல்லை. அது நீதான். உன் மனசெல்லாம் குப்பை... உன் பேச்செல்லாம் குப்பை.. ஏன் நீயே குப்பைதான். ஏய்.. வாடி சசி.. இவள் வீட்டு ஆளுகளைப் போய் நீ நம் சொந்தம்னு சொன்னாயே... உன்னைச் சொல்ல வேண்டும். இவளே இப்படின்னா இவள் வீட்டு ஆளுக எப்படியிருப்பாங்க?''



மாலினி வேகமாய் மாடியேற... சசிரேகாவும் அந்த வேகத்திற்குக் குறையாதவளாய் அவளைப் பின்தொடர்ந் தாள்.

அவர்கள் மாடியேறுவதைக் கோபத்துடன் பார்த்துக் கொண்டு நின்றிருந்த ஸ்வேதா... மெல்லிய கைதட்டலைக் கேட்டதும் திரும்பிப் பார்த்தாள்.

கருணாகரன் லேசாக கை தட்டியவாறு அங்கே வந்தான். ''உன் வீட்டாளுகளுக்கு நல்ல பெயரை வாங்கிக் கொடுத்து விட்டாய் ஸ்வேதா. நான் கேட்க வேண்டிய கேள்விகளையெல்லாம் மாலினி கேட்டுவிட்டுப் போய் விட்டாள். இதற்கு மேலும் நீ வாய் திறந்து பேசலாமா. கூடாது. ஆனால், நீ அதைச் செய்ய மாட்டாயே.. மாலினியை விட அதிகமாக அம்மா உன்னைத் திட்டியிருக்காங்க. நீ அடங்கவில்லையே...''

''என்ன அத்தான்.. நேற்று வந்தவளுக்காக பிறந்ததில் இருந்து சொந்தக்காரியாக இருக்கும் என்னைக் கோபித்துக் கொள்கிறீங்களே...''

''சொந்தமா.. எனக்கா.. நீயா? கிடையவே கிடையாது. என் பெண்டாட்டிக்கும் அவளுடைய தங்கைக்குமே நீ சொந்தமில்லையெனும்போது நீ மட்டும் எனக்கு எப்படி சொந்தமாவாய்..''

''அவர்களுக்காக என்னை ஒதுக்குவீர்களா?''

''நிச்சயமாக.. நான் வேறு.. சசி வேறு என்றில்லை. நீ அவளையே குப்பைமேட்டுக் காகிதம்னு சொன்ன ஆளு. உன்கூட எனக்கென்ன பேச்சு?''

''அத்தான்..''

''இந்த அத்தான் பொத்தான்னு உறவு கொண்டாடும் வேலையை வேறு எங்காவது வைத்துக்கொள். என்னிடம் வேண்டாம். ஆனால் ஒன்று.. இனி ஒரு தரம் இதுபோல

சசியிடம் நீ பேசினால் நான் உன் பல்லைக் கழட்டிவிடு வேன். அப்புறம் பேச முடியாமல் நீ பொக்கைவாய்க் கிழவியைப் போல பெப்பெப்பேன்னுதான் அலையணும்...''

ஸ்வேதாவின் வீட்டைச் சேர்ந்தவர்கள் உள்ளே நுழைந்த போது கருணாகரன் அவர்களைக் கவனிக்காதவனைப் போல அவர்களுக்கு முதுகு காட்டிய வண்ணம் மாடிப்படி களில் ஏறிவிட்டான்.

''யார்.. கருணா மாப்பிள்ளையா போவது.. எங்களைப் பார்க்கவில்லையா?'' ஸ்வேதாவின் தந்தை மாணிக்கவாசகம் வியப்புடன் வினவினார்.

நர்மதா யோசனையுடன் கருணாகரனின் முதுகைப் பார்த்தாள். அவள் அறையில் இருந்தபோது கருணாகரன் தான் வந்து ஸ்வேதாவின் வீட்டு மனிதர்கள் வருவதைச் சொன்னான். இப்போது இப்படிப் போகிறான் என்றால் அதில் ஏதோ இருக்க வேண்டும். எதுவும் நடக்காமல் கருணாகரன்.. வீட்டுக்கு வந்திருக்கும் உறவினர்களை அதுவும்.. ஒரே தங்கையின் பெண் பார்க்கும் விசேஷம் நடக்கப் போகும் சமயத்தில் வரவேற்காமல் தவிர்க்க மாட்டான்.

அங்கே நின்றுகொண்டிருந்த ஸ்வேதாவின் முகத்தை உற்றுப் பார்த்தாள் நர்மதா. அவமானத்தினால் முகம் மாறி நின்றிருந்தவள்.. அவசரமாகப் புன்னகைக்கவும் அவளுக்கு சந்தேகம் உறுதியாகிவிட்டது.

'இவள்தான் எதையோ பேசித் தொலைத்திருக்கிறாள்..'

நர்மதா எரிச்சலுடன் மாணிக்கவாசகத்தைப் பார்த்தாள். அவரோ மகளைப் பாசத்துடன் பார்த்தபடி..

''எப்படியிருக்கிறாய் ஸ்வேதா'' என்று அன்புடன் கேட்டார்.

''இந்த வீட்டில் எனக்கென்ன குறையிருக்கப் போகு துப்பா..'' ஸ்வேதா பதிலுக்கு பாசத்தைப் பிழிந்தாள்.



யாராவது இந்த உரையாடலைக் கேட்டால் என்ன நினைத்துக் கொள்வார்கள் என்ற நினைவேயில்லாமல் தகப்பனும் மகளும் பேசிக் கொள்வதைப் பார்த்த நர்மதா வுக்கு பற்றிக் கொண்டு வந்தது.

என்னவோ.. ஸ்வேதாவை அந்த வீட்டில் மணம் முடித்து கொடுத்திருப்பதைப் போலவும் புகுந்த வீட்டிலிருக் கும் மகளிடம் தகப்பன் நலம் விசாரிக்க.. மகள் அதற்குப் பதில் சொல்வதைப் போலவும் அந்த உரையாடல் இருக்க... நர்மதா பல்லைக் கடித்தாள்.

நர்மதாவின் முக மாற்றத்தை கண்டுகொண்ட பெரியவர் ஆளவந்தார் புன்னகைத்தார்.

''ஏண்டா மாணிக்கம்.. அத்தை வீட்டிற்கு விருந்தாளி யாக வந்திருக்கும் உன் பெண்ணிடம் நீ இப்படிக் கேட்பதே தப்பு. அதை விட்டுவிட்டு நீ உன் தங்கையின் முன்னா லேயே ஏடாகூடமாய் கேட்டு வைக்க.. அவளும் உன்னைப் போலவே உளறுகிறாளே. நாம் எதுக்கு வந்திருக்கிறோமோ அதைப் பார்ப்போம்..'' ஆளவந்தார் மகனை அதட்டினார்.

நர்மதா புன்னகையுடன் அவரைப் பார்த்து.. ''அதனால் என்ன பெரியப்பா.. அண்ணன் யதார்த்தமாக கேட்கிறார்..'' என்று ஒரு பேச்சுக்காக சொன்னாள்.

''அப்படியில்லையம்மா.. ஸ்வேதா கல்யாணமாகாத பெண். அவளை இத்தனை மாதங்களாய்.. ஏன் வருஷக் கணக்கில் உன் வீட்டில் விட்டு வைப்பதே தவறு..'' ஆளவந்தார் ஏதோ சொல்ல வர.. ஸ்வேதா அவசரமாக இடைமறித்தாள்.

''இது என்ன தாத்தா இப்படிச் சொல்றீங்க.. இது யார் வீடு? என் அத்தையின் வீடு.. காலமெல்லாம் இங்கேயிருக்க எனக்கு உரிமையிருக்கு...''

சசியிடம் நீ பேசினால் நான் உன் பல்லைக் கழட்டிவிடு வேன். அப்புறம் பேச முடியாமல் நீ பொக்கைவாய்க் கிழவியைப் போல பெப்பெப்பேன்னுதான் அலையணும்..."

ஸ்வேதாவின் வீட்டைச் சேர்ந்தவர்கள் உள்ளே நுழைந்த போது கருணாகரன் அவர்களைக் கவனிக்காதவனைப் போல அவர்களுக்கு முதுகு காட்டிய வண்ணம் மாடிப்படி களில் ஏறிவிட்டான்.

''யார்.. கருணா மாப்பிள்ளையா போவது.. எங்களைப் பார்க்கவில்லையா?'' ஸ்வேதாவின் தந்தை மாணிக்கவாசகம் வியப்புடன் வினவினார்.

நர்மதா யோசனையுடன் கருணாகரனின் முதுகைப் பார்த்தாள். அவள் அறையில் இருந்தபோது கருணாகரன் தான் வந்து ஸ்வேதாவின் வீட்டு மனிதர்கள் வருவதைச் சொன்னான். இப்போது இப்படிப் போகிறான் என்றால் அதில் ஏதோ இருக்க வேண்டும். எதுவும் நடக்காமல் கருணாகரன்.. வீட்டுக்கு வந்திருக்கும் உறவினர்களை அதுவும்.. ஒரே தங்கையின் பெண் பார்க்கும் விசேஷம் நடக்கப் போகும் சமயத்தில் வரவேற்காமல் தவிர்க்க மாட்டான்.

அங்கே நின்றுகொண்டிருந்த ஸ்வேதாவின் முகத்தை உற்றுப் பார்த்தாள் நர்மதா. அவமானத்தினால் முகம் மாறி நின்றிருந்தவள்.. அவசரமாகப் புன்னகைக்கவும் அவளுக்கு சந்தேகம் உறுதியாகிவிட்டது.

'இவள்தான் எதையோ பேசித் தொலைத்திருக்கிறாள்..'

நர்மதா எரிச்சலுடன் மாணிக்கவாசகத்தைப் பார்த்தாள். அவரோ மகளைப் பாசத்துடன் பார்த்தபடி..

''எப்படியிருக்கிறாய் ஸ்வேதா'' என்று அன்புடன் கேட்டார்.

''இந்த வீட்டில் எனக்கென்ன குறையிருக்கப் போகு துப்பா..'' ஸ்வேதா பதிலுக்கு பாசத்தைப் பிழிந்தாள்.



யாராவது இந்த உரையாடலைக் கேட்டால் என்ன நினைத்துக் கொள்வார்கள் என்ற நினைவேயில்லாமல் தகப்பனும் மகளும் பேசிக் கொள்வதைப் பார்த்த நர்மதா வுக்கு பற்றிக் கொண்டு வந்தது.

என்னவோ.. ஸ்வேதாவை அந்த வீட்டில் மணம் முடித்து கொடுத்திருப்பதைப் போலவும் புகுந்த வீட்டிலிருக் கும் மகளிடம் தகப்பன் நலம் விசாரிக்க.. மகள் அதற்குப் பதில் சொல்வதைப் போலவும் அந்த உரையாடல் இருக்க... நர்மதா பல்லைக் கடித்தாள்.

நர்மதாவின் முக மாற்றத்தை கண்டுகொண்ட பெரியவர் ஆளவந்தார் புன்னகைத்தார்.

''ஏண்டா மாணிக்கம்.. அத்தை வீட்டிற்கு விருந்தாளி யாக வந்திருக்கும் உன் பெண்ணிடம் நீ இப்படிக் கேட்பதே தப்பு. அதை விட்டுவிட்டு நீ உன் தங்கையின் முன்னா லேயே ஏடாகூடமாய் கேட்டு வைக்க.. அவளும் உன்னைப் போலவே உளறுகிறாளே. நாம் எதுக்கு வந்திருக்கிறோமோ அதைப் பார்ப்போம்..'' ஆளவந்தார் மகனை அதட்டினார்.

நர்மதா புன்னகையுடன் அவரைப் பார்த்து.. ''அதனால் என்ன பெரியப்பா.. அண்ணன் யதார்த்தமாக கேட்கிறார்..'' என்று ஒரு பேச்சுக்காக சொன்னாள்.

''அப்படியில்லையம்மா.. ஸ்வேதா கல்யாணமாகாத பெண். அவளை இத்தனை மாதங்களாய்.. ஏன் வருஷக் கணக்கில் உன் வீட்டில் விட்டு வைப்பதே தவறு..'' ஆளவந்தார் ஏதோ சொல்ல வர.. ஸ்வேதா அவசரமாக இடைமறித்தாள்.

''இது என்ன தாத்தா இப்படிச் சொல்றீங்க.. இது யார் வீடு? என் அத்தையின் வீடு.. காலமெல்லாம் இங்கேயிருக்க எனக்கு உரிமையிருக்கு...''

''இரண்டு நாள்களாக என் மகள் கனவில் நீதான் வருகிறாயாம் நர்மதா. 'அத்தை.. அத்தை'ன்னு புலம்பினாள். அதுதான் உன்கிட்டேயே கொண்டு வந்து விட்டுவிட்டேன்...'' என்று மாணிக்கவாசகமே நேரில் வந்து சொல்லி மகளை விட்டு விட்டுப் போகும்போது.. நர்மதாவினால் மறுப்புச் சொல்ல முடியாமல் போய்விட்டது.

''என்ன அம்மா.. இது?'' என்று ஆட்சேபணைக் குரல் எழுப்பிய பிரபாகரனிடம்..

''என்னை.. என்ன செய்யச் சொல்கிறாய் பிரபா. எனக்கு கூடப் பிறந்தவங்க யாரும் இல்லை. வீட்டுக்கு ஒற்றைப் பெண்ணாகப் போய்விட்டேன். பெரியப்பாவிற்கு பெண்குழந்தை இல்லை. என்னைத்தான் பெத்த பெண்ணாக அவர் நினைக்கிறார். எனக்கு பிறந்த வீட்டுச் சொத்து முழுவதும் வந்தாலும் இன்றைக்கும் உங்களுக்கு செய்ய வேண்டிய தாய்மாமன் சீர்.. என் பெரியப்பா பெற்ற மகன்களிடமிருந்துதானே வருகிறது. என்னால் எப்படி அவரிடம் முகம் முறித்துப் பேச முடியும்?'' என்று நர்மதா கெஞ்சுதலாக கூறிவிட்டாள்.

''ஆனால் அம்மா.. ஸ்வேதாவின் மனதில் வேறு ஆசை இருக்கிறதே..''

''அதற்கு நாம் என்ன செய்ய முடியும் பிரபா? கருணாவைக் கட்டிக் கொள்ளத்தான் ஸ்வேதா ஆசைப் பட்டாள். கருணாவின் கல்யாணம் முடிந்த பின்னால் உன்னையும் தினாவையும் கை காட்டுகிறாள். அவளை என்ன செய்வது.. எப்படி கருணாவின் காதலை நான் மதித்தேனோ அதைப் போலவே உன் விருப்பத்தையும் தினாவின் விருப்பத்தையும் நான் மதிப்பேன். என் பிள்ளைகளின் மனதிற்கு மாறாக எதையும் செய்ய மாட்டேன்..''

நர்மதா ஆணித்தரமாக கூறிவிடவும்.. பிரபாகரன் அமைதியாகி விட்டான்.



ஸ்வேதாவும் வருடக் கணக்கில் அங்கே தங்கி எப்படியெல்லாமோ முயற்சி செய்து பார்த்தாள். ஆனால்... அவளால் பிரபாகரனின் மனத்தையும் தினகரனின் மனத்தையும் வசப்படுத்த முடியவில்லை. மாறாக.. அவர்கள் இருவருக்கும் இவள் மேல் வெறுப்புதான் அதிகமாகியது.

அதிலும் தினகரன்.. நேருக்கு நேராகவே ஸ்வேதாவை திட்டிப் பேசிவிடுவான். ஆனாலும்.. அதையெல்லாம் அவள் கண்டுகொள்ளவே மாட்டாள்.

பிரபாகரன்.. யாராலும் அணுக முடியாத இரும்புப் பிறவி. அதனால் ஸ்வேதாவினால் அவனிடம் நெருங்க முடியவில்லை.

கருணாகரனின் குடும்ப வாழ்க்கையில் குழப்பம் விளைவிக்கலாம் என்ற நல்ல எண்ணத்துடன் அவனிடம் பழக முயன்றாள். அவன் அக்கினிப் பார்வையுடன் ஒதுங்கிப் போய்விட்டான்.

செய்வதறியாமல் கையைப் பிசைந்துகொண்டு ஸ்வேதா இருந்தபோது அவளது மனக்கோட்டையை மண் கோட்டையாக்க மாலினி அந்த வீட்டில் காலடி எடுத்து வைத்துவிட்டாள்.

ஆளவந்தாரின் இளைய மகன் வாசவன் பெற்றதும் முத்தாக மூன்று பிள்ளைகள்தான் மாணிக்கவாசகத்திற்கு மூத்தது இரண்டும் பெண் என்றால்.. வாசவனுக்கு மூத்தது இரண்டும் பையன்கள். மூத்தவன் ரவீந்திரன்.. அடுத்தவன் சுசீந்திரன். அவர்கள் இருவருக்கும் அடுத்து குடும்பத்தில் கடைக்குட்டியாக பிறந்தவள்தான் பவித்ரா. தாய் ராஜேஸ்வரிக்கும் தந்தை வாசவனுக்கும் செல்லப் பெண். அமைதியானவள். அடக்கமானவள். அழகானவள். பண்பானவள்.

நர்மதாவிற்கு தன் பெரியப்பாவின் பேத்திகளில் பவித்ராவைத்தான் மிகவும் பிடிக்கும். அந்த ஒரு காரணத்துக்காகவே ஸ்வேதாவிற்கு பவித்ராவைக் கண்டால் ஆகாது.

இன்றைக்கும் அதைப்போல ஆளவந்தார்... ஸ்வேதாவையும் மாணிக்கவாசகத்தையும் கடிந்து கொண்டிருந்த போது பவித்ரா குனிந்து நர்மதாவின் பாதம் தொட்டு வணங்கினாள்.

''நல்லாயிரும்மா..'' நர்மதா கனிவுடன் அவளை எழுப்பி அணைத்துக் கொண்டாள்.

அதைக் கண்ட ஸ்வேதாவிற்கு வழக்கம் போல மேனியெல்லாம் மிளகாயை அப்பியதைப் போல எரிய ஆரம்பித்து விட்டது.

'வித்தாரக் கள்ளி..' மனதிற்குள் பவித்ராவைத் திட்டியபடி மாணிக்கவாசகத்தைப் பார்த்தாள்.

அவருடைய முகமும் இறுகியிருந்தது. தம்பியின் மகளிடம் இயல்பாகத் தென்படும் இதுபோன்ற பழக்கங்கள் ஸ்வேதாவிடம் ஏன் இல்லை என்று அவர் மனதிற்குள் ஸ்வேதாவின் மேல் கோபம் கொண்டார்.

ஸ்வேதாவிடம் இதைச் சொல்லக்கூட வேண்டியதில்லை. லேசாக கண் ஜாடை காட்டினாலே போதும்.. அவள் அதைச் செய்துவிடுவாள். ஆனால்.. அதில் இயல்பிருக்காது. படு செயற்கைத்தனமாக இருக்கும் என்பதால் மனதிற்குள் வாசவனின் அதிர்ஷ்டத்தை எண்ணி பொறாமைப்பட்டுக் கொண்டார் மாணிக்கவாசகம்.

''எப்படியிருக்கிற பவித்ரா?'' அன்புடன் விசாரித்தாள் நர்மதா.

''நல்லாயிருக்கேன் அத்தை.. காயத்ரி எங்கே?'' பவித்ரா ஆவலுடன் வினவினாள்.

''ம்ஹூம்.. நீ வெளியூரிலிருந்து வந்திருக்கிறாய்.. உனக்கு காயத்ரியைத் தேட வேண்டும் என்று தோன்றுகிறது. உன் அக்கா இந்த வீட்டில்தான் விருந்தாளியாக இருக்கிறாள். அவளுக்கு காயத்ரியைத் தேட வேண்டும் என்று தோன்றவில்லை. காயத்ரி.. அதோ அந்த ரூமில்தான் இருக்கிறாள்ம்மா. போ.. போய்ப் பாரு..'' நர்மதா கை காட்டினாள்.



ஸ்வேதாவின் முகம் சுருங்கிவிட்டது. அவள் காயத்ரியை கண்டுகொள்ளவில்லை என்பதை இப்படி எல்லோரின் முன்னாலும் நர்மதா போட்டு உடைத்துவிட்டாளே என்று அவள் மனதிற்குள் வெகுண்டாள்.

அவளும்தான் என்ன செய்வாள்.. அந்த வீட்டு ஆண் மக்களின் பின்னால் அலைவதற்கே அவளுக்கு நேரம் சரியாக இருக்கிறபோது காயத்ரியின் அருகே போய் உட்கார அவளுக்கு ஏது நேரம்?

''ஏம்மா... ஸ்வேதா.. அத்தை இப்படிச் சொல்கிறதைப் போலவா வைத்துக் கொள்கிறது.. காயத்ரியைப் பார்த்துக் கொள்வது உன் கடமையில்லையா?'' மாணிக்கவாசகம் ஆரம்பித்தார்.

''நான் உங்கள் மகள் அப்பா. ஒருபோதும் கடமையிலிருந்து தவறவே மாட்டேன். இன்றைக்கு லேசாய் தலைவலி. அதனால்தான் காயத்ரியைக் கவனிக்க முடியவில்லை..'' ஸ்வேதா தகப்பனாரின் பாணியிலேயே பதில் சொன்னாள்.

அதற்கு மேல் அந்த நாடகத்தை சகித்துக் கொள்ள முடியாத நர்மதா..

''நிற்கறீங்களே பெரியப்பா.. உட்காருங்க. பெரியம்மா.. உங்க கால் வலி இப்போது தேவலாமா. பெரியண்ணி.. சுவாதி எப்படியிருக்கிறதா? சுதர்சன் வளர்ந்துவிட்டானே.. சின்ன அண்ணி.. ரவியும் சுசியும் வரவில்லையா? பரிமளா அண்ணி ஏன் அமைதியாய் நிற்கிறாங்க..'' என்று பேசியபடி அனைவரையும் ஹாலுக்கு அழைத்துச் சென்றுவிட்டாள்.

தங்களின் பேச்சை கண்டுகொள்ளாமல் நகர்ந்து விட்ட நர்மதாவின் முதுகைக் கோபத்துடன் வெறித்துப் பார்த்தபடி அசையாமல் நின்ற மாணிக்கவாசகமும் ஸ்வேதா வும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''இந்தக் கிழவி பேசுவதைக் கேட்டீங்களாப்பா...''

''ஸ்ஸ்... சத்தமாய் பேசி வைக்காதே ஸ்வேதா.. யாருக் காவது கேட்டுவிடப் போகிறது..''

''கேட்டால் கேட்கட்டும்.. நான் பார்த்தாலும் பார்த் தேன்.. இந்தக் கிழவியைப் போல் அழிச்சாட்டியம் பண்ணும் பொம்பளையைப் பார்த்ததேயில்லை...''

''கோட்டையூர் ஜமீன்தாரிணிம்மா.. அந்தத் திமிர்..''

''எல்லாம் நான் இந்த வீட்டில் மருமகளாக காலடி எடுத்து வைக்கும் வரையில்தான்! அதற்குப் பின்னால் பாருங்க.. இந்தம்மாவைத் தூக்கி மூலையில் போட்டுவிடு கிறேன்..''

''அதற்கு முன்னால் நர்மதா உன்னைத் தூக்கி வெளி யில் போட்டுவிடக்கூடாது என்பதுதான் என் கவலை..''

''அது தூக்கிப் போட்டால் உடனே நான் வெளியே போய் விழுந்து விடுகிற ஆளா.. அதன் கையை இறுக்கிப் பிடித்துக் கடிச்சுக் குதறிட மாட்டேன்?''

ஸ்வேதாவின் குரலில் இப்போதே அந்தக் காரியத் தைச் செய்துவிட வேண்டும் என்ற துடிப்பு தெரிந்தது..

''அடக்கி வாசிம்மா.. நீ இப்ப இந்த வீட்டில வெறும் விருந்தாளி மட்டும்தான். பவித்ராவைப் பற்றி உன் அத்தை பேசுவதைக் கேட்டாய்தானே..''

''ஆமாம்ப்பா.. பவித்ராவைவிட.. நான் நான்கு வயதுதான் மூத்தவள். என்னை என்னவோ நூற்றுக் கிழவியாக்கி பவித்ராவிடம் உன் அக்கா.. உன் அக்கான்னு பழமை பேசுதே இந்தக் கிழவி..''



'நீ அதிலேயே இரு...' என்று மனதிற்குள் எரிச்சல் பட்டார் மாணிக்கவாசகம்.

அவர் சொல்வதைக் கொஞ்சமாவது இந்தப் பெண் புரிந்துகொள்கிறதா என்று இருந்தது அவருக்கு.

பவித்ராவின் அருமையை நர்மதா கவனிக்க ஆரம் பித்து விட்டாள். இது நன்மைக்கான அறிகுறியல்ல.. எப்போதுமே அடக்கம்.. பண்பாடு என்று பேசி வைக்கும் நர்மதாவின் பார்வை பவித்ராவின் மீது படிந்துவிட்டால் என்ன செய்வது என்ற கவலை அவருக்குள் துளிர் விட்டது.



## 44

*உறங்குகின்ற போதும்...*
*உன் உருவம் மறையாத நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

முகம் கழுவி உடை மாற்றிக் கொண்ட மாலினி.. லேசான ஒப்பனைகளை செய்து முடித்தபின் கண்ணாடி யில் தன்னைப் பார்த்துக் கொண்டாள்.

இன்றைய தினத்தின் கதாநாயகி காயத்ரிதான் என்பதால் பட்டுப் புடவையை தவிர்த்திருந்தாள். இருக்கிற வீடு பணக்காரத்தனம் நிறைந்தது என்பதால் சாதாரண புடவைகளையும் தவிர்த்திருந்தாள்.

ஆகாய நீலத்தில்.. வெண்மை நிறத்தில்.. பொடிப் பொடியாய் கற்கள் பதிக்கப்பட்ட பிரிண்டட் சேலை..

அந்தச் சேலையிலேயே வெட்டித் தைக்கப்பட்ட ஜாக்கெட்டின் கையோரமாக சிறு கற்கள் நெருக்கமாகவும் வரிசையாகவும் பதிக்கப்பட்டிருந்தன. தளர்வாகப் பின்னிய பின்னலின் நுனியில் ஹேர் பாண்டு.. மார்த்தாண்டம் வந்த பின்னால் வெட்டப்படாத தலைமுடி... அடர்ந்து நீண்டு வளர்ந்து அழகான பின்னலாக மாலினியின் இடுப்பைத் தாண்டித் தொங்கியது.

சேலையில் பதிக்கப்பட்டிருந்த வெண்மை நிறக் கற்களுக்குப் பொருத்தமாக வெண்ணிறக் கல் அட்டிகையைப் போட்டு வெண்ணிற கற்கள் பதித்த புதுவகை மாடல் காதணிகளை அணிந்துகொண்டாள் மாலினி.

அவளுக்கும் சசிரேகாவுக்கும் என்று பிரத்தியேகமாகக் கட்டியதாகச் சொல்லி செந்தாமரை வந்து கொடுத்து விட்டுப் போன நெருக்கிக் கட்டப்பட்ட மல்லிகை மொட்டுக்களின் சரத்தை நீளமாக இரண்டாக மடித்து தலையில் பின் பண்ணிக் கொண்டாள்.

நெற்றியில் மெரூன் நிறப் பொட்டின் மையத்தில் வெள்ளைக் கல் பதிக்கப்பட்டிருந்தது. லேசாக மையிட்டதே தெரியாமல் மையிடப்பட்ட கண்கள்.

வரிசையான முத்து வளையல்களை தங்க வளையல்களுடன் கலந்து இரு கைகளிலும் அடுக்கிக் கொண்ட பின்னால் கண்ணாடியைப் பார்த்த மாலினி.. தன் அழகைக் கண்டு லேசாக சிரித்துக் கொண்டாள்.

எவ்வளவுதான் குறைவாக ஒப்பனை செய்தாலும் இயற்கை அழகை எப்படி மறைக்க முடியும்?

மாலினி அறையை விட்டு வெளியே வந்தபோது எதிரே வந்த பிரபாகரனின் கண்கள் மின்னின.

அவன்.. ''வாவ்...'' என்றான்.



மாலினியின் முகம் சிவந்துவிட்டது. அவள் மிகச் சாதாரண உடையில் வந்தாலும் இவன் இப்படித்தான் சொல்வான் என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

''உனக்கொரு பழைய பாட்டுத் தெரியுமா?'' என்று கேட்டவன்... எதையோ நினைத்துக் கொண்டவனாக..

''இந்தக் கேள்வியைப் போய் உன்னிடம் கேட்கிறேனே... அன்றைக்கே நீ ஒரு பழைய பாட்டைப் பாடியவளாச்சே..'' என்று சொன்னான்.

''இப்ப அதுக்கு என்ன பண்ணணும்கிறீங்க... காயத்ரிக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டு பழைய பாட்டைப் பாடி மாப்பிள்ளை வீட்டுக்காரங்களை கலவரப் படுத்தச் சொல்கிறீங்களா?''

''நோ.. நோ... இது வேற..''

''என்னவாம்?''

''ஆயிரம் கைகள் மறைத்தாலும்.. ஆதவன் மறைவதில்லைன்னு ஒரு பாட்டு..''

''அழகான பாட்டுல்ல அது.. எம்.ஜி.ஆர். படப் பாட்டு..''

''அது எனக்குத் தெரியாது..''

''வேற எதுதான் தெரியும்?''

''நீ என்னதான் குறைவாக அலங்காரம் பண்ணிக் கொண்டாலும் உன் அழகு குறைவதில்லை...''

பிரபாகரன் அவளை விழுங்கிவிடுவதைப் போலப் பார்த்துக் கொண்டு ரசனையாய் கூற... மாலினிக்கு ஜிவ்வென்று ஆகிவிட்டது. அவள் முகம் சிவந்து போனாள்.

''மாலினி...''

''ம்ம்ம்...''

பிரபாகரன் எதையோ சொல்லத் துடித்தான். அவனது பார்வையில் தெரிந்த ஏதோ ஒன்று மாலினியை வசப்படுத்தியது. அவள் நகர முடியாமல் நின்றாள். அந்தச் சமயம் பார்த்து மாடிப்படியில் காலடியோசைகள் கேட்டன. பல குரல்கள் சேர்ந்த கலவையொலி காற்றில் மிதந்து வந்து அவர்களின் காதுகளில் நுழைந்தது.

ஒரு பெருமூச்சுடன் பிரபாகரன் வேகமாக அந்த இடத்தை விட்டு அகன்று விட்டான். மாலினி தன்னுணர்வு வரப் பெற்றவளாக மாடிப்படியை நோக்கினாள்.

நர்மதாவின் உறவினர் வட்டாரத்தில் இளம் பெண்கள் செட்டாக வந்து கொண்டிருந்தனர். அவளைக் கண்டதும் அவர்கள் கேள்வியோடு அவளைப் பார்த்துவிட்டுத் தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொண்டனர்.

அறிமுகமில்லாத பெண்களிடம் எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது என்ற யோசனையுடன் அவர்களைப் பார்த்த மாலினி லேசாகப் புன்னகைத்தாள்.

பதிலுக்கு அவர்கள் மலர்ந்து சிரிக்கவும்..

''ஹாய்.. ஐ ஆம் மாலினி.. சசிரேகாவின் சிஸ்டர்.. சென்னையிலிருந்து வந்திருக்கிறேன்..'' என்று சொன்னாள்.

''ஓ.. நீங்கதான் அந்த இன்ஜினீயரா..'' அவர்களில் ஒரு இளம்பெண் சட்டென்று சொல்லவும்.. கூட இருந்த மற்றொரு பெண் வியப்புடன் சொன்னவளைப் பார்த்தாள்.

''உனக்கெப்படி அஞ்சலி இது தெரியும்?''

''ஸ்வேதா சொன்னாள்..''

''உன்னோடு ஒரு நிமிஷம்தானே பேசியிருப்பாள்..''

''அந்த ஒரு நிமிஷம் பூராவும் இவங்க புராணம் தான்..'' என்று சிரித்த அஞ்சலி..



''பட்.. அவ சொன்னதற்கும் உங்களை நேரில் பார்ப்பதற்கும் நிறைய வித்தியாசமிருக்கே..'' என்று மாலினியைப் பார்த்து கண் சிமிட்டினாள்.

ஸ்வேதா என்ன சொன்னாள் என்று மாலினி, அஞ்சலியும் கேட்கவில்லை. அவள் நிச்சயம் நல்லவிதமாகச் சொல்லியிருக்கப் போவதில்லை என்பது மாலினிக்கே தெரியுமே.

எனவே.. லேசாக தோளைக் குலுக்கியபடி அங்கேயிருந்து நகரப் போனாள் மாலினி. அஞ்சலியிடம் கேள்வி கேட்டவள் இப்போது மாலினியைப் பார்த்து..

''ஐ ஆம் ஸாரி..'' என்றாள்.

''நீ எதுக்கு என்னிடம் ஸாரி கேட்கிறாய்?'' வியப்புடன் கேட்டாள் மாலினி.

''நான் ஸ்வேதாவின் தங்கை. அவள் செய்த தப்பிற்கு நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்..'' என்று பவ்யமாய் பதில் சொன்னாள் அவள்..

'இதைப் பாருடா.. அப்பேர்ப்பட்ட வில்லிக்கு இப்பேர்ப்பட்ட தங்கையா?' ஆச்சரியப்பட்டுப் போன மாலினி நினைத்ததை முகத்தில் காட்டிவிட..

''இவ ஒண்ணும் ஸ்வேதாவின் கூடப் பிறந்த தங்கையில்லைங்க..'' என்றாள் அஞ்சலி.

''ஈஸிட்?''

''ஆமாம்.. இவ ஸ்வேதாவின் சித்தப்பாவின் மகள். பவித்ரா..''

'எவ்வளவு பொருத்தமான பெயர் இவளுக்கு..' என்று மாலினிக்கு தோன்றியது.

பவித்ரா.. பவித்ரமானவள். பெயருக்கேற்றபடி முகத்தில் அமைதியையும் அடக்கத்தையும் வெளிப்படுத்திக் கொண்டு அவள் நின்றிருந்தாள்.

ஸ்வேதாவுக்கு நேர்எதிரிடையான குணாதிசயம் கொண்டவள் என்று தோன்றியதாலோ என்னவோ மாலினிக்கு அவளை மிகவும் பிடித்துப் போய்விட்டது. அவளைப் பார்த்து மிகவும் சிநேகிதமாய் சிரித்து வைத்தாள்.

''என்ன படித்திருக்கிறாய் பவித்ரா?''

''எம்ஸிஏ...''

''வேலைக்குப் போகவில்லையா?''

''இல்லை..''

''ஏன்?''

''என் வீட்டில் ஏனோ அதை விரும்பவில்லை..''

பவித்ரா வெள்ளையாக சிரித்தாள். இப்படிப்பட்ட சிரிப்பை ஸ்வேதாவின் குடும்பத்தைச் சேர்ந்த பெண் சிரிக்கிறாள் என்றால் அது ஆச்சரியமான விஷயம்தான் என்று நினைத்துக் கொண்டாள் மாலினி.

''மாலினி...'' என்று அழைத்தபடி அங்கே வந்தாள் சசிரேகா.''

அந்த வீட்டின் சின்ன மருமகள் என்ற முறையில் விலையுயர்ந்த பட்டுச் சேலையையும் வைர நகைகளையும் அணிந்து ஜொலித்துக் கொண்டிருந்த சசிரேகாவை கொஞ்சம்கூடப் பொறாமை கலக்காத பார்வையுடன் ரசித்தாள் மாலினி.

''யூ லுக் வெரி பியூட்டிஃபுல் சசி...'' என்று மனமாரப் பாராட்ட வேறு செய்தாள்.

அதைக் கேட்ட சசி..

''கேலி பண்ணாதேடி..'' என்றவாறு அங்கிருந்தவர்களிடம் நலம் விசாரிக்க ஆரம்பித்தாள்.



பரஸ்பர நல விசாரிப்பிற்கு பின்னால் மாலினியுடன் பேசியவாறு கீழே சென்றாள் சசிரேகா.

''ஏதாவது சாப்பிட்டாயா காயத்ரி..'' மாலினி, காயத்ரிக்கு ஒப்பனையை சரிசெய்தவாறு கேட்டாள்.

''ஊஹூம்...'' என்றாள் அவள்.

''ஏன்.. ஜூஸ் சாப்பிட வேண்டியதுதானே...''

மாலினி.. செந்தாமரையை அழைத்து ஜூஸ் கொண்டு வரச் சொல்லும்போது.. பவித்ரா உள்ளே வந்தாள்.

''காயத்ரிக்கு நீங்கதான் மேக்அப் பண்ணிவிட்டீங்களா?''

''ஆமாம்..''

''ரொம்ப அழகாயிருக்கு...''

''தேங்க்ஸ்...''

மாப்பிள்ளை வீட்டார் வந்துவிட.. அவசரமாக சசிரேகா கணவனின் அருகில் நிற்பதற்காக ஹாலுக்கு விரைந்தாள்.

''மாலு.. காயத்ரியைப் பார்த்துக்க.. பக்கத்திலேயே இரு...''

''டோண்ட் வொர்ரி.. நான் பாத்துக்கறேன்...''

''நான் அத்தையுடன் சேர்ந்து, வருகிறவங்களை இன்வைட் பண்ணணும் மாலினி...''

''நீ போடி...''

அந்தச் சகோதரிகளின் அக்கறையைக் கண்டு பவித்ரா ஆச்சரியப்பட்டாள்.

''உன் அண்ணி உன்மேல் பிரியமா இருக்கிறாங்க. சரி.. இவங்களும் உன் மேல இத்தனை ப்ரியமா இருக்காங்களே... எனக்கு உன்னைப் பார்த்தால் பொறாமையாய்

இருக்கு காயத்ரி. எனக்கு உன்னைப் போல அண்ணி கிடைக்கவில்லையே...''

''சத்தம் போடாதேடி.. உன் அண்ணிகளின் காதில் விழுந்துவிட்டால் வம்பு..''

''அதைச் சொல்லு..''

அவர்களின் பேச்சைக் கேட்ட மாலினிக்கு சிரிப்புத் தான் வந்தது. நாத்தனாரிடம் நல்ல பெயர் வாங்கியிருக்கும் தன் ஒன்றுவிட்ட சகோதரியை நினைத்து பெருமையாகவும் இருந்தது.

''மாலினி.. காயத்ரியைக் கூப்பிட்டுக் கொண்டு வர சொல்கிறாங்க..''

சசிரேகா பரபரப்புடன் வந்தாள். அது நேரம் வரை சிரித்த முகத்துடன் பேசிக்கொண்டிருந்த காயத்ரி.. பதற்ற முகத்துடன் மாலினியை ஏறிட்டுப் பார்த்தாள்.

மாலினியின் கையை இறுக்கிப் பிடித்திருந்த அவளின் கை நடுங்குவதை மாலினியால் உணர முடிந்தது.



*இமையோரம் குடியிருந்து...*
*இம்சை செய்யும் உன் நினைவை*
*என்னவென்று நான் சொல்ல...?*

ஏறக்குறைய மாலினியின் வயதுதான் காயத்ரிக்கும் இருக்கும். மாலினியைவிட ஒரு வயது இளையவள் என்று சசிரேகா சொல்லியிருந்தது இப்போது மாலினியின் நினைவுக்கு வந்தது.



மாலினியால் காயத்ரியின் பயத்தை புரிந்துகொள்ள முடிந்தது. இது பெண்களுக்கே உரித்தான பிரத்தியேக உணர்வு என்று அவள் நினைத்துக் கொண்டாள்.

இந்த பயம்.. இந்தப் பதற்றம்.. இந்த நாணம்.. இந்த நடுக்கம்.. இந்த படபடப்பு.. இந்த பரிதவிப்பு.. இந்தக் கலக்கம்... இவை யாவுமே ஒரு வகையில் பிற்காலத்தில் நினைத்துப் பார்க்கும்போது தித்திப்பைக் கொடுக்கத்தான் செய்யும். இன்று அந்த உணர்வுகளை அறிந்து கொண்டு அனுபவபூர்வமாக உணரும் தருணம் காயத்ரிக்கு வாய்த்திருக்கிறது.

மாலினி, காயத்ரியின் கையைப் பற்றி மெதுவாக அழுத்திக் கொடுத்தாள்.

''நான் உன் பக்கத்திலேயே இருப்பேன் காயத்ரி...''

''படபடன்னு இருக்கு மாலினி...''

இதற்கு என்ன பதிலை மாலினியால் சொல்ல முடியும்.. காலம் காலமாக ஏன் இதுபோன்ற முறையில் பெண் பார்க்கும் படலம் நடத்தப்படுகின்றது என்று அவளுக்குமே புரியத்தான் இல்லை.

எல்லோரும் சபையில் அமர்ந்திருக்க.. அவர்களுக்கு முன்னால் காட்சிப் பொருள் போல பெண்ணைக் கொண்டு போய் நிறுத்தினால் அவள்தான் பாவம் என்ன செய்வாள்?

எல்லோரின் பார்வையும் தன் மேல் பதிந்திருக்கும் உணர்வில் அவளுக்கு கை நடுங்காதா?

ஒரு நொடி.. பெண் பார்ப்பதற்கு பதில் மாப்பிள்ளை பார்க்கும் படலத்தை நடத்தினால் எப்படியிருக்கும் என்று மாலினி நினைத்துப் பார்த்தாள்.

காயத்ரி.. மாலினி.. அஞ்சலி என எல்லோரும் சபையில் அமர்ந்திருக்கிறார்கள். மாப்பிள்ளை குனிந்த

தலையுடன் மெதுவாக வருகிறான். அவனுக்கு துணையாக ஒரு பக்கம் பிரபாகரனும் மறுபக்கம் தினகரனும் வருகிறார்கள்.

இந்த நினைவு சிரிப்பைக் கொடுக்க.. தன்னையறியாமல் வாய்விட்டுச் சிரித்துவிட்டாள் மாலினி. அவள் எதற்காக அப்படி வாய்பொத்திச் சிரிக்கிறாள் என்று புரியாமல் காயத்ரி விழிக்க.. தன் கற்பனையை அவளது காதோடு சொன்னாள்.

இப்போது காயத்ரி வாய் பொத்தி சிரிக்க.. அஞ்சலியும் பவித்ராவும் ஆர்வமாக அவர்களுக்கு அருகில் வந்தார்கள்.

''என்ன காயு.. எனக்கும் சொல்லேன்...''

தகவல் காயத்ரியிடமிருந்து பவித்ராவின் செவிக்குள் நுழைந்தது. அவளிடமிருந்து அஞ்சலியின் செவிக்கு நுழைந்தது.

இப்போது சிரிப்பது அவர்களின் முறையாகிப் போக..

''போதும் சிரித்தது...'' என்று சசிரேகா அவர்களை அடக்கினாள்.

''நீ கொஞ்ச நேரம் வாயைத் திறக்காதே மாலினி...''

''எதுக்குடி எனக்கு 'தடா' போடுற?''

''நீ வாயைத் திறந்தாலே வில்லங்கம்தான்...''

''அப்படி என்ன வில்லங்கத்தை இப்ப நீ கண்டு விட்ட?''

''ஏண்டி.. அங்கே பெண்ணை அழைச்சுக்கிட்டு வரச் சொல்லிவிட்டு எல்லோரும் காத்திருக்கிறாங்க. இங்கே நீ பெண்ணுக்கு சிரிப்பு மூட்டிக்கிட்டு இருக்கிற. ஜோக்கடிக்கிற நேரமாடி இது?''



''அதுவும் சரிதான். காயத்ரி.. எதுக்கும் சிரிக்க வேண்டியதையெல்லாம் இங்கேயே சிரித்துவிட்டு ஹாலுக்குப் போம்மா. நீ பாட்டுக்கு சிரிப்பை அடக்கிக் கொண்டு ஹாலுக்கு வந்து நின்னேன்னு வை.. மாப்பிள்ளை உன்னைப் பார்க்கும்போது நீ வெட்கப்பட்டுக் கொண்டு தலையைக் குனியாமல் வாயைப் பொத்திக் கொண்டு சிரிக்க ஆரம்பித்து விடுவாய். அப்புறம் கதையே மாறிவிடும்..'' என்று சிரிக்காமல் சொன்னாள் மாலினி.

''இவ சொல்றது போல செய்துவிடாதே காயத்ரி..'' சசிரேகா பயந்து போனாள்.

''இல்லை அண்ணி... நான் அங்கே வந்து சிரிக்க மாட்டேன்..'' என்று காயத்ரி பலமுறை உத்தரவாதம் கொடுத்த பின்பே ஒரு வழியாக சசிரேகா சமாதானம் ஆனாள்.

மாலினியின் துடுக்குத்தனம் அஞ்சலியைக் கவர்ந்து விட்டது.

''அட்டகாசம் பண்றீங்க போங்க.. விட்டிருந்தால் உங்க சிஸ்டர் அழுதிருப்பாங்க.. இப்படிக் கலாட்டா பண்றீங்களே..'' என்று மாலினியிடம் வியந்தாள்.

''ஆல்ரெடி அவள் பல முறை அழுதிருக்கிறாள்..''

''அதுதானே பார்த்தேன்..''

அவர்கள் காயத்ரியின் பின்னால் வர.. காயத்ரியை தோள் தொட்டு அழைத்துச் சென்று ஹாலில் நிறுத்தினாள் சசிரேகா.

''மாப்பிள்ளை யாரு?''

மாலினி பக்கத்தில் நின்ற பவித்ராவிடம் ரகசியமாக வினவினாள். அவள் அதைவிட ரகசியமாக பதில் கொடுத்தாள்.

''அதோ.. அங்கே.. சோபாவின் நடுவில் கால் மேல் கால் போட்டு உட்கார்ந்திருக்காரு பாருங்க.. அவர்தான் மாப்பிள்ளை...''

மாலினி மாப்பிள்ளையைப் பார்க்க.. மாப்பிள்ளையின் பக்கத்தில் அமர்ந்திருந்த பிரபாகரன் அவளைப் பார்த்தான். அவன் விழிகளில் தெரிந்த மின்னலையும் சுவாரஸ்யத் தையும் கண்ட மாலினி அவசரமாய் பார்வையை விலக்கிக் கொண்டாள்.

'கள்ளன்.. என்னமாய் சைட் அடிக்கிறான். என்னவோ இவன்தான் பெண்பார்க்க வந்திருக்கும் மாப்பிள்ளைப் போலவும் நான்தான் இவன் பார்க்க வந்த பெண்ணைப் போலவும் பார்த்து வைக்கிறானே.. இவனை என்ன செய்தால் தேவலாம்..'

காயத்ரியின் காதருகே குனிந்து..

''நீயும் மாப்பிள்ளையைப் பார்த்துக் கொள்..'' என்றாள் மாலினி..

''அதெல்லாம் ஏற்கெனவே அவள் பார்த்த மாப்பிள்ளை தான்..'' பவித்ரா கிசுகிசுத்தாள்.

''பார்த்த மாப்பிள்ளையாக இருந்தாலும்.. இப்போது பார்ப்பதைப் போல ஆகுமா?'' பதிலுக்கு மாலினி கிசுகிசுத்த போதுதான் அதைக் கவனித்தாள்.

பவித்ராவின் பார்வை.. ஷியாம்சுந்தருக்கு அருகே படிந்து மீண்டது. அவள் பார்வை போகும் திசையைப் பார்த்த மாலினி துணுக்குற்றாள்.

ஷியாம்சுந்தரின் இரு பக்கமும் பிரபாகரனும் தினகர னும் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்.

'இவள் யாரைப் பார்க்கிறாள்.. பிரபாகரனையா.. இல்லை தினகரனையா?' மாலினி தவித்துப் போனாள்.



பவித்ரா மீண்டும் ஒரு கள்ளப் பார்வையை வீசி வைக்க.. மாலினிக்கு அங்கே நிற்கவே பிடிக்கவில்லை. நல்லவேளையாக காயத்ரியை அழைத்துக் கொண்டு போகச் சொல்லிவிட்டார்கள். மாலினி நிம்மதியாக காயத்ரி யுடன் திரும்பிவிட்டாள்.

அறையில் அமர்ந்திருந்தபோதும்.. பவித்ரா அடிக்கடி ஹாலை எட்டிப் பார்ப்பதை பார்த்துக் கொண்டிருந்த மாலினிக்கு நேரடியாகவே அவளிடம் 'நீ யாரைப் பார்க் கிறாய்' என்று கேட்டுவிடலாமா என்று தோன்றியது. அடுத்த கணம் இந்த அளவிற்கா தான் பிரபாகரனால் பாதிக்கப் பட்டிருக்கிறோம் என்ற நினைவு தோன்ற.. திடுக்கிட்டுப் போனாள்.

'ஊஹூம்.. இது சரியில்லை. சதா அவனை நினைத்துக் கொண்டே இருக்காமல் உருப்படியாய் எதையாவது செய்ய வேண்டும்...'

இவ்வாறு நினைத்துக்கொண்டே எழுந்து... ஹாலை எட்டிப் பார்த்தாள். அவள் பார்க்கும் அதே சமயம் பார்த்துத் தானா அவனும் திரும்பிப் பார்த்து வைக்க வேண்டும்.

அவன் திரும்பி அவளது பார்வையைச் சந்தித்தான். அதே ரசனையான பார்வை. கன்னம் சிவக்க.. உடல் சூடேற.. அவசரமாக காயத்ரியின் பக்கத்தில் வந்து அமர்ந்து கொண்டாள் மாலினி.

'இதுதான் நீ செய்யும் உருப்படியான வேலையா?' அவள் மனம் கேலியாய் சிரித்தது.

பவித்ராவின் பார்வையும் நிற்கவில்லை. பிரபாகரன், மாலினியைப் பார்ப்பதையும் நிறுத்தவில்லை. இரண்டு வேறுபட்ட பார்வைகளும் இருவேறுபட்ட உணர்வுகளை மாலினிக்கு கொடுக்க, அவள் களைத்துப் போனாள்.

இரவு விருந்து ஆரம்பமாகி நடந்து கொண்டிருந்தது. அவள் தோட்டத்துப் பக்கம் கூட்டத்திலிருந்து விலகி தனிமையை நாடிச் சென்றாள். அங்கே ஏற்கெனவே நின்றுகொண்டிருந்த பவித்ராவைக் கண்டதும் மாலினி தயங்கி நின்றாள். பவித்ரா வாசல் பக்கமாகப் பார்த்தாள். மாலினியும் அந்தப் பக்கமாக பார்த்தாள். பிரபாகரன்.. தினகரனுடன் பேசிக் கொண்டு நின்றிருந்தான்.

'இவள் யாரை இப்படி ஒளிந்து நின்று பார்க்கிறாள்?'

மாலினி திரும்பிவிடலாமா என்று யோசித்தாள். அதே கணம் தற்செயலாகத் திரும்பிய பவித்ரா, மாலினியைப் பார்த்துவிட்டாள். அகப்பட்டுக் கொண்ட பாவனை முகத்தில் தெரிய, தடுமாற்றமாய் பேசினாள்.

''மா.. மா.. மாலினி.. நான் சும்மா காற்று வாங்க வந்தேன். நீங்க எதுக்கு வந்தீங்க.. ஹி.. ஹி..''

''நீங்க வாங்கும் காற்றை நானும் கொஞ்சம் வாங்கிப் போகலாமுன்னு நினைத்துத்தான் வந்தேன். காற்று சிலு சிலுன்னு வீசுதில்ல?''

''ஆமாமாம்.. நிற்கறீங்களே.. கால் வலிக்கப்போகுது. உட்காருங்க...''

பவித்ரா வாசலைப் பார்த்தவாறே கூற.. இது வேலைக்கு ஆகாது என்று நினைத்துக் கொண்டாள் மாலினி.

'இவள் என் முன்னாலேயே இப்படி பருகு பருகுன்னு பார்த்து வைத்தால் எனக்கு பிபி ஏறாதா?'

''எனக்குத்தான் கால் இருக்கிறதா.. உங்களுக்கு இல்லையா?''

''இருக்கிறதே..''



அபத்தமாய் பேசுவதை உணராதவளாக அவசரமாக பேசினாள் பவித்ரா. மாலினிக்கு சிரிப்பு வந்தது. 'காதல்' எவ்வளவு பெரிய ஆளையும் முட்டாளாக்கிவிடும் தன்மை கொண்டது என்பதை அவள் அறியாதவளா என்ன?

''ஏன் சிரிக்கிறீங்க?'' புரியாமல் வினாவினாள் பவித்ரா..

''எனக்கு கால் வலித்தால் உங்களுக்கும் வலிக்காதா?''

''வலிக்கும்தான்...''

''அப்போ.. நீங்களும் உட்கார வேண்டியதுதானே...''

''நானா?''

''நீங்களேதான்.. உட்காருங்க..''

அவள் தயக்கத்துடன் மாலினியின் அருகில் அமர்ந்தாள். அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்தும் வாசலைப் பார்க்க முடிவதை அறிந்ததும் பவித்ராவின் முகம் பிரகாசமடைந்ததைக் கவனித்தாள் மாலினி.

'இவள் யாரைத்தான் பார்க்கிறாள்..'

இதைத் தெரிந்துகொள்ளாவிட்டால் இரவில் தூக்கம் வந்து தொலைக்காது என்று தோன்றிவிட.. பேசாமல் பவித்ராவிடமே அதைக் கேட்டுவிடலாம் என்ற முடிவுக்கு வந்தாள் மாலினி.

அவள் வாய் திறக்கப் போகையில்.. அவ்வளவு நேரமாக அவள் மனத்தை உறுத்திக் கொண்டிருந்த கேள்விக்கு விடை தெரிந்துவிட்டது.

பிரபாகரனுடன் பேசிக்கொண்டிருந்த தினகரன் வீட்டை நோக்கிப் போக.. பவித்ராவின் பார்வை அவனைத் தொடர்ந்தது.



*நீ திரும்பும் திசையெல்லாம்...*
*என் பார்வையும் திரும்பும் நிலையை...*
*என்னவென்று நான் சொல்ல...?*

'இவள் தினகரனை விரும்புகிறாள்...'

மாலினிக்கு மனதிற்குள் மத்தாப்பூ மலர்ந்தது. பவித்ராவைப் பார்த்த நொடியிலேயே அவளை மாலினிக்குப் பிடித்துவிட்டது. ஸ்வேதாவின் குடும்பத்தில் இப்படி ஒரு மென்மையான பெண்ணா.. என்று ஆச்சரியப்பட்டுப் போனாள்.

அப்படிப்பட்ட பெண்ணின் மனதில் இருப்பது பிரபாகரனாக இருக்கக்கூடாது என்று மாலினி மனதிற்குள் தவித்துப் போயிருந்தாள்.

இன்னும் பிரபாகரன் எதையும் உறுதியாகக் கூறிவிடவில்லை. மாலினியும் அவனை எதையும் கூற விடவில்லை. இருந்தாலும் மனதில் ஒரு மூலையில் அவன்மேல் ஓர் உரிமை உணர்வு ஏற்பட்டுப் போனதை அவளால் மறுக்க முடியவில்லை.

ஸ்வேதாவும்தான் பிரபாகரனைப் பார்த்தாள். எனினும், அவளது பார்வை வேறு.. பவித்ராவின் பார்வை வேறு.

ஸ்வேதாவின் பார்வை கணக்குப் போடும் பார்வை. திசை மாறும் பார்வை. எந்த நேரம் அவள் பிரபாகரனைப் பார்ப்பாள்.. எந்த நேரம் தினகரனைப் பார்ப்பாள் என்று யாராலும் சொல்ல முடியாது. அன்று அவள் அந்த இருவரையும் விட்டு விட்டு வீட்டுக்கு வந்திருந்த விருந்தினர்கள் சிலர் மீது பார்வையைப் படர விட்டுக் கொண்டிருந்தாள்.



பவித்ராவின் பார்வை காதல்வயப்பட்ட பார்வை. ஒன்றிலேயே நிலைத்து நிற்கும் பார்வை. அவள் மனம் பிரபாகரனின் மீது இருந்திருந்தால்.. அதை மாலினியால் தாங்கிக் கொள்ள முடியாமல் போயிருக்கும்.

அந்த மன வேதனையை அவளுக்கு பவித்ரா கொடுக்கவில்லை என்பதனாலேயே பவித்ராவின் மீது மாலினிக்கு அன்பு பெருகியது. அவள் கனிவுடன் பவித்ராவைப் பார்த்தாள்.

''மெல்ல பவித்ரா.. கண் வலிக்கப் போகிறது...''

மாலினி கேலியாகக் கூறியவுடன்.. பவித்ரா சட்டென்று தன் பார்வையை விலக்கிக் கொண்டாள்.

தான் தினகரனைப் பார்த்துக்கொண்டிருந்ததை மாலினி கண்டுபிடித்துவிட்டாள் என்பதை உணர்ந்து கொண்டவளாக நாக்கைக் கடித்துக் கொண்டு லேசாக தலையைக் குனிந்து கொண்டாள் பவித்ரா.

''பவித்ரா..'' மாலினி மென்மையாக அவளை அழைத்தாள். அந்த அழைப்பில் இருந்த தோழமையும் அன்பும் பவித்ராவின் மனதை வருடிக் கொடுத்தன.

''ம்ம்ம்...'' என்றாள் அவள்.

''நீங்க தினகரனை விரும்புகிறீர்களா?'' மாலினி நேரடியாகவே இதைக் கேட்டுவிட்டாள்.

பவித்ரா இந்த நேரடிக் கேள்வியை எதிர்பார்த்திருக்கவில்லை என்பது அவள் பதற்றத்துடன் மாலினியை நிமிர்ந்து பார்த்த விதத்தில் இருந்து தெரிந்தது.

''ஏன் அப்படிக் கேட்கறீங்க?''

''வெயிட்.. வெயிட்.. எதற்காக இந்தப் பதற்றம் பவித்ரா? என்னை உங்க ஃப்ரெண்டாக நினைத்துக்கங்க..''

''மாலினி...''

பவித்ரா தயங்கினாள். மனதில் ஒளித்து வைத்திருக்கும் காதல் உணர்வை. யாரிடமாவது பகிர்ந்துகொள்ள வேண்டும் என்று அவளுக்கும் தவிப்பாக இருந்தது.

மனதை பாரமாக அழுத்தும் காதலின் கனம் தாங்காமல் அவள் தனக்குள் புதைந்துகொண்டிருந்தாள். வீட்டிலிருக்கும் பெரியவர்கள் முடிவு பண்ணாமல் தானே ஒருவனை மனதில் வரித்துக் கொள்வதா என்ற சங்கடம். அதை வீட்டிலிருப்பவர்கள் எப்படி எடுத்துக் கொள்வார்களோ என்ற அச்சம். இதை எல்லாவற்றையும் தாண்டிய நாணம்..

அவை அனைத்தும் ஒன்றுசேர அவள் வார்த்தைகள் வராமல் தடுமாறினாள். மாலினிக்கு அவளுடைய தவிப்பை புரிந்துகொள்ள முடிந்தது. இனம் இனத்தை அறியும்தானே. காதல் உணர்வுகள் தரும் கனத்தை அந்த ஆறு மாதங்களாக அவள் அனுபவித்துக் கொண்டிருந்தவள்தானே. அதனால் இதமான ஒரு புன்னகையை பவித்ராவை நோக்கி வீசினாள் மாலினி.

''சொல்லுங்க பவித்ரா..''

''இதைச் சொல்ல எனக்கு தயக்கமாக இருக்கிறது மாலினி...''

''என்னை உங்க ஃப்ரெண்டாக நினைத்துக்கங்கன்னு இப்போதுதானே சொன்னேன்... ஃப்ரெண்டிடம் போய் யாராவது தயங்குவார்களா? சும்மா சொல்லுங்க..''

''எனக்கு விவரம் தெரிந்த நாளில் இருந்து அவர் மேல்தான் இஷ்டம்..''

'நீ எவர்னு பெயரைச் சொல்லாவிட்டால் எனக்குக் கஷ்டம்..' மாலினி நகம் கடித்தாள்.

''அவர் மேல் எனக்கு கொள்ளைப் பிரியம்...''



''இன்னும் காதலிக்கும் ஆளின் பெயரை நீ சொல்லவில்லையே..''

அது தினகரன்தான் என்பது தெளிவாகத் தெரிந்தாலும் அதை பவித்ராவின் வாய்மொழியில் கேட்டுவிட்டால் மனம் நிம்மதியாக இருக்குமே என்று மாலினி தவித்தாள்.

''அவர்னா யாரு பவித்ரா?''

''அவர்தான்.. தினா அத்தான்..''

பவித்ரா முகம் சிவக்க கைகளால் முகத்தை மூடிக் கொண்டாள். மாலினியின் மனதில் அந்த பவித்ரமான பெண்ணின் மீது அன்பு பெருகியது.

''காதலைச் சொல்ல இவ்வளவு வெட்கமா பவித்ரா?''

மாலினி.. பவித்ராவின் கரம் விலக்கி அவள் முகம் பார்த்தாள். அவளோ கெஞ்சுதலாக மாலினியைப் பார்த்தாள்..

''ப்ளீஸ், மாலினி.. இதை யாரிடமும் சொல்லிவிடாதீங்க..''

''நிச்சயமாய் சொல்ல மாட்டேன். ஆனால் பவித்ரா.. இதை ஏன் மறைக்க வேண்டும்.. தினகரன் உங்களுக்கு அத்தை மகன்தானே? ஸ்வேதாவிற்கு இருக்கும் உரிமை உங்களுக்கும் உண்டுதானே?''

''ஸ்வேதா வேறு... நான் வேறு மாலினி..'

''அது எனக்குத் தெரியாதா?''

''அவளைப் போல வெளிப்படையாய் எதையும் பேச எனக்கு வராது...''

''ரொம்ப நல்ல பழக்கம். நீங்க இப்படியே இருங்க..''

''மாலினி.. எங்கள் வீட்டுப் பெரியவர்கள் கண்டிப்பானவர்கள்..''

''பெரியவங்கன்னு சொன்னாலே கண்டிப்புன்னு தானே அர்த்தம்...''

''ஸ்வேதாவிற்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை...''

''அதுதான் இங்கே நிறைய பேருக்கு பெருங்கவலை யாக இருக்கிறது..''

மாலினி இதைச் சொல்லிய விதத்தில் பவித்ரா வாய்விட்டுச் சிரித்து விட்டாள்.

''இந்த அளவுக்கு ஸ்வேதாவின் கல்யாணக் கவலை உங்களுக்குக்கெல்லாம் இருக்கிறதா?''

''அதையேன் கேட்கறீங்க.. அதைப் பற்றி பேச ஆரம் பித்தால் விடிந்துவிடும்..''

''வேண்டாம்.. வேண்டாம். நாம் வேறு பேசலாம்..''

''சரியாச் சொன்னீங்க போங்க. இன்றைக்கு வீட்டில விசேஷம்.. மனசெல்லாம் சந்தோஷம் நிறைஞ்சிருக்கு. நாம் வேறு தோட்டத்தில் உட்கார்ந்திருக்கோம். குளிர்ந்த காற்று அடிக்குது. உங்க காதலைப் பற்றி வேறு பேசிக் கொண் டிருக்கிறோம். இந்த நேரத்தில் போய் ஸ்வேதாவின் பேச்சை பேசினால் நம்மைப் போல வடிகட்டின முட்டாள் கள் வேறு யாரும் இல்லை..''

பவித்ரா திரும்பவும் சிரித்தாள்.

''நீங்க நல்லாப் பேசறீங்க மாலினி..''

''நீங்க ஒரு ஆள்தான் பாக்கியிருந்தீங்க. நீங்களும் இதைச் சொல்லிட்டீங்களா..''

''அப்போ இதுக்கு முன்னாலே நிறையப் பேரு இதைச் சொல்லியிருக்காங்கன்னு சொல்லுங்க..''

''ஊரே சொல்லியாச்சு..''



பவித்ரா இப்போது அதிகமாகவே சிரித்தாள்.

''ஹைய்யா.. உங்ககூடப் பேசினால் வயிற்றை வலிக்க வைத்து விடறீங்களே..''

''இது என்னங்க இப்படி ஒரு பழியைத் தூக்கி என் மேல போடறீங்க.. உங்க வயிற்றை நான் என்ன செய்தேன்?''

''இப்படிச் சிரிக்க வைக்கறீங்களே.. எனக்கு வயிற்றை வலிக்காதா?''

''ஈஸிட்.. என்னிடம் பேசினால் உங்களுக்கு அவ்வ ளவு சிரிப்பு வருகிறதா? என்னால் நம்பவே முடியலையே..''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''என்னுடன் பேசினால் ஸ்வேதாவிற்கு எரியுமே.. அவள் என்னிடம் சிரித்துப் பேசியதே இல்லை...''

''உங்களிடம் மட்டும் இல்லை மாலினி.. அவள் யாரிடமும் கணக்காகத்தான் பேசுவாள். சிரித்துப் பேச மாட்டாள்..''

''உங்களுடைய அத்தான்களிடம் மட்டும் சிரிக்கி றாளே...''

''நான்தான் அவள் கணக்காய் பேசுவாள்னு சொன் னேனே..''

''ஓ.. நீங்க கணக்கு பண்ணுகிற கணக்கைச் சொன் னீங்களா பவித்ரா.. உங்களை என்னவோன்னு நினைத் தேன்.. நீங்க பயங்கரமான விவரம்தான். பிழைத்துக் கொள் வீங்க..''

''என் தினா அத்தானுடன் பிழைப்பேனா மாலினி?''

பவித்ராவின் குரலில் தெரிந்த ஏக்கத்தைக் கண்டு மாலினியின் மனம் உருகியது. இப்படிப்பட்ட வார்த்தை களைச் சொல்லும் இவள் மனதில் காதல் எவ்வளவு ஆழ மாக இருக்க வேண்டும்.

''ஏன் பிழைக்க மாட்டீர்கள் பவித்ரா.. நன்றாக பிழைப் பீர்கள். தினகரனுக்கு உங்களைவிடப் பொருத்தமான பெண் வேறு யார் இருக்கிறாங்க. நீங்கதான் அவருக்கு சரியான ஜோடி..''

மாலினியின் வார்த்தைகளைக் கேட்ட பவித்ராவின் முகம் மலர்ந்துவிட்டது. அவள் மாலினியின் கையை இறுக்கிப் பிடித்துக் கொண்டாள்.

''நிஜமாகத்தான் சொல்கிறீங்களா மாலினி...''

''பொய்யாய் பேச எனக்குத் தெரியாது பவி...''

''பவின்னா என்னைச் சொன்னீங்க?''

'ஆமாம்.. நாம ஃப்ரெண்ட்ஸ்தானே.. ஃப்ரெண்ட்ஸ் பெயரைச் சுருக்கிக் கூப்பிட்டுக் கொள்வது சகஜம்தான் பவி..''

''எல்லாம் சரிதான் மாலு.. ஃப்ரெண்ட்ஸ் ஒருத்தரை யொருத்தர் வாங்க போங்கன்னு கூப்பிட்டுக்குவாங்களா?''

''இனிமேல் அப்படிக் கூப்பிட மாட்டேன் பவி...''

''நானும் உன்னை அப்படிக் கூப்பிட மாட்டேன் மாலு...''

அவர்கள் இருவரும் கையைப் பிடித்துக் கொண்டு சிரித்தனர். அந்தச் சிரிப்பில் தெரிந்த அந்நியோன்யத்தை நினைத்து மனதிற்குள் வியந்துபோனாள் மாலினி.

அன்று மாலையில்தான் பவித்ரா அவளுக்கு அறிமுக மானாள். அதற்குள் அவளுடன் காலம் காலமாய் பழகி யதைப் போன்றதொரு உணர்வு எப்படி வந்தது என்று ஆச்சரியத்துடன் நினைத்துக் கொண்டாள். மாலினி மனதிற் குள் நினைத்ததை பவித்ரா வாய்விட்டுச் சொன்னாள்.

''உன்னை இன்னிக்குத்தான் மீட் பண்ணியதைப் போல எனக்குத் தோணவேயில்லை மாலினி. என்னவோ காலம் காலமாய் நாம் பழகியதைப் போலத் தோணுது..''



''எனக்கும் அப்படித்தான் இருக்கு பவி...''

''நாம் என்றைக்குமே இதே நட்போடு இருக்கணும் மாலினி...''

''நிச்சயமாய் இருப்போம்..''

தினகரன் வீட்டுக்குள் செல்வதைப் பார்த்த பவித்ரா இருப்புக் கொள்ளாமல் எழுந்து கொள்ள.. மாலினி புரிந்து கொண்ட பாவனையில் தலையசைத்தாள்.

''ஸாரி மாலினி.. நான் இங்கே இருக்கும் இந்த இரண்டு நாள்களில்தான் அவரைப் பார்த்துக் கொள்ள முடியும்..''

''இதுக்கப்புறம் என்ன செய்வாய்?''

''இந்த நாள்களில் பார்த்ததை நினைவில் வைத்துக் கொண்டு மீதி நாள்களை ஓட்டுவேன்..''

அவள் இயல்பாக கூறிவிட்டுப் புன்னகைத்தாள். அந்த வார்த்தைகளில் தொனித்த காதலை மாலினியால் புரிந்து கொள்ள முடிந்தது.

பிரபாகரனை பார்ப்பதில் உண்டாகும் இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருப்பவளுக்கு அது புரியாமல் போகுமா?

வீட்டுக்குள்ளிருந்து விருந்தினர்கள் தோட்டத்துப் பக்கம் வர ஆரம்பிக்க.. மாலினி அவசரமாக அந்த இடத்தை விட்டு அகன்றாள். ஏனோ அறைக்குள் சென்று படுத்துத் தூங்க அவளால் முடியவில்லை.. மாடி ஹாலிலும் கூட்டம் இருக்க, மாலினி தனிமையை நாடி மொட்டை மாடிக்குச் செல்லும் படிகளில் ஏறினாள். எங்கோ தொலைதூரத்தில் பாட்டுச் சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. யாரோ இந்த நேரத்தில் எஃப்.எம். கேட்கிறார்கள் என்ற நினைவுடன் அவள் மாடியில் கால் பதிந்தாள்.



*உன் உதட்டோர சுழிப்பில்*
*என் உயிர் சிக்கித் தவிப்பதை*
*என்னவென்று நான் சொல்ல..?*

நிலா வெளிச்சம் மொட்டை மாடியில் பரவியிருந்தது. மாலினி அதை ரசித்தவாறு மொட்டை மாடியின் கைப்பிடி சுவரருகே நின்று கீழே பார்த்தாள்.. வீட்டின் முன்பக்கமும் தோட்டமும் சாலையும் தெளிவாகத் தெரிந்தன.

அப்படியே சுவரில் சாய்ந்து நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவளின் காதோரம் அந்த குரல் கேட்டது.

''என்னைப் பார்க்கத்தானே இங்கே வந்தாய்?''

திடீரென்று காதோரம் அந்தக் குரல் ஒலித்ததால் உடல் தூக்கிப் போட்டாலும் அந்தக் குரலை இனம் கண்டு கொண்ட மாலினி ஆனந்தத்துடன் திரும்பினாள்.

கைகளை முன்புறம் மடித்துக் கட்டியவாறு பட்டு வேட்டி பட்டுச் சட்டையில் மாப்பிள்ளையைப் போல கம்பீரமான அழகுடன் பிரபாகரன் நின்றுகொண்டிருந்தான்.

''அடேங்கப்பா.. நினைப்புத்தான் உங்களுக்கு..'' அவள் குரல் துள்ளியது.

''ஏன்.. நான் நினைக்கக் கூடாதா.. இல்லை.. நினைத் தால்தான் ஆகாதா?'' அவன் அமர்த்தலாகக் கேட்டான்.

''ஆகும்.. ஆகும்.. இவரைப் பார்க்க மொட்டை மாடிக்கு நான் தேடி வருகிறேனாம். இவர் இங்கிருப்பார்னு எனக்கு ஜோஸியமா தெரியும்?''



''இத்தனை நேரமும் நான் உன்னைப் பார்த்துக் கொண்டிருந்ததை நீ பார்க்காமலா இருந்திருப்பாய்?''

''என்னைப் பார்த்தீங்களா?''

''ஆமாம்.. இவ்வளவு நேரமும் நீயும் பவித்ராவும் என்னவோ நீண்ட நாள் சிநேகிதிகளைப் போல கொஞ்சிக் குழாவிக் கொண்டிருந்தீங்களே..''

''வேவு பார்த்தீங்களா?''

''அப்படித்தான் வைத்துக்க. அது என்ன.. எல்லோ ரிடமும் ஒரு வினாடியில் பழகிவிடுகிறாய். என்னை மட்டும் கண்டுகொள்ளவே மாட்டேன்கிறாயே...''

மாலினிக்கு வெட்கமாகிவிட்டது. இவன் ஒருவன்.. மனதில் நினைப்பதை பேசி வைத்துவிடுவான். மாலினி பெண்.. இவனைப் போலப் பேச முடியுமா?

ஒரு வார்த்தைகூட இது நாள் வரை காதலை வெளிப் படுத்தி பிரபாகரன் பேசாதபோது மாலினி எந்த உரிமையில் அவனுடன் காதல் பேச்சை பேச முடியும்?

உணர்வால் அறிந்தது ஒன்றை மட்டுமே வைத்துக் கொண்டு பிரபாகரனிடம் நெருக்கத்தைக் காட்ட மாலினி யால் முடியவில்லை.

''உங்களைக் கண்டுகொள்ளும் அளவிற்கு நான் பெரிய ஆள் இல்லையே. அதோடு உங்களைக் கண்டு கொள்ள ஊர்.. உறவு.. சொந்தபந்தம்னு உங்களுக்கு ஆயிரம் ஜனங்கள் இருக்கிறாங்களே..'' என்றாள் மாலினி.

''ஆயிரம் கோடி ஜனங்கள் இருந்தாலும்.. உன்னைப் போல ஆகுமா? யாரைப் பற்றியும் எனக்கு நினைவில்லை. எனக்கு வேண்டியது நீதான். நீ மட்டும்தான்..'' என்று பிரபாகரன் சொன்னான்.

இதை எப்படி எடுத்துக் கொள்வது என்று புரியாமல் மாலினி திகைத்தாள். இப்போதும் அவன் வெளிப்படையாய் எதையும் சொல்லிவிடவில்லையே.

''புரியவில்லை..''

''உனக்கா புரியாது?''

''எனக்குப் புரியாததும் நிறைய உண்டு அத்தான்..''

''உதாரணத்துக்கு ஒன்று சொல் பார்க்கலாம்...''

''நீங்களே ஒரு சிறந்த உதாரணம்தான்...''

பேசிக்கொண்டே பிரபாகரன் அவளருகில் வர.. மாலினி பின்னால் நகர்ந்தாள். அவன் நிற்காமல் அவளை நெருங்க.. அவள் பின்வாங்கி மொட்டை மாடியின் மையப் பகுதியிலிருந்த படிக்கட்டு அமைக்கப்பட்டிருந்த அறையின் பக்க சுவரில் சாய்ந்து நின்றுவிட்டாள்.

அதற்கு மேல் பின்வாங்க முடியாமல் அவள் அகப்பட்டுக் கொண்டதை உணர்ந்தவனாக பிரபாகரன் நகைத்தான்.

மாலினி நகர்ந்துகொள்ள முடியாமல் அவளுக்கு இரு பக்கமும் தன் இரு கைகளையும் நீட்டி.. சுவர் மீது பதித்து நின்ற பிரபாகரன், தனது கைகளுக்குள் சிறைப்பட்டிருந்த மாலினியிடம் ஆழ்ந்த குரலில் வினவினான்.

''சொல் மாலினி.. நான் உனக்குப் புரியாத புதிரா?''

மாலினி பேச்சிழந்தாள். வார்த்தைக்கு வார்த்தை அவனுடன் வாயாடிய மாலினி காணாமல் போய்.. பேச வார்த்தைகள் வராமல் தவித்துக்கொண்டிருந்த மாலினி அவன் முன்னால் நின்றாள்..

''வழியை விடுங்கத்தான்..''

''எதற்கு வழிவிடச் சொல்கிறாய்?''

''நான் போகவேண்டும்..''



''எங்கே போகப் போகிறாய்?''

''என் ரூமிற்குப் போக வேண்டும்..''

''அங்கே போய் என்ன செய்யப் போகிறாய்?''

''இது என்ன அத்தான் கேள்வி.. தூங்கப் போகிறேன்..''

''உனக்கு தூக்கம் வந்துவிடுமா?''

பிரபாகரனின் குரலில் கேலி இருந்தது. அவனது வார்த்தைகளில் இருந்த உண்மையை உணர்ந்தவளாக உதட்டைக் கடித்துக் கொண்டு பேசாமல் நின்றாள் மாலினி.

தூக்கம் வருமா.. எப்படி வரும்? இந்த அளவு அண்மையை இதற்கு முன் உணர்த்தாதவன் இப்போது அவனது மூச்சுக்காற்று அவள் மீது பட்டுக் கொண்டிருக்க நெருங்கி நிற்கிறான்.

ஒன்றை உணர்ந்தாள் மாலினி. அவனது மூச்சுக்காற்று அவள் மேல் பட்டது. அவன் மேலிருந்து வந்த இதமான நறுமணம் அவளது நாசியைத் தொட்டது. ஆனால், அவனது விரல்கூட அவள் மேல் படவில்லை. மறந்தும் அவன் அவளைத் தொடவில்லை.

அவளால் அசைய முடியவில்லை. அசைந்தால் அவன் மேல் அவள் பட்டுவிடுவாள். அந்த இரும்பு மனிதனின் திட்டம் அவளுக்குத் தெளிவாக விளங்கியது. அவனாக அவளைத் தொடாமல் அவளை வேறுவழியின்றி அவனைத் தொட வைக்கும் திட்டம்.

'யார் இவன்.. பொல்லாத ஆளாச்சே.. இவன் என்னைத் தொடமாட்டானாம். ஆனால், என்னை மட்டும் இவனைத் தொட வைப்பானாம். பலே கில்லாடிதான்..' அவள் மனதிற்குள் அவனின் அடாவடித்தனத்தை ரசித்தாள்.

''எனக்கு ஏன் தூக்கம் வராது.. அதெல்லாம் வரும்..''

''நிஜமாகவா சொல்கிறாய்?''

''ஆமாம்..''

''எங்கே.. என் தலைமேல் அடித்துச் சொல்லு..''

மாலினி செய்வதறியாதவளாக மௌனித்தாள். அவனுக்கு அந்தச் சாக்கிலாவது அவளைத் தொட வைக்க வேண்டும் என்ற எண்ணம் இருப்பது அவளுக்குப் புரிந்தது.

''என்ன மேடம்.. பதிலைக் காணோம்..''

''அத்தான்.. ப்ளீஸ்.. என்னை விட்டுவிடுங்க..''

''நான் என்னவோ உன்னைக் கட்டிப்பிடித்துக் கொண்டு நிற்பதைப் போல இல்ல நீ பேசுகிறாய். என் விரலாவது உன் மீது பட்டிருக்கிறதா..''

''ஆஹாஹா.. பெரிய அடக்கமான மனிதர்தான்..''

''பின்னே இல்லையா?''

''எவ்வளவு நேரம் இப்படியே நிற்பீங்க?''

''விடியும் வரை..''

''என்னது.. விடியும் வரையா?''

மாலினிக்கு திகில் பிடித்துக் கொண்டது. அவன் பேச்சைப் பார்த்தால் அவன் சொன்னதைச் செய்துவிடுவான் என்று தோன்ற, மாலினி அவனிடம் கெஞ்ச ஆரம்பித்தாள்.

''அத்தான் ப்ளீஸ்...''

''எதுக்கு ப்ளீஸ் போடுகிறாய்..''

''நகர்ந்துக்கங்க..''

''முடியாது...''

''சொன்னா கேளுங்க..''

''கேட்க மாட்டேன்..''

அவன் பிடிவாதமாக மறுக்க.. அவள் வேறுவழி தெரியாமல், ''இப்போ என்னதான் வேண்டும் உங்களுக்கு?'' என்று அழமாட்டாத குறையாக வினவினாள்.

''நீதான் வேண்டும்..''



''அத்தான்..''

''உன்னை நான் தொடவேண்டும்..''

''ஸ்டாப் திஸ் ப்ளீஸ்..''

''ஏன் நிறுத்தச் சொல்கிறாய்?''

''நீங்கள் பேசுவது உங்களுக்கே நன்றாக இருக்கிறதா?''

''இருக்கிறது..''

''ம்ப்ச்.. வீட்டில் விருந்தாளிகள் வந்திருக்கிறாங்க அத்தான்..''

''வரட்டுமே..''

''அவங்க யாராவது மாடிக்கு வந்துவிட்டால் என்ன செய்வது?''

''வர மாட்டாங்களே..''

''அதை எப்படி அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறீங்க..''

''நான்தான் மொட்டை மாடிக் கதவைத் தாழ்போட்டு விட்டேனே..''

மாலினியை பயம் பிடித்துக் கொண்டது. யாராவது அவளைத் தேடி அறைக்குப் போய் அவள் இல்லையென்று கண்டுபிடித்துவிட்டால் என்ன செய்வது? கூடவே பிரபாகரனும் இல்லையென்று தெரிந்துவிட்டால் எல்லோரும் என்ன நினைத்துக் கொள்வார்கள்.

''நீங்களா அத்தான் இப்படியெல்லாம் செய்கிறீங்க?''

''ஏன்.. நான் இதைச் செய்யக்கூடாதா? நானும் மனிதன் தானே.. என் மனதிலும் ஆசைகள் இருக்கும்தானே..''

''அதற்காக இப்படியா செய்வது.. நீங்கள் மற்றவர்களுக்கு உதாரணமாக இருக்க வேண்டாமா?''

''அதுதான் கொஞ்ச நேரத்துக்கு முன்னால் நீ என்னை உதாரணம் காட்டினாயே..''

''அது வேறு.. இது வேறு அத்தான்..''

''எனக்கு எல்லாம் ஒன்றுதான்..''

பேசிக்கொண்டே அவன் வாய்க்குள் ஏதோ ஓர் பாடலைப் பாடினான். இவன் எந்த நேரத்தில் பாட்டுப் பாடி வைக்கிறான் என்றிருந்தது மாலினிக்கு.

''என்ன பாட்டு?'' என்று கேட்டாள் மாலினி.

''ஒன்றுமில்லை...''

''ஒன்றுமில்லாததைத்தான் நீங்கள் பெரிது பண்ணுகி றீங்களே...''

''மாலினி...''

''ம்ம்ம்...''

''நீ எனக்கொரு தடை விதித்திருக்கிறாய்...''

மாலினி உதட்டைக் கடித்துக் கொண்டு மௌனித்தாள். அதற்காகத்தான் அவளை அவன் சிறைபிடித்து வைத்திருக்கிறான் என்பதை அவள் அறிவாளே.

''அதிலும் உன்மேல் ஆணை வைத்து தடை செய் திருக்கிறாய்..''

''அதனால்?''

''நீ அந்தத் தடையை விலக்கிக் கொண்டால் நானும் என் கைகளை விலக்கிக் கொள்கிறேன்..''

''இல்லாவிட்டால்?''

''நீ தடையை விலக்கும் வரை நானும் விலக மாட் டேன்..''

''நடந்து முடிந்திருப்பது உங்கள் தங்கையின் நிச்சய தார்த்தம்..''

''அது எனக்குத் தெரியாதா?''

''தெரிந்தவர் செய்கிற வேலையா இது? வந்திருக்கிற சொந்தக்காரங்களுக்கு இது தெரிந்தால் என்ன ஆகுமுன்னு கொஞ்சமாவது நீங்க யோசிச்சுப் பார்த்தீங்களா..''



''ஏன் உனக்கு மூளையில்லையா.. நீ யோசித்துப் பார்க்க மாட்டாயா? தடையை விலக்கிக் கொள்ள மாட் டாயா?''

''நான் ஏன் யோசிக்க வேண்டும்? காயத்ரிக்குக் கூடப் பிறந்த அண்ணன்.. அதிலும் பெரிய அண்ணன்.. நீங்கள் தான் யோசிக்க வேண்டும்...''

''இவ்வளவு சுயநலமான பெண்ணா நீ? காயத்ரியின் மேல் உனக்கு அன்பே இல்லையா?''

இப்படிப் பேசுபவனிடம் இல்லையென்று எப்படிப் பொய் சொல்லுவது. அவன் அவளைச் சரியாக கணித்து வைத்திருப்பதை அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. அவளுக்கு நர்மதாவின் மேல் மரியாதையும் காயத்ரியிடம் பிரியமும் உண்டு. அதை அறிந்து வைத்திருந்தவன் அதைக் கொண்டே அவளை மடக்கிவிட்டான்.




*நான் நினைக்கும் நினைவை...*
*நீயும் நினைத்த நிகழ்வை...*
*என்னவென்று நான் சொல்ல..?*

மாலினி மலைத்துப் போய் நின்றுவிட்டாள். அவனது மூச்சுக்காற்று அவள் மேல் பட்டுக் கொண்டிருக்க.. அவ ளுக்குள் ஏதோ ஒன்று நிகழ்ந்துகொண்டிருந்தது.

அக்கம் பக்கம் யாருமில்லாத அந்தத் தனிமையான இரவில் மிக அண்மையில் நின்றுகொண்டிருந்த அவனின் ஆண்மையில் அவள் மயங்கினாள்.

''ஓகே அத்தான்.. நான் என் மேல் வைத்த ஆணையை விலக்கிக் கொள்கிறேன்.. போதுமா..''

அவள் அந்த இடத்தை விட்டு ஓடத் துடித்தாள். தாமதிக்கும் ஒவ்வொரு வினாடியும் அவளது சுயக்கட்டுப்பாடு தளர்வதை உணர்ந்தவளாக மனம் பதறினாள்.

''போதாதே..'' அவன் விடாக்கண்டனாக கூறினான்.

''போதாதா..''

''ஆமாம்... போதாது.. 'என் மேல் ஆணை.. என்னை தொடுங்க அத்தான்'னு சொல்லணும்....''

''ஊஹூம்... நான் அப்படிச் சொல்ல மாட்டேன்..''

''அப்போ நானும் விலக மாட்டேன்..''

அவன் முகம் இப்போது அவளது முகத்திற்கு வெகு அருகாமையில் இருந்தது. அவனது மூச்சுக்காற்றை உணர்ந்தவளின் இதயம் படபடத்தது. இந்த இன்ப அவஸ்தையை இனிமேலும் தாங்க முடியாது என்று தொய்ந்து போனவளாக அவள் மெல்லிய குரலில் அவன் கேட்டதைச் சொன்னாள்.

''அத்தான்..''

''ம்ம்ம்.. மேலே சொல்லு..''

''என் மேல் ஆணை..''

''அப்புறம்..''

''என்னை.. என்னை...''

''ம்ம்ம்.. உன்னை.. உன்னை?''

''தொடுங்க..''

அவள் சட்டென்று சொல்லிவிட்டு கைகளால் முகத்தை மூடிக்கொண்டாள். அதற்காகவே அவளது சொல்லிற்காகவே காத்திருந்த பிரபாகரன்.. அவளைத் தோள் தொட்டு அருகே இழுத்துக் கொண்டான். அவளது கரம் விலக்கி முகம் பார்க்க அவன் முனைய.. அவள் கரம் விலக்க மறுத்தாள்.



''மாலினி..''

''ம்ம்ம்..''

''என்னைப் பார்..''

''மாட்டேன்..''

''ஏய்ய்.. பாருடி..''

அவன் வலுக்கட்டாயமாக அவளது கரம் விலக்கி முகம் பார்க்க.. அவள் வெட்கத்துடன் கண்மூடி அவன் மார்பில் முகம் புதைத்துக் கொண்டாள்.

வார்த்தைகளால் காதல் சொல்லிக் கொள்ளாத அந்தக் காதலர்கள் இருவரும் கட்டித் தழுவிக் கொண்டனர். அவளது கூந்தலில் அவன் முகம் புதைத்து பூவாசம் பிடிக்க.. அவனது முதுகில் கரம் பரப்பி அவன் தோளில் முகம் புதைத்தாள் மாலினி.

அவன் சரிந்து தரையில் அமர்ந்து அவளை இழுத்து மடியில் சரித்துக் கொண்டான். அவனது கழுத்தில் கைகளை மாலையாக்கிக் கொண்டு அவன் மடிமேல் விழுந்தாள் மாலினி. அவளது முகம் நோக்கி குனிந்தவன் அவளது இதழோடு இதழ் பதிக்க.. தன் வசமிழந்து கண்மூடிக் கிறங்கிப் போனாள் மாலினி.

''கடைசியில் ஜெயிச்சுட்டீங்கல்ல..''

''தோற்றுப்போனதில் நீ வருத்தப்பட்டது போல எனக்குத் தெரியவில்லையே..'' அவன் சரஸமாகச் சிரித்தான்.

அவனது பேச்சில் கிளர்ந்தவள்.. அவனது விரலோடு விரல் பிணைத்துக் கொண்டாள்.

''நான் பார்த்தாலும் பார்த்தேன்.. உங்களைப் போல ஒரு அடாவடிக்கார ஆளைப் பார்த்ததே இல்லை..''

''அப்படி என்னடி நான் அடாவடித்தனம் பண்ணி விட்டேன்?''

''ஒன்றுமே பண்ணவில்லையா?''

''இல்லையே.. இப்போது நீ சொல்லவும்தான் ஏதாவது ஒன்றைச் செய்ய வேண்டும் என்ற ஆசை கிளம்புகிறது..''

''ஐயையோ..''

மாலினி பதறி எழ.. அவன் வாய்விட்டுச் சிரித்தபடி.. அவளை எழுந்து கொள்ள விடாமல் அணைத்துக் கொண்டான்.

''மாலினி..'' அவனது தோள் மீது சாய்ந்திருந்தவளின் உச்சந்தலையில் முத்தமிட்டவாறு அவன் மென்மையாக அழைத்தான்.

''ம்ம்ம்..'' அவள் அவன் தோள் மீது முகம் நிமிர்த்தி அவன் முகம் பார்த்தாள்.

''என்ன சொன்னீங்க?''

''ஐ லவ் யூன்னு சொன்னேன்..''

''இதைச் சொல்ல இவ்வளவு நாளா?''

அவளது கேள்வியில் தெரிந்த ஏக்கத்தைப் புரிந்து கொண்டவனாக அவன் அணைப்பை இறுக்கிக் கொண்டு அவளது காதோரமாக பேசினான்.

''சொன்னால்தான் காதலாடி?''

''சொல்லாவிட்டாலும் சில சங்கடங்கள் உண்டு அத்தான். அது பெண்களுக்கு மட்டும் சொந்தமானது. உங்களுக்குச் சொன்னாலும் புரியாது..''

''உன்னைக் கண்டவுடன் பிடித்துவிட்டது. உன்னோடுப் பழகிப் பார்க்க ஆசைப்பட்டேன். உன்னை என்னருகில் என் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொண்டேன். ஆனாலும்கூட நமக்குள் தேவையில்லாத வாக்குவாதம் வந்து நீ என்னைத் தொடக்கூடாதுன்னு சொல்லிவிட்டாய்...''

இதைச் சொல்லும்போது பிரபாகரன் உல்லாசமாக நகைத்துக் கொண்டே அவளது கன்னத்தில் முத்தமிட்டான். அவள் லஜ்ஜையுடன் அவனை நறுக்கென்று கிள்ளினாள்.



''ச்சீய். இது ஒரு பேச்சென்று பேசிக்கொண்டே இருக்கீங்களே.. விடவே மாட்டீங்களா..''

''ஊஹூம்... உன்னைக் கடைசிவரை விடுவதாகவே இல்லை...''

''இதிலொன்றும் குறைச்சல் இல்லை. வாய்தான் உங்களை வாழ வைக்குது போங்க..''

''எங்கேடி போகச் சொல்றே.. ஸ்வேதாகிட்டயா?''

அறியாப் பிள்ளைபோல பிரபாகரன் வினவியவுடன் மாலினிக்கு கோபம் வந்துவிட்டது. அவள் விலக முயன்றாள். அவனுடைய பிடி இரும்புப் பிடியாய் இருந்தது.

''இப்பத்தான் சண்டை முடிந்து சமாதானமாகியிருக்கோம். திரும்பவும் முறைத்துக் கொண்டு போக நினைக்கிறாயே.. நியாயமா?''

''முதலில் என்னை விடுங்க...''

''நீ என்னை விடச் சொல்வதிலேயே குறியாய் இரு. இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு இவ்வளவு கோபப்படுகிற?''

மாலினியின் கன்னத்தோடு கன்னம் வைத்து இழைந்தபடி பிரபாகரன் கூற.. அவளது கோபம் இன்னும் அதிகமாகியது.

'கள்ளன்.. என்னோடு இழைந்து கொண்டு அவள் பெயரைச் சொல்கிறான். இவனை என்ன செய்தால் தகும்?''

''என் மகாராணிக்கு என்னடி யோசனை?''

''என்னைக் கொஞ்சிக் கொண்டே உங்கள் மாமன் மகளை நினைத்துக் கொண்டிருக்கீங்களே. உங்களுக்கு எவ்வளவு நெஞ்சழுத்தம் இருக்க வேண்டும்...''

''நீகூடத்தான் என்னோடு பேசிக் கொண்டிருக்கும் போதே தேவையில்லாமல் அவள் பெயரை இழுப்பே. அப்போ எனக்கு எப்படியிருந்திருக்கும்?'''

"ஓ.. ஹிட்லர் சார்.. அதுக்குப் பழிக்குப் பழி வாங்குறீங்களா?"

"யெஸ்.. மைடியர் ஏஞ்சல்.."

பிரபாகரன் அவளது நெற்றியில் விரலை வைத்து கோடாய் இறக்கி... அவளது மூக்கைத் தொட்டு இதழ்களில் கொண்டு வந்து நிறுத்தினான். மாலினி மயங்கிப் போனாள்.

தொலைதூரத்தில் கேட்டுக் கொண்டிருந்த ரேடியோ சத்தம் சமீபித்தது..

*'தட்டுத் தடுமாறி நெஞ்சம்..*
*கை தொட்டு விளையாடக் கொஞ்சும்..*
*சிட்டு மனிமேனி துள்ளும்..'*

பாட்டுச் சத்தம் கடந்த பின்னாலும் அந்த பாடல் சுட்டியெழுப்பிவிட்ட உணர்வலைகளுடன் கண்மூடிக் கிடந்தாள் மாலினி.

அந்த இரவின் நிசப்தம் கலந்த அமைதியையும் மொட்டை மாடி தந்த தனிமையையும் பிரபாகரனின் காதல் கிடைத்துவிட்ட சந்தோஷத்தையும் அவனது தொடுகை எழுப்பிவிட்ட கிளர்ச்சியையும் இனி எத்தனை இரவுகள் வந்தாலும் மறக்க முடியாது என்று அவளுக்குத் தோன்றியது.

*'நல்ல பொன்னாள் இதுபோலே..*
*வருமோ இனிமேலே..'*

என்றோ கேட்ட, காலத்தால் அழிக்க முடியாத காவியப் பாடல் வரிகள் அவளது மனதில் ஒலித்தது.

அக்கம் பக்கம் ஆளில்லாத அந்தத் தனிமை நீண்டு கொண்டே இருக்க வேண்டும் என்று அவள் மனம் விரும்பியது. அந்த இரவு முடியக்கூடாது.. பொழுது விடியக் கூடாது.. அவன் மடி மீது தலை வைத்து இப்படியே அவள் கதை பேசிக் கொண்டிருக்க வேண்டும். ஆயுள் முழுக்க அவனை விட்டு இமைப்பொழுதுகூட விலகாமல் உறவாட வேண்டும்.



முடியுமா.. அவள் கேட்பது கிடைக்குமா?

உணர்வுகளின் வீச்சைத் தாங்க முடியாதவளாக மாலினி அவனோடு ஒன்றிக் கொண்டாள். அவளது உணர்வுகளைப் போலவே அவனும் உணர்வுக்கு ஆட்பட்டிருப்பது அவளது காதோரமாக ஒலித்த பிரபாகரனின் குரலில் தொனித்த அளவு கடந்த தாபத்திலிருந்து தெரிந்தது.

"காயத்ரியின் கல்யாணம் முன்னால் நிற்கிறது மாலினி. அது மட்டும் இன்றைக்கு நிச்சயமாகியிருக்காவிட்டால் விடிந்தவுடனேயே உன் கழுத்தில் தாலியைக் கட்டிவிடுவேன்.."

அவள் பதில் சொல்லாமல் அவனுக்குள் இன்னும் புதைந்தாள். அவனது தோள் தடவிய கரங்கள் அவளை இறுக்கிக் கொள்ள, அவள் கன்னத்தில் சூடான முத்தம் வைத்தான் பிரபாகரன்.

*'உன் மேல ஆசை வைச்சேன்*
*உத்தமியே மெத்தையுண்டு*
*சத்தியமாச் சொல்லுறேன்டி*
*தங்க ரத்தினமே..*
*தாள முடியாது கன்னே*
*பொன்னு ரத்தினமே..'*

தாள முடியாத தாபத்தை அவளது காதோரமாகப் பாடிய அவனது பாடல் உணர்த்த அவனுடன் உறவாட மனம் துடித்தாள் மாலினி. ஆனால்.. உரிமையில்லாமல் உறவாடக் கூடாதென்று அவளது அறிவு தடுக்க.. உணர்வுக்கும் அறிவுக்கும் இடையே போராடினாள்.

எப்போதுமே அறிவும் உணர்வும் எதிர்மறைத் துருவங்களில்தான் இருக்கும். அறிவை உணர்வு ஜெயித்துவிடக் கூடிய சூழல் உருவாக.. மாலினி சட்டென்று அவனிடமிருந்து விலகி அமர்ந்தாள்.

''ஏன் மாலினி?'' அவன் குரலில் தாபம் தெரிந்தது.

''இல்லை அத்தான்.. நாம் எல்லை மீறிவிடுவோம் போலத் தோன்றுகிறது. கீழே போய்விடலாம்..''

''எல்லை மீறினால்தான் என்ன? உன் கழுத்தில் ஊறிய தாலியைக் கட்டினால்தான் நான் உனக்குப் புருஷனா?''

அந்தக் கேள்விக்கு எப்படிப் பதிலைச் சொல்வது என்று திணறிப் போனாள் மாலினி. அவன் கேட்பதும் நியாயம்தானே. இவ்வளவு நேரமும் அவன் தோள் சாய்ந் திருந்தபோது அவன் வேறு அவள் வேறு என்ற நினைவே அவள் மனதில் எழவில்லையே.''

''இல்லைதான்.. ஆனாலும் அத்தான்.. உங்களுக்கும் எனக்கும் நம் குடும்பத்திற்கு பதில் சொல்ல வேண்டிய கடமை இருக்கிறதே..''

''கடமை.. நான் கடமையைத் தட்டிக் கழிப்பவனல்ல... ஆமாம் தெரியாமல்தான் கேட்கிறேன்.. எனக்காக செய்ய வேண்டிய கடமை எதுவும் உன் மனதில் தோன்றவேயில் லையா?''

அவனது கோபம் புரிந்தவளாக அவள் மெலிதாகச் சிரித்தாள். அந்தப் பெயர் பெற்ற ஜமீன் குடும்பத்தின் மூத்த மகன்.. ஹிட்லர் என்ற பட்டப் பெயரை அவளிடமிருந்து வாங்கிய கண்டிப்பானவன்.. கே.பி. என்று அனைவராலும் ஈரெழுத்தில் அழைக்கப்படும் வி.ஐ.பி.. காதலின் வேகம் தாளாமல் அவளிடம் கோபப்படுகிறான்.

அவளுக்கு அவனது மனம் புரிந்தது. உடனடியாக விலகிப் போனால் அவனது கோபமும் தாபமும் அதிகரிக் கும் என்ற பொறுப்புணர்வு மனதில் எழ.. 'காதலி' என்ற கடமையுடன் அவனை மடிசாய்த்துக் கொண்டாள் மாலினி.






*உன் சிறு கோபம் தனில் நெஞ்சம்..*
*சிக்கித் தவிப்பதையே..*
*என்னவென்று நான் சொல்ல..?*

சொல்லத் தெரியாத கோபத்துடன் படபடத்தான். அவளது மடி மீது சரிந்ததும்.. கோபம் அடங்கிவிட்டதை வியப்புடன் உணர்ந்தான். அவளது அருகாமைக்கு அவ்வளவு சக்தி இருக்கிறதா என்ற ஆச்சரியத்துடன் நில வொளியில் களங்கமில்லாத அழகு தேவதையாக அவனை மடிதாங்கியிருந்தவளைப் பார்த்தான். அவனது பார்வையை உணராதவளாக அவள் காதலுடன் அவன் முடி கோதி அவன் கையை எடுத்து அதில் முத்தமிட்டாள்.

''இது போதுமா?'' என்றான் பிரபாகரன்.

''எல்லாம் போதும்..'' அவள் செல்லமாக அவன் கன்னத்தில் தட்டினாள்.

''ஏண்டி... யானைப் பசியில் இருக்கிறவனுக்கு சோளப் பொரி எப்படிடீ போதும்?''

''நல்ல பிள்ளையில்ல.. சொன்னால் கேட்கணும்..''

''உனக்கு என்மேல் ஆசையே இல்லைடி..''

''எனக்கா ஆசை இல்லை.. அது கடலளவு இருக்கு..''

''சும்மா சொல்லாதே..''

''நிஜமாகத்தான் அத்தான்.. இப்படியே நாம் எங்கேயா வது போய்விடணும்னு தோணுது.. அங்கே நீங்களும் நானும் மட்டும்தான் இருக்க வேண்டும். இருபத்து நான்கு மணி நேரமும் நீங்கள் என்னருகில் இருக்க வேண்டும்...''

''ஏய்ய்.. மாலினி..''

அவன் அவளது கைவிரல்களை நொறுக்கிவிடுவதைப் போல இறுக்கிப் பிடித்துக் கொள்ள.. அவள் கண்மூடி சன்னக் குரலில் பாடினாள்.

*''அக்கம் பக்கம் யாருமில்லா..*
*பூலோகம் வேண்டும்..*
*அந்தி பகல் உன்னருகே..*
*நான் வாழ வேண்டும்..*
*என் ஆசையெல்லாம்..*
*உன் நெருக்கத்திலே..*
*என் ஆயுள் வரை..*
*உன் அணைப்பினிலே..*
*வேறென்ன வேண்டும் உலகத்திலே..*
*இந்த இன்பம் போதும் நெஞ்சினிலே..*
*ஈரேழு ஜென்மம் வாழ்ந்து விட்டேன்...''*

அவனது முகத்தோடு முகம் வைத்துப் பாடியவளின் குரலில் இருந்த காதல் அவனைக் கட்டிப்போட்டது. அவன் கேசத்தில் விரல் நுழைத்து அவன் முடிகோதி தொடர்ந்து பாடினாள் மாலினி.

*''நீ பேசும் வார்த்தைகள் சேகரித்து..*
*செய்வேன்.. அன்பே ஓர் அகராதி..*
*நீ தூங்கும் நேரத்தில் தூங்காமல்*
*பார்ப்பேன் தினம்.. உன் தலைகோதி..*
*காதோரத்தில் எப்போதுமே..*
*உன் மூச்சுக் காற்றின் வெப்பம் சுமப்பேன்..*
*கையோடுதான்.. கைகோர்த்துத்தான்*
*உன் மார்புக் கூட்டில் முகம் புதைப்பேன்.''*

குனிந்து அவன் மார்பில் தலை வைத்துக் கண்மூடிக் கொண்டவளின் முதுகின் மேல் அவனது விரல்கள் படர்ந்து பரவ அவள் சிலிர்த்தாள்.



*''நீயும் நானும் சேருமுன்னே*
*நிழல் சேர்ந்து நடக்கிறதே..*
*நேரம் காலம் தெரியாமல்*
*மனம் இன்று விண்ணில் மிதக்கிறதே..*
*உன்னால் இன்று*
*பெண்ணாகவே நான் பிறந்ததன்*
*அர்த்தங்கள் அறிந்து கொண்டேன்*
*உன் தீண்டலில் என் தேகத்தின்*
*புது ஜன்னல்கள் திறப்பதை*
*தெரிந்து கொண்டேன்..''*

குழைந்து அவனோடு ஒன்றிக்கொண்டவளின் நெற்றியிலே முத்தம் பதித்தான் பிரபாகரன். இருவரும் மௌனமாக எழுந்து கொண்டார்கள். அந்த அருமையான தருணத்திலிருந்து விடுபட்டு அவசர உலகில் நுழையவேண்டிய அவசியத்தை உணர்ந்தவர்களாக மெதுவாக நடந்தார்கள். அவர்கள் இருவரின் மனதிலும் காதல் பொங்கித் ததும்பியதை அவர்கள் இருவருமே உணர்ந்துதான் இருந்தார்கள்.

மொட்டை மாடிக் கதவின் தாழ் விலக்கிய பிரபாகரன் படிகளில் யாரும் இருக்கிறார்களா என்று பார்த்தான். யாருமில்லை என்றவுடன் ஒரு பெருமூச்சுடன் அவளைப் பார்த்து..

''நீ முதலில் இறங்கிப் போய்விடு மாலினி..'' என்று கூறினான்.

''நீங்கள்?'' அவள் தயங்கினாள்.

''எனக்கென்ன.. ஆண்பிள்ளைக்கு.. நான் கொஞ்ச நேரம் கழித்து வருகிறேன். முதலில் நீ போய்விடு. அதுதான் முக்கியம்..''

அவளைப் பற்றிய அக்கறை தொனித்த அந்த வார்த்தைகளைக் கேட்ட மாலினிக்கு பரவசமாக இருந்தது.

அவள் படிகளில் இறங்க காலடி வைத்தபோது.. ஆழ்ந்த குரலில்..

''மாலினி..'' என்று அழைத்தான் பிரபாகரன்.

''ம்ம்ம்..'' அவள் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

''இந்த ராத்திரியை இனி வரும் நாள்களில் எப்போதுமே நான் மறக்காமல் நினைவில் வைத்திருப்பேன்..''

''நானும்தான்..''

''போய் வா..''

''ம்ம்ம்..''

''குட் நைட்..''

''குட் நைட்..''

அடுத்த நொடியில் அவள் நிற்காமல் மான் போல படிகளில் தாவி இறங்கி ஓடினாள். இன்னும் ஒரு கணம் அங்கே தாமதித்தாலும் பிரபாகரனுடன் கலந்துவிடுவோம் என்ற பயம் வந்து மாலினியை ஆக்கிரமிக்க.. சிறைபடுத்தும் காதல் உணர்விலிருந்து தப்பிக்க அவளது அறையைத் தேடி ஓடினாள் அவள்... ஓடியவள் எதிரே வந்துகொண்டிருந்த ஸ்வேதாவின் மீது மோதிவிட.. அவள்..

''ஏய்.. என்ன இது.. கண்மண் தெரியாமல் இப்படி ஓடி வருகிறாயே.. பேய் துரத்துகிறதா?'' என்றாள்.

'போயும் போயும் இவள் மீதுதானா நான் மோதித் தொலைக்க வேண்டும்...' என்று மனதிற்குள் நொந்தபடி பதில் பேசாமல் நகர முயன்றாள் மாலினி.

''கேட்ட கேள்விக்கு பதில் சொல்லாமல் போனால் எப்படி.. அது சரி.. நீ எப்படி என் கேள்விக்குப் பதிலைச் சொல்ல முடியும். நீயே பேய். உன்னைப் போய் இன்னொரு பேய் துரத்த முடியுமா? ஹா.. ஹா..'' என்று தன் நகைச்சுவையை தானே ரசித்து ஸ்வேதா சிரிக்க ஆரம்பிக்கவும், மாலினிக்கு பற்றிக் கொண்டு வந்தது. அவள் நின்று



நிதானமாக ஸ்வேதாவை ஏற இறங்க அளவிடும் பார்வை ஒன்றைப் பார்த்து வைத்தாள்.

''என்ன அப்படிப் பார்க்கிற?'' இகழ்ச்சியாக கேட்டாள் ஸ்வேதா.

''இல்லை.. உனக்கு காலிருக்கான்னு பார்க்கிறேன்..'' நிதானமாக பதிலைச் சொன்னாள் மாலினி.

''என்ன சொன்ன.. ஏன் அப்படிச் சொன்ன?''

''பின்னே.. பேயைப் பற்றியே பேசுகிறாயே.. மனுஷியாக இருந்தால் எப்போதும் பேயின் நினைவு இருக்காதே. அதுதான் அப்படிப் பார்த்தேன்..''

''யாரிடம் பேசுகிறாய் என்பதை நினைவில் வைத்துப் பேசு..''

''உன்னையெல்லாம் என்னால் நினைவில் வைத்துக் கொள்ள முடியாது..''

''மாலினி..''

''சும்மா கத்தாதே. போ.. போய் படுத்துத் தூங்கும் வழியைப் பாரு. பேயைப் பற்றி நீதான் பேசுவாய். வேறு யார் பேசுவாங்க..''

மாலினி அசட்டையாக ஸ்வேதாவைப் பார்த்தபடி அவளது அறைக்குள் போய்விட.. ஸ்வேதா கொதித்துக் கொண்டிருந்த மனதை குளிரவைக்கும் வகை அறியாமல் கையைப் பிசைந்து கொண்டாள்.

'சை.. இவளை மட்டும் என்னால் மட்டம் தட்டவே முடியலையே. எப்போது வாயைத் திறந்தாலும் என் வாயை மூடவைத்துவிட்டு அசால்ட்டாக போய் விடுகிறாளே...'

பால்கனியில் வந்த காற்றுகூட ஸ்வேதாவின் மன வெப்பத்தை தணிக்க முடியவில்லை. கோபத்துடன் திரும்பிய ஸ்வேதா, மாடிப்படியில் இறங்கி வந்து கொண்டிருந்த பிரபாகரனைக் கண்டதும் அதிர்ந்து போய் அப்படியே நின்றுவிட்டாள். அவளது கண்கள் நிலைக்குத்தி விட்டன.

விளக்கு எரியாத பால்கனி இருளில் அவளது உருவம் கண்களுக்குத் தெரியாததால்.. பிரபாகரன் தன்னை யாரும் கவனிக்கவில்லை என்ற எண்ணத்துடன் அவனது அறைக்குப் போய்விட்டான்.

ஸ்வேதா அப்படியே இருளோடு இருளாக கலந்து சிலையாய் சமைந்து நின்றுவிட்டாள்.

அவளால் இன்னுமொரு தோல்வியைத் தாங்கிக் கொள்ளவே முடியவில்லை. பணம் படைத்தவள்.. அந்தஸ்து அதிகமுள்ள குடும்பத்தில் பிறந்தவள்.. பரம்பரையாய் வரும் பெயரையும் புகழையும் கொண்டவள்.. அவளை விட்டுவிட்டு அன்றாடங்காய்ச்சியின் குடும்பத்தில் பிறந்த பெண்ணை கருணாகரன் திருமணம் செய்து கொண்டான்.

இன்று அதே வழியில் மாதச் சம்பளம் வாங்கும் பெண்ணின் பின்னால் பிரபாகரனும் போய்விட்டானா?

காத்திருந்து காத்திருந்து காலங்கள் போனதுதான் அவள் கண்ட பலனா?

தினகரனின் மீது என்றுமே ஸ்வேதாவிற்கு நம்பிக்கை இருந்ததில்லை. அவன் ஓர் உல்லாசி. காதல் மன்னன். கல்லூரிக் காலத்திலேயே வாரம் ஒரு காதலியுடன் ஊரைச் சுற்றுவான்.

அவனாவது ஸ்வேதாவைத் திரும்பிப் பார்ப்பதாவது. அவனைத் தன் வலையில் சிக்க வைக்க முடியாதென்று ஸ்வேதாவிற்கு மிக நன்றாகத் தெரியும். எதற்கும் இருக்கட்டுமென்றுதான் அவள் அவ்வப்போது காதல் கணைகளை தினகரனின் மீது வீசிக் கொண்டிருந்தாள்.

ஊரையே வலம் வந்த அந்த உல்லாசி.. இவளைத் திரும்பிப் பார்க்காமல் போனதுதான் கொடுமை. அப்படி அவன் வெறுமனேயேவாவது பழக முயன்றிருந்தால்... அதை வைத்து அவனை மடக்கிவிடலாம் என்று திட்டம் போட்டு வைத்திருந்தாள் ஸ்வேதா..



'அத்தை.. அத்தை.. உங்களை நம்பித்தானே என் அப்பா என்னை இங்கே விட்டுவிட்டுப் போனார்? உங்கள் மகனை நம்பித்தானே நானும் அவர் கூடப் பழகினேன். காதலிக்கிறேன் என்று சொல்லி என் மனதில் ஆசையை வளர்த்துவிட்டு இப்போது கை கழுவிவிடப் பார்க்கிறாரே அத்தை. இதற்கு ஒரு நியாயத்தை நீங்கள்தான் சொல்ல வேண்டும். கோட்டையூர் ஜமீன்தார் பெற்ற குலக்கொழுந்து இப்படிச் செய்யலாமா..' என்றெல்லாம் நியாயம் கேட்க.. பக்கம் பக்கமாய் வசனங்களை எழுதி மனப்பாடம்கூட செய்து வைத்திருந்தாள்.

ஆனால் பாவம்.. தினகரன் அவளுக்கு அந்த வசனங்களை ஒப்பிக்கும் வாய்ப்பைத் தரவேயில்லை.

அது என்னவோ.. அவனுக்கு அவளைக் கண்டாலே ஆகாமல் போய்விட்டது. அது எதனால் என்பதைக் கண்டுபிடித்து நிவர்த்தி பண்ண ஸ்வேதா ஆனவரைக்கும் முயன்று பார்த்தாள். அவன் அவளைக் கிட்டே நெருங்கவிட்டால் தானே அவளால் காரணத்தைக் கண்டுபிடிக்க முடியும்? அவன்தான் அவளைக் கண்டதுமே எட்டடிக்கு நகர்ந்து தாவிப் போய்விடுவானே.

அந்தக் காரணத்தினாலேயே பிரபாகரனை மலை போல் நம்பிக் கொண்டிருந்தாள் ஸ்வேதா.

தனக்கு முன்னால் தம்பிக்குத் திருமணம் செய்துவிட்ட பிரபாகரனை அந்தக் காரணத்தை நினைவுபடுத்தியே திருமணம் செய்து கொள்ளும் தீவிர முயற்சியில் இருந்தாள் அவள்.

''பாவம் எங்க பெரியத்தான்.. தியாகி. குடும்பத்துக்காக உழைத்து உழைத்துக் கல்யாணமே வேண்டாமுன்னு இருக்கிறாரு. எல்லோரும் அவரை மறந்துவிட்டு சொகுசாய்

வாழலாம். சொந்த மாமன் மகள்.. என்னால் அப்படி இருக்க முடியுமா? நான் ஒரு நாளும் என் பெரியத்தானை கைவிட மாட்டேன்..''

அந்த வீட்டிற்கு வரும் உறவினர்களிடம் அவள் இப்படியே பேசிவைக்க.. விஷயம் நர்மதாவின் காதுக்குப் போய்விட்டது.

அன்று அவள் எல்லோரின் முன்னிலையிலும் ஸ்வேதாவை பிடிபிடியென்று பிடித்துவிட்டாள்.

''என் மகனை பாவம்னு சொல்கிற அளவுக்கு அவனை விட நீ நன்றாய் வாழ்கிறாயா.. என் மகன் ஊர்.. உலகத்தையே கைதூக்கி விடுகிறவன். அவனைக் கைவிடாமல் இருக்க நீ யார்? இந்த வீட்டில் இருந்து கொண்டு இது போன்ற பேச்சுகளை நீ பேசுவதாக இருந்தால் இனிமேல் இங்கே இருக்காதே. உன் ஊருக்கு மூட்டையைக் கட்டு. பிரபாகரனுக்குப் பெண்ணைக் கொடுக்க நீ நானுன்னு போட்டி போட்டுக் கொண்டு சொந்தக்காரங்க வரிசையில நிற்கிறாங்க. அவனுக்கு பிடித்த பெண்ணை அவன்தான் கை காட்டணுமுன்னு நான் காத்திருக்கிறேன். இதில நீ புதுசாய் கதை பரப்பிக்கிட்டு இருக்கிறாயா? இனிமேல் இப்படிப்பட்ட பேச்சுகளை நீ பேசினேன்னு தெரிந்தது.. தொலைத்து விடுவேன். ஜாக்கிரதை..''

நர்மதாவின் காளி அவதாரத்தை அன்று தரிசிக்க நேர்ந்த ஸ்வேதா, நடுநடுங்கிப் போய் தன் அணுகு முறையை மாற்றிக் கொண்டு விட்டாள்.

''என் அத்தையின் வீட்டில் வாழ எனக்கில்லாத உரிமையா?''

''என் அத்தான்கள்தான் என் உயிர்..''

''எனக்கு பெரியத்தானை ரொம்ப பிடிக்கும்..''



''தினா அத்தானின் மேல் எனக்குப் பிரியம் அதிகம்..''

''அத்தை.. நம் வீட்டுத் தோட்டத்தில் ரோஜா மலர்ந்திருக்கு..''

''நம்ம கார் எங்கே அத்தை?''

''பொன்னி.. எங்க வீட்டில் வேலை செய்வதாக இருந்தால் சுறுசுறுப்பா இருக்கணும்..''

''செந்தாமரை.. ஏன் பாத்திரத்தை டொம்முன்னு வைக்கிற.. இது எங்க குடும்பத்திலே பரம்பரையாய் வரும் பாத்திரம்..''

''அன்னபூரணி.. எங்க வீட்டு மனுஷங்களுக்கு தனித் தனி ருசி இருக்கும். என்கிட்ட கேட்டுட்டு சமையலை ஆரம்பி...''

''பரந்தாமன்.. இப்படியா காரை அழுக்காக வைத்து இருப்பது.. தெருவில் போனால் எங்க வீட்டுக் கார் தனியாக தெரிய வேண்டாமா?''

''முனுசாமி.. எங்க வீட்டுக்குள்ள எப்படிப் பார்த்துப் பார்த்து பராமரிக்கிறோமோ.. அதைப் போல தோட்டத்தையும் பராமரிக்கணும்னு நினைப்போம்.. எங்க தோட்டத்துக்குள்ள இவ்வளவு புல்லா? முதலில் களையெடுங்க..''

இப்படி நர்மதாவின் உறவைப் பயன்படுத்தி உரிமை கொண்டாடுபவளிடம் குற்றம் கண்டுபிடிக்க நர்மதாவினாலேயே முடியவில்லை.

அவளது அலட்டலைத் தாங்க முடியாமல் தலையைப் பிடித்துக் கொண்டு.. 'அடக்கிவாசி..' என்பதைத் தவிர அவளால் வேறு எதையும் சொல்ல முடியவில்லை.

ஆனால்.. என்னதான் வாய்க்கு வாய்.. 'எங்க வீடு.. எங்க குடும்பம்.. எங்க பொருள்கள்.. எங்க தோட்டம்.. எங்க

கார்..' என்று சொன்னாலும்.. நர்மதா முதல் வீட்டு வேலையாள்கள் வரை அதை ஒரு பொருட்டாகவே எடுத்துக் கொள்ளாமல் அலட்சியம் செய்ததைத்தான் ஸ்வேதாவினால் தாங்கிக் கொள்ள முடியவில்லை.

'இது எங்க வீடு..' என்று அவள் ஆரம்பித்தாலே.. வேலையாள்கள் நமட்டுச் சிரிப்பைச் சிரித்து ஸ்வேதாவிற்கு நெஞ்சு வலியை வர வைத்தார்கள்.

'இந்தம்மா காமெடி பீஸ்..' என்று அவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்கிறார்களோ என்ற சந்தேகம் ஸ்வேதாவிற்கு நீண்ட நாள்களாகவே உண்டு.

வேலையாள்களை அழைக்க நினைத்து சசிரேகா லேசாக வாயைத் திறந்தாலே...

''என்னங்கம்மா..'' என்று அவளருகே போய் கேட்கும் வேலையாள்கள்.. ஸ்வேதா கரடியாய் கத்தி அழைத்தாலும் காதில் விழாததைப் போன்ற பாவனையுடன் ஏன் நகர்ந்து விடுகிறார்கள் என்பது இதுநாள் வரை ஸ்வேதாவிற்கு புரியாத புதிராகவே இருந்தது.

மதிப்பும் மரியாதையும் தானே வர வேண்டும். அதைக் கேட்டு வாங்கக் கூடாது என்பதை அவள் அறியாமல் போனாள்.

அன்பும் பாசமும் தானாக ஒருவரின் மனதில் சுரக்க வேண்டும். வெறும் உறவு முறையை மட்டும் வைத்து அவை வந்துவிடாது என்பதும் அவளுக்குத் தெரியாமலே இருந்தது.

கட்டாயப்படுத்தி காதலை வரவைக்க முடியாது. பூவொன்று தானாக மலர்வதைப் போல காதலும் தானாகவே மலர வேண்டும். அப்படி மலர்ந்தால்தான் அது காதல். மற்றதற்கு பெயரே வேறு என்பதையும் யாரும் அவளுக்கு சொல்லியிருக்கவில்லை.






*இனமென்று விளங்காத உணர்வை..*
*நீ என்னுள்ளே விதைத்த பொழுதை*
*என்னவென்று நான் சொல்ல..?*

கண்முன்னே பிரபாகரனின் காதல் பார்வை மாலினியின் மேல் படிந்துவிட்ட நிகழ்வை ஏற்றுக்கொள்ள மறுத்து.. ஸ்வேதா பால்கனியின் இருளிலேயே மறைந்து அமர்ந்து விட்டாள்.

அவளுக்கு பிரபாகரனின் மீது ஒருபோதும் காதல் இருந்ததில்லை. நர்மதாவின் மூன்று மகன்களில் ஒருவனை வளைத்துப் போட்டுக் கொள்ள வேண்டும் என்று மட்டுமே மாணிக்கவாசகம் அவளுக்குப் போதித்திருந்தார்.

அது எவன் என்ற முடிவை எடுக்கும் உரிமையை ஸ்வேதாவிற்கு அவர் கொடுத்திருந்தார்.

ஸ்வேதா யோசித்துப் பார்த்தாள். தினகரனுக்கும் அவளுக்கும் சம வயது. பிரபாகரனைப் பார்த்தாலே அவளுக்கு பயமாக இருக்கும். அவன் மற்றவர்களை அதட்டும்போது இங்கே ஸ்வேதாவின் அடிவயிறு கலங்கி விடும். அதனால் அவன் பக்கமே முதலில் அவள் பார்வையைத் திருப்பவில்லை. அவளைவிட மூத்தவனாக தினகரனைப் போல பெண்களை அதிகமாக ரசிக்கும் ரசிகனாக இல்லாமல் கண்ணியவானாக பிரபாகரனைப் போல அதட்டல் இல்லாமல் அமைதியானவனாக இருந்த கருணாகரனை வளைத்துப் போட முடிவு செய்தாள்.

முடிவை அவள் செயல்படுத்தும் முன்னாலேயே கருணாகரனுக்கும் சசிரேகாவிற்கும் திருமணம் முடிவாகி விட்டது.

அவளுக்கென்ன.. கருணாகரனின் மீது காவியக் காதலா இருந்தது.. அதனால்.. உடனே தன் பார்வையின் போக்கை மாற்றிக் கொண்டு தினகரனைக் காதல் பார்வை பார்க்க ஆரம்பித்தாள்.

அதற்கு முன்னாலாவது உறவுக்காரி என்று அவளிடம் முகம் கொடுத்துப் பேசிக் கொண்டிருந்த தினகரன்.. அவளது காதல் பார்வையைக் கண்டதும், விளக்கெண் ணெயைக் குடித்தவன் போல முகத்தை சுளிக்க ஆரம்பித்து விட்டான். அவளைத் தூரத்தில் கண்டாலே..

'எஸ்கேப்..' என்று கூவிக்கொண்டு ஓடிவிடும்படி பாதிப்புக்கு ஆளாகிவிட்டான்.

வாழ்நாள் பூராவும் நடுங்கிக் கொண்டு இருந்தாலும் பரவாயில்லை.. பிரபாகரனை கணக்கு பண்ணினால்தான் தனது எண்ணம் நிறைவேறும் என்று ஸ்வேதா மூளையைக் கசக்கி யோசித்துக் கொண்டிருக்க.. அவனையும் சத்த மில்லாமல் கணக்குப் பண்ணிக் கொண்டுவிட்ட அந்த சென்னை சிங்காரி மாலினியை என்ன செய்தால் தகும் என்ற ஆவேசம் அவளுக்குள் உற்பத்தி ஆனது.

அவளே நொந்து நூலாகிக் கொண்டிருக்கும்போது.. பவித்ரா ஹாலுக்குள் சுற்றுமுற்றும் பார்த்தபடி வந்து சேர..

'இவள் பின்னால் யார் வரப் போகிறாங்களோ...' என்று அந்தக் காட்சியைக் காண மனதை திடப்படுத்திக் கொண்டு உற்றுப் பார்த்தாள்.

''என்ன பவித்ரா.. யாரைத் தேடுகிற?'' என்று கேட்டபடி அங்கே வந்து நின்றான் தினகரன்.

கடைசியில் தினகரனை பவித்ரா கணக்குப் பண்ணி விட்டாளா.. அது எப்படி.. கணக்குப் பண்ணுவதில் கைதேர்ந்த ஸ்வேதா தோற்றுப் போக.. கணக்கைப் பற்றிய அரிச்சுவடிகூடத் தெரியாத 'மக்கு மாலினி'யும்.. 'பேக்கு பவித்ரா'வும் வெற்றி பெற்றுக் கொண்டிருக்கிறார்கள்



என்று மண்டையை உடைக்காத குறையாய் யோசித்தாள் ஸ்வேதா.

தினகரனைக் கண்டதும் பவித்ராவின் பார்வை நாணத்துடன் தரையில் படிவதையும் அவளது உடலில் ஒரு பரபரப்பு தோன்றுவதையும் ஸ்வேதா பார்த்துக் கொண் டிருந்தாள்.

'என்னமாய் ஜாலம் பண்ணுகிறா.. ஜாலக்காரி..'' பெண்மையின் இயல்பான குணங்களை ஜாலம் என்று தான் அவளால் கணிக்க முடிந்தது.

''அது வந்து.. வந்து...'' பவித்ரா தடுமாற..

''அதுதான் வந்துவிட்டாயே.. என்னன்னு சொல்லு..'' என்று உல்லாசமாக நகைத்தான் தினகரன்.

''நான்.. நான்..''

''நீ.. நீ?''

''நான் வந்து.. மாலினியை வந்து.. பார்க்க வந்தேன்..''

ஒரு வழியாக அவள் சொல்லி முடிக்க.. அவளது வெட்கத்தை ஒருவித ஆவலுடனும்.. ஆசையுடனும் ரசித்துப் பார்த்தான் தினகரன்.

அவனுக்கு எப்போதுமே பவித்ராவிடம் தென்படும் இந்த நாணம் மிகவும் பிடிக்கும்.

''ஏன் இப்படி வெட்கப்படுகிறாய் பவித்ரா.. என் முகத்தைப் பார்த்துத்தான் பேசேன்..''

அவன் தூண்ட.... பார்வையை உயர்த்தி அவன் முகம் பார்க்க முயன்று முடியாதவளாக தோல்வியுடன் பார்வையைத் தாழ்த்திக் கொண்டாள் பவித்ரா.

''என்ன ஆச்சு?''

''என்னால் முடியலை..''

''ஏன்?''

''தெரியலை..''

''சரியாப் போச்சு போ.. விட்டால் இஞ்சி இடுப்பழ கான்னு பாடிட்டு.. பாட்டே வரலை.. காத்துதான் வருதுன்னு சொல்லிவிடுவ போல இருக்கே..''

தினகரன் பலமாகச் சிரிக்க.. வெட்கத்துடன் அவனை கள்ளப்பார்வை பார்த்தாள் பவித்ரா. அவளது பார்வையைக் கண்டதும் சிரிப்பு குறையாதவளாக புருவங்களை உயர்த் தினான் அவன்.

''என்ன?''

''ஒன்றுமில்லை..''

''சும்மா சொல்லு..''

அவன் அவளை வற்புறுத்திக் கொண்டிருந்தபோது..

''நான் சொல்லவா?'' என்று கேட்டபடி அங்கே வந்தாள் மாலினி.

மாலினியைக் கண்டதும் பவித்ராவின் முகமும் தினகரனின் முகமும் ஒன்றுபோல மலர்வதைக் கண்ட ஸ்வேதா..

'இவள் பாலுக்கும் காவல்.. பூனைக்கும் தோழனா..'

அது நேரம் வரை பவித்ராவின் வெட்கத்தை ரசித்துக் கொண்டிருந்த தினகரனின் பார்வை வினாடிப் பொழு திற்குள் விலகி.. மாலினியை ரசிக்க ஆரம்பிப்பதை கவனித்த ஸ்வேதா...

'அடப்பாவி.. இவன் என்னைவிட பெரிய எத்தனாக இருப்பான் போல இருக்கே. நொடிக்கொரு தரம் சைட்டை மாற்றுகிறானே. இவன் முன்னால் நான் எம்மாத்திரம்..' என்று எண்ணிக் கொண்டாள்.

''ஏன் பேசாமல் நிற்கிறீர்கள் மாலினி.. உங்கள் பேச்சைக் கேட்க ஆவலுடன் காத்திருக்கும் என்னை ஏமாற்றி விடாதீங்க. பேசுங்க மாலினி.. பேசுங்க..''



''என்ன பவித்ரா! உங்க சின்ன அத்தானின் டிரஸ் ஸைப் பார்த்தா மாடர்ன் ஆள் போல இருக்கு. ஆனா, இவர் பேச்சைப் பார்த்தா அப்படித் தெரியலையே..''

''ஏங்க.. என் பேச்சுக்கு என்ன குறை?''

''நீங்க ஜெமினி கணேசன் காலத்தில் பிறக்கலை. அதுதான் குறை..''

''என்னவோ போங்க... கடைசியில் என்னைக் காதல் மன்னனாக்கிட்டீங்க..''

''இப்பச் சொன்னீங்க பாருங்க.. இதுதான் நூற்றுக்கு நூறு உண்மை..''

தினகரன், மாலினியின் பேச்சை ரசித்துச் சிரித்தான். அவன் கண்களில் பாராட்டு தெரிந்தது.

''பவித்ரா ஏன் அப்படிப் பார்த்தாள்னு சொல்லவா?''

''சொல்லுங்களேன்..''

''நீங்க இஞ்சி இடுப்பழகான்னு உங்களை நீங்களே வர்ணிச்சுக்கிட்டீங்க இல்லையா.. அது உண்மையான்னு உங்க இடுப்பு சைஸை ஆராய்ச்சியாகப் பார்த்தாள். இல் லையா பவி..''

''மாலினி.. ப்ளீஸ்..''

பவித்ராவின் முகம் குங்குமமாய் சிவந்துவிட.. தினகரனின் பார்வை மீண்டும் அவள் மேல் படிந்தது. அவனின் பார்வை மனதிற்குள் ரகசிய சந்தோஷத்தை உண்டாக்கினாலும்.. அதை வெளிக்காட்டிக் கொள்ள முடியாத தவிப்புடன் பவித்ரா, மாலினியின் முதுகிற்குப் பின்னால் மறைந்து கொண்டாள்.

''தூங்கப் போகாமல் இங்கே என்ன மாநாடு போட்டுக் கிட்டு இருக்கீங்க..'' நர்மதாவின் குரல் காற்றோடு கலந்து வர..

''குட்நைட் மாலினி..'' என்றபடி பவித்ரா சிட்டாக பறந்துவிட்டாள்.

மாலினி அங்கே நின்றுகொண்டிருக்கும்போது நகர மனமில்லாமல் தினகரன் நிற்க.. பவித்ராவின் மனதை அவனிடம் தெரியப்படுத்திவிட வேண்டும் என்ற எண்ணத் துடன் மாலினியும் தயங்கி நின்றாள்.

''தினா.. உன்னிடம் ஒன்று கேட்க வேண்டுமே..'' பிரபாகரன் கையில் செல்போனோடு அவனது அறையி லிருந்து வெளிப்பட்டான்.

''என்ன அண்ணா..''

மாலினி அங்கு நிற்பதை மறந்தவனாக தினகரன்.. பிரபாகரனின் அருகில் செல்ல.. அவனிடம் தீவிரமாய் எதையோ விவாதிக்க ஆரம்பித்த பிரபாகரன், மாலினியை அங்கு கண்டதும் புருவங்களை உயர்த்தினான்.

''அவ்வளவுதான் தினா.. இந்த டீடெயில்களை எடுத்து வை. நாம் காலையில் பேசிக் கொள்ளலாம்..'' என்று இளைய சகோதரனை அனுப்பிவிட்டு கடுமையான முகத் துடன் மாலினியின் அருகில் வந்தான் பிரபாகரன்.

அவனுடைய முகத்தைப் பார்க்கவே மாலினிக்கு பயமாக இருந்தது. சற்று முன்னால்.. அவனது அனைத்து அடையாளங்களையும் மறந்து அவளது மடியில் கிடந்த வனா அவன் என்று மனதிற்குள் நினைத்துக் கொண்டாள் மாலினி.

''இங்கே என்ன செய்கிறாய்?'' அவன் முகம் சுளித்தான்.

''பேசிக் கொண்டிருந்தேன்..'' அவள் அமைதியாகச் சொன்னாள்.

''யாருடன்?'' கேள்வி கடுமையாக வெளிப்பட்டது..

''பவித்ராவுடன்..'' பொறுமையாக பதில் சொன்னாள் மாலினி.

அவளுக்குத் தெரியும்.. இந்த பதிலைக் கேட்டவுடன் அவனது கடுமை இருந்த இடம் தெரியாமல் ஓடி மறைந்து விடும் என்று.



அவள் நினைத்ததுதான் நடந்தது.

''பவித்ராவுடனா?'' என்று ஆச்சரியமாகக் கேட்டான் பிரபாகரன்.

''ஆமாம்...''

''இங்கே தினகரனும் நீயும்தானே நின்று பேசிக் கொண்டிருந்தீர்கள்..''

''நான் வரும்போது பவித்ராவும் தினகரனும் நின்று பேசிக் கொண்டிருந்தார்கள்...''

''அவள் எங்கே?''

''அத்தை தூங்கச் சொல்லி அதட்டியவுடன் இப்போது தான் ஓடினாள்..''

''நீ ஏன் போகவில்லை..''

''நீங்கள் வந்தால் என்னால் உடனே எப்படிப் போக முடியுமாம்..''

பவித்ராவின் காதலைப் பற்றி அந்த நேரத்தில் மாலினி, பிரபாகரனிடம் சொல்லியிருக்கலாம்.. அவளின் காதலை தினகரனிடம் தெரியப்படுத்ததான் அவள் நின்றி ருந்ததாக கூறியிருந்திருக்கலாம்.

அவள் அந்த இரண்டையும் செய்யாமல் விட்டு விட்டாள். பவித்ரா.. மாலினியை நம்பி அவளது மனதி லிருந்த காதலைச் சொல்லியிருக்கும்போது அதை தன் காதலனிடம்கூட சொல்லிவிடக்கூடாது என்ற நாகரிகத்தை கடைப்பிடித்தாள் மாலினி.

அன்று அவள் பவித்ராவின் காதலை பிரபாகரனிடம் சொல்லாமல் மறைத்த செயலுக்காக பின்னாளில் வருத் தப்பட வேண்டி வரும் என்பதை அப்போது அவள் அறி யாமல் போனாள்.

ஒருவேளை அறிந்திருந்தாலும் மாலினி.. பவித்ரா வின் காதலை வெளிப்படுத்தியிருக்க மாட்டாள். இன் னொருவரின் அந்தரங்கத்தை பகிரங்கப்படுத்தினால்தான்

தனக்கு வாழ்க்கை கிடைக்கும் என்ற நிலை வருமானால்.. அப்படிப்பட்ட வாழ்க்கையே வேண்டாம் என்று சொல்லக் கூடிய பெண் மாலினி.

அதனால் அவள் அழகாக புன்னகைத்து தன் காதலனை வசீகரித்தாள். அவனும் அவளின் அந்த வார்த்தைகளிலும் பிரத்யேகப் புன்னகையிலும் மயங்கிப் போனான்.

''போகாதே.. என்னுடன் வந்துவிடு..''

''எங்கே...''

''என் ரூமுக்குத்தான்..''

''அதோ அத்தை வருகிறாங்க..''

''குட்நைட் கண்ணம்மா..''

வராத நர்மதாவை வருவதாகக் கூறி பிரபாகரனை சமாளித்துவிட்ட மாலினி.. புன்னகையுடன் அவளது அறைக்குப் போனாள்.. ஸ்வேதா இருளில் இருந்து வெளியே வந்தாள்.

சற்று முன்னால் நடந்த சம்பவங்களில் இருந்து சில விஷயங்கள் அவளுக்குத் தெளிவாகத் தெரிந்தன. அதன் மூலம் செயல்பட வேண்டிய வழியும் அவளுக்கு தெரிந்து விட்டது.

(பாகம் - 2-ல் தொடரும்)

